மன்யந்தே-அங்கிரஸ் என்ற பெயருடையவர் அது அவரைத் தான் முக்கியமாகக் குறிக்கும் எனக் கருதுகின்றனர். யத்—எதனுல், அங்காஞம்-எல்லோருடைய தேகங்களேயும்,ரஸ:-நியமனம் செய்பவரோ, தேன-அதனுல்||

1-2-11

तँह बृहस्पतिः उद्गीथं उपासांचक्रे। एत मु एव बृहस्पतिं मन्यन्ते । वाक् हि बृहती । तस्याः एष पतिः । तेन ॥११॥

தகும்ஹ ப்ருஹஸ்பதி: உத்கீதம் உபாஸாம் சக்ரே। ஏதமு ஏவ ப்ருஹஸ்பதிம் மன்யந்தே। வாக் ஹி ப்ருஹதீ। தஸ்யா: ஏஷ: பதி:। தேன ||11||

தகும்—தம் = தஸ்மின், அந்த முக்யப்ராணரிடம், உத்கீதம்-விஷ்ணுவை, ப்ருஹஸ்பதி:- ப்ருஹஸ்பதி என்ற ரிஷி, உபாஸகம் சக்ரே-உபாஸித்தார் ஹி-பிரசித்தம். (அவரருளால் அவரது பெயரையும் பெற்ருர்)எவ்வாறெனில்,ஏதமு ஏவ-இந்த முக்யப்ராணரையே, ஞானிகள், ப்ருஹஸ்பதிம் மன்யந்தே - ப்ருஹஸ்பதி என்ற பெயருடையவர். அது அவரைத்தான் முக்கியமாகக் குறிக்கும். எனக் கருதுகின்றனர். ஹி-எதனுல், வாக்-பாரதி (ஸரஸ்வதி) ப்ருஹதீ-மிகப் பெரியவள். ஏஷ:- இந்த முக்யப்ராணர், தஸ்யா: பதி:- அவளுடைய கணவரோ, தேன-அதனுல் ||

1-2-12

तँह अयास्यः उद्गीथं उपासांचक्रे। एत मु एव अयास्यं मन्यन्ते । आस्यात् यत् अयते । तेन ॥१२॥

தகும் ஹ அயாஸ்ய: உத்கீதம் உபாஸாம் சக்ரே। ஏதமுஏவ அயாஸ்யம் மன்யந்தே। ஆஸ்யாத் யத் அயதே। தேன ||12||

தகும்=தம்=தஸ்மின் - அந்த முக்யப்ராணரிடம், உத்கீதம் - விஷ்ணுவை, அயாஸ்ய:- அயாஸ்யர் என்ற ரிஷி, உபாஸாம் சக்ரே-உபாஸித்தார். ஹி-பிரசித்தம். (அவர் அருளால் அவரது பெயரையும்அடைந்தார்)எவ்வாறெனில் ஏதமுஏவ-இந்த முக்யப்ராணரையே,ஞானிகள்,அயாஸ்யம் மன்யந்தே - அயாஸ்யர் என்ற பெயரையுடையவர், அது அவரைத்தான் முக்கியமாகக் கூறும் என, மன்யந்தே-கருதுகின்றனர். யத்-எதனுல் ஆஸ்யாத்-வாயிலிருந்து,- அயதே- வெளியேயும், உள்ளேயும் (மூச்சாக) செல்கிருரோ, தேன- அதனுல் ||

1-2-13

तँ ह बको दाल्भ्यो विदांचकार । स ह नैमिशीयानां उद्गाता बभूव । स ह स्म एभ्यः कामान् आगायति ॥१३

தகும் ஹ பகோ தால்ப்ய: விதாம்சகார | ஸ ஹ நைமிசீயாஞும் உத்காதா பபூவ | ஸ ஹஸ்ம ஏப்ய: காமான் ஆகாயதி ||13||

தகும்=தம்–அந்த முக்யப்ராணரை,தால்ப்ய:- தல்பரிஷியின் புத்திரரான, பக:- பகர் என்ற ரிஷி, விதாம்சகார- அறிந்தார். ஹ-பிரசித்தம். ஸ:- அவர், நைமிசீயாஞும்- நைமிசாரண்ய வாஸிகளான ரிஷிகளின், உத்காதா - அப் பெயர்கொண்ட ஸாமவேதி ரித்விக்காக, பபூவ-இருந்தார். ஹ - பிரசித்தம். ஸ:- அவர், ஏப்ய:- இந்த ரிஷிகளின் பொருட்டு, காமான்-அவர்கள் விரும்பியவற்றை,ஆகாயதி தன் கானத்திஞல் அடைவிப்பவராக இருக்கிருர். ஸ்ம- பிரசித்தம் அல்லது ஆச்சர்யம் ||

1-2-14

आगाता ह वै कामानां भवति । य एतत् एवं विद्वान् अक्षरं उद्गीथं उपास्ते ॥ इति अध्यात्मम् ॥१४॥

ஆகாதா ஹவை காமாணும் பவதி। ய ஏதத் ஏவம் வித்வான், அக்ஷரம் உத்கீதம் உபாஸ்தே॥ இதி அத்யாத்மம்॥

ய:- யார், ஏவம்—இம்மாதிரி, ஏதத்-இந்த முக்யப்ராணரின் மகிமையையும், வித்வான்-அறிந்து. அக்ஷரம். நான்கு வித நாசமற்ற, உத்கீதம்-விஷ்ணுவை, உபாஸ்தே-உபாஸிக்கிருனே, (ஸ:-அவன்), காமாணும்-விரும்புகிறதையெல்லாம் ஆகாதா – கானத்தினுல் அடைவிப்பவராக, பவதி - இருக்கிருன். ஹவை-இது மிகப் பிரசித்தம். இதி – இவ்வாறு, அத்யாத்மம்-நம் தேகத்திலுள்ள முக்யப்ராணர் முதலியோரிடமுள்ள உத்கீத உபாஸனையின் மகிமை நிருபிக்கப்பட்டது

1–2–14 முற்றிற்று.

அத்தியாயம் 1 கண்டம் 3 மந்திரங்கள் 10

अथाधिदैवतम् ।

1–3–1 அதாதிதைவதம்। அத-பிறகு, அதிதைவதம்—தேவர்களிடமுள்ள உத்கீதோபாஸனை கூறப்படுகிறது.

य एवासौ तपति। तमुद्गीथमुपासीत। उद्यन्वा एषः प्रजाभ्यः उद्गायति। उद्यन् तमोभयं अपहन्ति। अपहन्ता ह वै उभयस्य तमसः भवति। य एवं वेद ॥१॥

ய ஏவாஸௌ தபதி। தமுத்கீதம் உபாஸீத। உத்யன் வா ஏஷ: ப்ரஜாப்ய: உத்காயதி। உத்யன் தமோபயம் அபஹந்தி। அபஹந்தா ஹவை உபயஸ்ய தமஸ: பவதி। ய ஏவம் வேத ॥1॥

ய ஏவ அஸௌ-இந்த சூரியமண்டலத்திலுள்ள எந்த முக்ய ப்ராணன், தபதி-பிரகாசிக்கிறதோ, தம்=தஸ்மின்-அவனிடமுள்ள, உத்கீதம்-விஷ்ணுவை, உபாஸீத-உபாஸிக்கவேண்டும். ஏஷ:-இவர், (உதய அஸ்தமனங்களில்லாதவராயினும்) உத்யன் – மண்டலத்தினால் உதயமாகி, ப்ரஜாப்ய:--மக்களுக்காக, உத்காயதி--விஷ்ணுவைப்பற்றி கானம் செய்கிறார். உத்யன்--மண்டலத்தின் மூலம் உதயமாகி தம உபயம்–வெளியேயும் உள்ளேயுமுள்ள (அஜ்ஞானம்)இருவித இருட்டுகளை, அபஹந்தி-போக்குகிறார். வெளிச்சத்தையும் ஞானத்தையும் தருகிறார். ய:–யார், ஏவம் இம்மாதிரி, வேத–அறிகிறானோ, அவன், உபயஸ்யதமஸ:–இருவித இருட்டுகளையும், அபஹந்தா-போக்குபவனாக, பவதி ஆகிறான். ஹவை இது மிகப்ரஸித்தமானது.

1-3-2 தேகத்திலுள்ள உத்கீதன் உபாஸனே, சூர்ய மண்டலத்திலுள்ள உத்கீதோபாஸனே-இந்த இரண்டில் எது உயர்ந்தது? என்றால் இரண்டும் ஸமமே என்கிறார்.

1-3-2

समान उ एव । अयं च असौ च । उष्णोऽयं उष्णोऽसौ । स्वर इति इमं आचक्षते । प्रत्यास्वर इति अमुं । तस्माद्वै एतं अमुं च उद्गीथ मुपासीत ॥२॥

ஸமான உ ஏவ । அயம் ச, அஸௌ ச । உஷ்ணோ அயம், உஷ்ணோ அஸௌ । ஸ்வர இதி இமம் ஆசக்ஷதே । ப்ரத்யாஸ்வர இதி அமும் । தஸ்மாத்வை, ஏதம் அமும் ச, உத்கீதமுபாஸீத ॥2॥

அயம்ச-இந்த தேகத்திலுள்ள முக்யப்ராணனும், அஸௌச–அந்த சூரிய மண்டலத்திலுள்ள முக்ய ப்ராணனும், ஸமான: ஏவ-ஸமமானவரே. ஒருவரே. உ-அல்லவா!

எவ்வாறு? அயம்-இந்த தேகத்திலுள்ளவர், உஷ்ண:சூடாக விருப்பவர் (98 4டிகிரி), அஸௌ-அந்த மண்டலத்தி லுள்ளவர், உஷ்ண:-சூடாகவிருப்பவர். இமம்-இவரை, ஸ்வர: இதி-ஸ்வ-ஸ்வதந்திரரான விஷ்ணுவிடம் ரமதே-மகிழ்பவர் என்றும் அமும் - அவரை (ப்ரதி+ஆ+ஸ்வர:) ஆ - நாலாபக்கத்திலும் ப்ரதி - ஒவ்வொருவரும் என்னை நோக்கியுள்ளார். எனக் கூறுவதாலும் ஸ்வர: இதி ஸ்வ= ஸ்வதந்தரரான விஷ்ணுவிடம் ரமதே மகிழ்பவரானதா லும், ப்ரத்யாஸ்வரன். என்றும் - ஆசக்ஷதே - (ஞானிகள்) கூறுவர். தஸ்மாத் - ஆகையால், ஏதம் ஏதஸ்மின் - இந்த தேகத்திலுள்ள முக்ய ப்ராணனிடமுள்ள விஷ்ணுவையும், அமும்=அமுஷ்மின் ச-அந்த சூரிய மண்டலத்திலுள்ள முக்ய ப்ராணனிடமுள்ள விஷ்ணுவையும் உபாஸீத - உபாஸிக்க வேண்டும். வை - பிரசித்தமானது.

1-3-3. முக்யப்ராணர் ஒவ்வொருவரின் தேகத்திலும், ப்ராணன் - அபானன்-வ்யானன்-உதானன் ஸமானன்என்ற 5 ரூபங்களுடன் உள்ளார். அவற்றில் வ்யானனிடமுள்ள உத்கீதோபாஸனையைக் கூறுகிறுர்.

1-3-3

अथ खलु व्यानमेव उद्गीथमुपासीत । यद्वै प्राणिति स प्राणः । यत् अपानिति सो अपानः । अथ यः प्राणापानयोः सन्धिः सव्यानः । यो व्यानः सा वाक् । तस्मात् अप्राणन् अनपानन् वाचं व्याहरति ॥ ३ ॥

அத கலு வ்யானமேவ உத்கீதமுபாஸீத । யத்வை ப்ராணிதி ஸப்ராண: ॥ யத் அபானிதி ஸோ அபான: ॥ அதய- ப்ராணாபானயோ: ஸந்தி: ஸவ்யான: ॥ யோவ்யான: ஸா வாக் । தஸ்மாத் அப்ராணன் அனபானன் வாசம் வ்யாஹரதி॥3 ॥

அத—வேறு உபாஸனையின் ஆரம்பம். கலு-வ்யானன் மூன்று தனிச் சிறப்புகளைப் பெற்றவன். 1. ப்ராணாபானர்களை சந்திக்கும்படி செய்பவன் 2 a. வர்க் b. ரிக் c. ஸாம ஆகிய உத்கீதத்தை நிகழ்த்துபவன். இங்கு முதற்சிறப்பையும் 2 a. சிறப்பையும் கூறி மீதியை 1–3–4, 5ல் கூறுகிறார். வ்யானம்=வ்யானே ஏவ-வ்யானனிடமேயுள்ள, உத்கீதம்-விஷ்ணுவை, உபாஸீத-உபாஸிக்கவேண்டும். (iii) முதல் சிறப்பு:- அத - இப்பொழுது, ய:- யார், விஷ்ணுவால் பிரவேசிக்கப்பட்டு, ப்ராணாபானயோ:-ப்ராணன் அபானன் இருவருடைய, ஸந்தி:— சந்திப்பைச் செய்பவனோ, ஸ:- அவன் வ்யான:—வ்யானனாவான். ப்ராணாபானர்கள் யாவர்? யத்=ய:- யார், ப்ராணிதி—தேகத்தில் மேல்நோக்கிச் செல்கிறானோ, ஸ:ப்ராண:- அவன் ப்ராணன் ஆவான். (ii) யத்= ய:— யார், அபானிதி-கீழ்நோக்கி மலம் முதலியதை வெளியேற்றுகிறானோ, ஸ: அபான:- அவன் அபானன் ஆவான். (iv) 2ம் சிறப்பு:- யோ=ய: வ்யான:- இவனிடம் பிரவேசித்துள்ளவனும், ப்ராணாபானர்களின் சந்திப்பைச் செய்பவனுமான எந்த விஷ்ணுவோ, ஸா=அவன், வாக்-வாசி-வாக்கில் (வாயில்) இருக்கிறான். தஸ்மாத் அதனால் வ்யானனிடமுள்ளவன் வாக்கில் இருப்பதால், அப்ராணன் அனபானன்-ப்ராணாபானர்களைத் தடுத்து, வாசம் அபிவ்யாஹரதி — வாக்கின் செயலை (பேசுவதை) நிகழ்த்துகிறார்.

1-3-4 या वाक् सा ऋक्। तस्मात् अप्राणन् अनपानन् ऋचं अभिव्याहरति। या ऋक् तत्साम। तस्मात् अप्राणन् अनपानन् साम गायति। यत् साम स उद्गीथः। तस्मात् अप्राणन् अनपानन् उद्गायति॥ अतः ॥४॥

யா வாக், ஸா ரிக்। தஸ்மாத் அப்ராணன் அனபானன் ரிசம் அபிவ்யாஹரதி। யா ரிக், தத் ஸாம। தஸ்மாத் அப்ராணன் அனபானன் ஸாம காயதி। யத் ஸாம, ஸ உத்கீத:। தஸ்மாத் அப்ராணன் அனபானன் உத்காயதி॥ அத: ॥4॥

யாவாக்-எந்த வாக்கிலுள்ள வ்யானனே, இவனிடமுள்ள விஷ்ணுவோ, सा ऋक् அவனே ரிக் என்ற மந்திரத்திலு முள்ளவன் (வ்யானன் வாக்குகளிலுள்ள விஷ்ணு) தஸ்மாத்- அதனால், அப்ராணன் அனபானன்-ப்ராணாபானர்களைவிட்டு ரிசம்அபிவ்யாஹரதி-ரிக்குகளைச் சொல்லும்படி தூண்டு கிறார். யாரிக்-எந்த ரிக்கிலுள்ள வ்யானனே, தத்-அவன், ஸாம-ஸாமவேதத்திலுள்ளவனும் ரிக்கிலும் வாக்கிலும் வ்யானனிடமும் உள்ள விஷ்ணுவே தஸ்மாத்-ஆகையால் அப்ராணன் அனபானன்-ப்ராணாபானர்களைவிட்டு, ஸாம காயதி-ஸாமகானம் செய்யும்படி தூண்டுகிறார். யத் ஸாம- எந்த ஸாமத்திலுள்ள வ்யானனே அவனிடமும் வாக்ரிக்கு களிலும் உள்ளவனே, ஸ: உத்கீத:-5 வித ஸாமங்களில் ஒன்றான உத்கீதத்திலுள்ள அப்பெயருள்ள விஷ்ணுவே தஸ்மாத்-ஆகையால் அப்ராணன் அனபானன்-ப்ராணா பானர்களைவிட்டு வ்யானனையே கானம் செய்யும்படி தூண்டுகிறார். அத:-ஆகையால் (வ்யானனிடமே உபா ஸிக்கவேண்டும்.)

1-3-5. இங்கு வ்யானனின் 3ம்சிறப்பைக் கூறுகிறார்.

यानि अन्यानि वीर्यवन्ति कर्माणि । यथा अग्नेः मथनम् । आजेः सरणम् । दृढस्य धनुषः आयमनम् । अप्राणान् अनपानन् । तानि करोति । एतस्य हेतोः व्यान- मेव उद्गीथमुपासीत ॥५॥

யானி அன்யானி வீர்யவந்தி கர்மாணி। யதா அக்னே: மதனம்। ஆஜே: ஸரணம்। த்ருடஸ்ய தனுஷ: ஆயமனம்। அப்ராணன் அனபானன்। தானி கரோதி। ஏதஸ்ய ஹேதோ: வ்யானமேவ உத்கீதம் உபாஸீத ॥5॥

அக்னே: மதனம்-அரணிக்கட்டைகளைக் கடைந்து நெருப்பை உண்டுபண்ணுதல், ஆஜே: ஸரணம்-போருக்குப் போகுதல், த்ருடஸ்ய தனுஷ:-(ஜனகராஜனின் வில்போல்) மிக உறுதியான வில்லை ஆயமனம்-நன்கு வளைத்து நாணேற்றுதல், யதா-இவை போன்ற யானி—எந்த அன்யானி-மற்ற வீர்யவந்தி - பலபரீக்ஷைக்கு உரிய, கர்மாணி - கார்யங்களோ தானி-அவைகளையும், அப்ராணன் அனபானன்-ப்ராணபானர்களை விட்டு, கரோதி—(வ்யானனே வ்யானனால்) செய்விக்கிறுன். ஏதஸ்யஹேதோ:- இந்தக் காரணத்திற்காக, வ்யானம் ஏவ - வ்யானனிடமேயுள்ள, உத்கீதம்—விஷ்ணுவை, உபாஸீத-உபாஸிக்கவேண்டும்.

1–3–6 'உத்கீத', என்ற பதத்திலுள்ள எழுத்துக்களால் கூறப்படும் ப்ராணன் முதலியோரிடமுள்ள பகவானுடைய உபாஸனைகளைக் கூறுகிறுர்.

अथ खलु उद्गीताक्षराणि उपासीत । उत्-गी—थ इति प्राण एव उत् । प्राणेन हि उत्तिष्ठति । वाक् गीः । वाचो हि गिर इत्याचक्षते । अन्नं थम् । अन्ने(न) हीदं सर्वं स्थितं इति ॥६॥

அதகலு உத்கீதாக்ஷராணி உபாஸீத। உத்-கீ-த இதி। ப்ராண: ஏவ உத்। ப்ராணேன ஹி உத்திஷ்டதி। வாக் கீ:। வாசோ ஹி கிர: இத்யாசக்ஷதே! அன்னம் தம்! அன்னே (ன) ஹி இதம் ஸர்வம்ஸ்திதம் இதி ॥6॥

அத-இப்பொழுது, கலு - மிரசித்தமான, உத்கீதாக்ஷராணி-உக்கீத என்ற சொல்லிலுள்ள எழுத்துக்களால் கூறப்படுபவர்களிடமுள்ள விஷ்ணுவை, உபாஸீத - உபாஸிக்க

வேண்டும், அந்த எழுத்துக்கள், உத் - கீ:- த என்பன. ப்ராண: ஏவ-முக்யப்ராணனே, உத் (உயர்ந்தவர்) எனப் படுபவர். ஹி - ஏனெனில், ப்ராணேன — அவராலேயே, உத்திஷ்டதி-உற்பத்தியாகிறது அனைத்தும்.வாக்—ஸரஸ்வதி (பாரதீ) கீ:எனப்படுபவள்(பாடப்படுபவள்) ஹி—ஏனெனில் வாச:- வார்த்தைகளை, கிர: இதி-கீ என்று, ஆசக்ஷதே-கூறுவர். அன்னம் - சாதத்தின் அபிமானியான பிரம்மா, தம் (இருப்பவர்) எனப்படுவார். ஹி - ஏனெனில், இதம் ஸர்வம்-இந்த எல்லா உயிர்களும், அன்னேன-சாதத்தால் ஸ்திதம்-(பிழைத்து) உள்ளது. இதி-இவ்வாறு.

1–3–7

द्यौरेव उत् । अन्तरिक्षं गीः । पृथिवी थं । आदित्य एव उत् । वायुः गीः । अग्निः थं । सामवेद एव उत् । यजुर्वेदो गीः । ऋग्वेदः थं । दुग्धेऽस्मै वाग्दोहम् । योवाचो दोहः । अन्नवान् अन्नादो भवति । य एतानि एवं विद्वान् उद्गीताक्षराणि उपास्ते । उत्—गी—थ इति ॥७॥

த்யௌ: ஏவஉத் । அந்தரிக்ஷம் கீ. । ப்ருதிவீ தம் । ஆதித்ய ஏவ உத் । வாயு: கீ: । அக்னி தம் । ஸாமவேத ஏவ உத் । யஜுர்வேத கீ: । ரிக்வேத: தம் ।
துக்தே அஸ்மை வாக்தோஹம் । யோ வாசோ தோஹ: । அன்னவான் அன்னாதோ பவதி । ய ஏதானி ஏவம் வித்வான் உத்கீதாக்ஷராணி உபாஸ்தே । உத்-கீ-த இதி ॥7॥

த்யௌ: ஏவ-ஸ்வர்க்கலோகஅபிமானி தேவதையே,உத் எனப்படுவான். அந்தரிக்ஷம் கீ:- ஆகாயத்தின் அபிமானியே கீ எனப்படுவான், ப்ருதி வீ தம்-பூமிதேவியே தம் எனப்படு

வாள். ஆதித்ய: ஏவ-சூரியனே உத் எனப்படுவான். வாயு:- ஐந்து பூதங்களில் ஒன்ருன வாயுவே கீ எனப்படுவான். அக்னி: தம்-அக்னிதேவனே தம் எனப்படுவான் ஸாமவேத ஏவ உத்-ஸாமவேதாபிமானியே உத் எனப்படுவான். யஜுர் வேத: கீ:- யஜுர் வேதாபிமானி. கீ எனப்படுவான். ரிக்வேத: தம்-ரிக்வேதாபிமானி தம் எனப்படுவான். ய:- யார், ஏவம்-இம்மாதிரி, 'உத்-கீ-த' இதி என்ற, ஏதானி- அக்ஷரங்களால் கூறப்படும் ப்ர ா ண ன் முதலியவர்களிட முள்ள விஷ்ணுவையே அறிந்து, உபாஸ்தே-உபாஸிக்கிருனே அஸ்மை-இவனுக்கு, அந்த ஹரி, வாசோ=வாச:- வேத வாக்யங்களில் கூறிய, தோஹ:- பலனுன மோக்ஷம், ய:- எதுவோ, தம் வாக் தோஹம்-அந்தப் பலனுன மோக்ஷத்தை துக்தே-கறக்கிருன் (தருகிருன்) அந்த ஞானி அன்னவான்- அன்னத்தை அடைந்தவனுயும், அன்னுத:- அதனைப் புசித்து ஜீர்ணிக்கும் சக்தியுள்ளவனுயும் பவதி-ஆகிருன்.

(1–13–3 பார்க்க)

1–3–8 நம் இஷ்டங்கள் பூர்த்தியாவதற்கு, அதன் காரணத்தி லுள்ள பகவதுபாஸனையைக் கூறுகிருர்.

अथ खलु आशीस्समृद्धिः । उपसरणानि इत्युपासीत । येन साम्ना स्तोष्यन् स्यात् । तत्साम उपधावेत् ॥८॥

அதகலு ஆசீஸ்ஸம்ருத்தி: I உபஸரணனி இத்யு பாஸீத I யேன ஸாம்னு ஸ்தோஷ்யன் ஸ்யாத் I தத் ஸாம உபதாவேத் ॥8॥

அத-இப்பொழுது, கலு-பிரசித்தமான, ஆசீஸ்=ஆசா ஸ்யமானுனும்-நம்மால் விரும்பப்படுபவைகளின், ஸம்ருத்தி: பூர்த்திக்குக் காரணமானது (சொல்லப்படுகிறது) ஸாமம், ரிக், ரிஷி, தேவதை, சந்தஸ் முதலியன அக்காரணங்களாகும். இவை, உபஸரணனி-(உபஸாரயந்தி இஷ்டம்) நம் இஷ்டங் களைப் பூர்த்தி செய்பவை, இதி-என்று, உபாஸீத - அவை

களிடமுள்ள ஸ்ரீஹரியை உபாஸிக்க வேண்டும். ப்ருஹத், ரதந்தரம் என்ற பல ஸாமங்களில், யேன ஸாம்ன - எந்த ஸாம மந்திரத்தினல், ஸ்தோஷ்யன் ஸ்யாத் - துதிப்பானே தத்ஸாம—அந்த ஸாம மந்திரத்தை, உபதாவேத்-எடுத்துக் கொண்டு (அந்த ஸாமத்திலுள்ள ஹரியை ஸர்வோத்தமன் என அறிந்து) உபாஸிக்க வேண்டும், அந்த ஸாமத்தைக் கானம் செய்யவேண்டும்.

1–3–9

यस्यां ऋचि, तां ऋचम् । यदार्षेयं तं ऋषिम् । यां देवतां अभिष्टोष्यन् स्यात् । तां देवताम् । उपधावेत् ॥

யஸ்யாம் ரிசி தாம் ரிசம்। யதார்ஷேயம் தம் ரிஷிம் । யாம் தேவதாம் அபிஷ்டோஷ்யன் ஸ்யாத் । தாம் தேவதாம் । உபதாவேத் ॥

(அந்த ஸாமத்தால் கானம் செய்பவன்) யஸ்யாம் ரிசி—எந்த ரிக்வேத மந்திரத்தில், (அந்த ஸாமம் இணைக்கப் பட்டுள்ளதோ) தாம் ரிசம்- (அந்த ரிக் மந்திரத்திலுள்ள ஹரியைஸர்வோத்தமனாக அறிந்து) அந்த ரிக்குடன்இணைந்த ஸாமத்தைக் கானம் செய்யவேண்டும். யத்-ஆர்ஷேயம்—(அந்தஸாமம்)யாரை மந்த்ரத்ரஷ்டாவாகக் கொண்டதோ தம்—ரிஷிம்-அந்த ரிஷியிடமுள்ள ஹரியை ஸர்வோத்தமன் என்று அறிந்து உபாஸிக்க வேண்டும. அந்த ரிக்கைச் சொல்ல வேண்டும். யாம் தேவதாம்-எந்த தேவதையை, அபிஷ்டோஷ்யன் ஸ்யாத்-துதிப்பானே, தாம் தேவதாம்—அந்த தேவதையிடமுள்ள ஹரியை ஸர்வோத்தமன் என அறிந்து, உபதாவேத்-துதிக்கவேண்டும்.

1-3-10

येन छन्दसा स्तोष्यन् स्यात् । तत् छन्दः उपधावेत् ॥
येन स्तोमेन स्तोष्यमाणः स्यात् । तं स्तोमं उपधावेत् ॥

யேன சந்தஸா ஸ்தோஷ்யன் ஸ்யாத்। தத் சந்த: உபதாவேத்। யேன ஸ்தோமேன ஸ்தோஷ்யமாண: ஸ்யாத் । தகும் ஸ்தோமம் உபதாவேத் ॥

(காயத்ரீ உஷ்ணிக் முதலிய பல விருத்தங்களில்) யேன சந்தஸா-எந்த விருத்தத்தில், ஸ்தோஷ்யன் ஸ்யாத்-துதிப்பானோ. தத்சந்த:-அந்த விருத்தத்தின் அபிமானி தேவனிடமுள்ள ஹரியை ஸர்வோத்தமன்என அறிந்து,உபதாவேத்-துதிக்கவேண்டும்.யேன ஸ்தோமேன-எந்த கானத்தினாலோ வாக்யங்களின் கூட்டத்தாலோ, ஸ்தோஷ்யமாண:ஸ்யாத்-துதிப்பானோ, தகும்=தம் ஸ்தோமம்-அந்த ஸ்தோமத்தின் அபிமானி தேவனிடமுள்ள ஹரியை ஸர்வோத்தமன் என அறிந்து,உபதாவேத்-ஏற்றுக்கொண்டு உபாஸிக்கவேண்டும்

1-3-11

यां दिशं अभिष्टोष्यन् स्यात् । तां दिशं उपधावेत् ॥

யாம் திசம் அபிஷ்டோஷ்யன் ஸ்யாத் । தாம் திசம் உபதாவேத் ॥

யாம்திசம் அபி-எந்த திசையை நோக்கி, ஷ்டோஷ்யன் ஸ்யாத்-துதிப்பானோ, தாம்திசம்-அந்ததிசையின் அபிமானி தேவனிடமுள்ள ஹரியை ஸர்வோத்தமனாக அறிந்து, உபதாவேத்-ஏற்றுக்கொண்டு துதிக்கவேண்டும்.

1–3–12

आत्मानं अन्ततः उपसृत्य स्तुवीत । कामं ध्यायन् अप्रमत्तः अभ्याशो ह यदस्मै स कामः समृध्येत । यत् कामः स्तुवीत इति । यत् कामः स्तुवीत इति ॥ १२ ॥

ஆத்மானம் அந்தத: உபஸ்ருத்ய ஸ்துவீத । காமம் த்யாயன் அப்ரமத்த: அப்யாசோ ஹ யதஸ்மை ஸ காம: ஸம்ருத்யேத । யத் காம: ஸ்துவீத இதி । யத்காம: ஸ்துவீத இதி ॥

காமம் - தான் விரும்புவதை, த்யாயன்-உத்தேசித்து, அப்ரமத்த: கவனக் குறைவின்றி, ஆத்மானம் - வ்யானன் முற்கூறியவர்களிடம் ஸ்ரீஹரியை, அந்தத:-தாரதம்யத்தின் கோடியில் உள்ளவன் அதாவது ஸர்வோத்தமன் என்று, உபஸ்ருத்ய - அறிந்து, ஸ்துவீத-துதிக்கவேண்டும். யத்-ஏனெனில், ஸ:- அவன், யத் காம:- எந்த விருப்பத்துடன், ஸ்துவீத—துதிக்கிருனே, ஸ:காம:-அந்த விருப்பம் அஸ்மை-இவனுக்கு, அப்யாச:– சீக்கிரத்திலேயே, ஸம்ருத்யேத-நிறைவேறிவிடும். ஹ-பிரசித்தம். இதி-இந்த உபாஸனே முற்றிற்று. யத் காம, ஸ்துவீத-என்று இரண்டாம் தடவை கூறியது ஆரம்பம் முதல் கடைசி முடிய கூறப்பட்ட விஷயத்தை உறுதிப்படுத்துவதற்கு என்று அறியவும்.)

1–3–12 முற்றிற்று.

அத். 1 கண்டம் 4 மந்திரங்கள் 5

1–4–7 முன்னர் 1-1-1ல் ஓமித்யேதத்..வ்யாக்யானம் இதி। என்ற மந்திரமே கூறப்பட்டது. அங்கு அந்த உபாஸனே யின் பலனேக் கூறவில்லே. ஆகையால் இங்கு அதன் பலன் மோக்ஷமே என ஒரு கதையின் மூலம் கூறப் போகிருர்

(1-4-2முதல் 1-4-5 முடிய 1–1–1 மந்திரத்தின் அர்த்தத்தை P. 4 பார்க்கவும். இங்கும் சேர்க்கவும்,

1-4-2

देवा वै मृत्योः बिभ्यतः त्रयीं विद्यां प्राविशन् । ते छन्दोभिः आच्छादयन् । यत् एभिराच्छादयन् तच्छन्दसां छन्दस्त्वम् ॥ १ ॥

தேவா வை ம்ருத்யோ: பிப்யத: த்ரயீம் வித்யாம் ப்ராவிசன் । தே சந்தோபி: ஆச்சாதயன் । யத் ஏபி: ஆச்சாதயன் தச்சந்தஸாம் சந்தஸ்த்வம் ॥

தேவா:-தேவர்கள், ம்ருத்யோ:-கொல்பவள் ஆதலால் மிருத்யு எனப்பட்ட துர்க்காவிடம், பிப்யத:- பயந்து, த்ரயீம்வித்யாம்-ரிக் யஜுஸ், ஸாமம் ஆகிய மூன்று வேதங்களுக்குள் ப்ராவிசன் - நுழைந்தனர் சரணடைந்தனர். அதாவது முதலில் ஓம் என்று கூறுமல், மூன்று வேதங்களை அத்யயனம் செய்து, அர்த்தமறிந்து உபாஸித்து வந்தனர் என்று கருத்து. தே-அந்த தேவர்கள், சந்தோபி:- அந்த வேதங்களால், ஆச்சாதயன்-தங்களை மறைத்துக் கொண்டனர். அதாவது, தினந்தோறும் அப்படியே செய்து வந்தனர் என்று கருத்து.இதை நாம் எவ்வாறு அறியலாம்?யத் = யஸ்மாத்—எவ்வாறென்றல், ஏபி:-இந்த வேதங்களினுல், ஆச்சாதயன்-மறைத்துக் கொண்டனரோ, அதனுல், சந்தஸாம் சந்தஸ்த்வம்-வேதங்களுக்குச் சந்தஸ் (மறைப்பது) என்று பெயர் வந்ததற்கு, அடிப்படையான காரணமாகும். (வேதமானது தமிழில் மறை எனப்படுகிறது.)

N. B.: வேதம் உண்மையான அர்த்தத்தை மறைப்பது. ஓர் இடத்தில், ஏகோ நாராயண ஆஸீத்। நப்ரம்மா। நசங்கர:। மற்ருேரிடத்தில் ஹிரண்யகர்ப்ப: ஸமவர்த்

தாக்ரே। இன்னுமோர் இடத்தில், ஏகோ ருத்ரோ ந த்விதியோ அவதஸ்தே॥ என்கிறது. அதை அறிய உபக்ரமம் முதலிய தாத்பர்யலிங்கங்களைக் கொண்டு விமர்சம் செய்ய வேண்டும். பிரம்மசூத்ரம் 1–1–4.

1–4–3

तान् उ तत्र मृत्युः । यथा मत्स्यं उदके परिपश्येत् । एवं पर्यपश्यत् । ऋचि साम्नि यजुषि । तेऽनुवित्वा ऊर्ध्वाः । ऋचः साम्नः यजुषः स्वरमेव प्राविशन् ॥ ३ ॥

தான் உ தத்ர ம்ருத்யு:। யதா மத்ஸ்யம் உதகே பரிபச்யேத்। ஏவம் பர்யபச்யத்। ரிசி ஸாம்னி யஜுஷி। தேऽனுவித்வா ஊர்த்வா:। ரிச: ஸாம்ன: யஜுஷ: ஸ்வரமேவ ப்ராவிசன் ॥3॥

ம்ருத்யு:— அந்த துர்க்கா, தான்-அவர்களை, தத்ர— அங்கு அதாவது, ரிசி ஸாம்னி யஜுஷி - ரிக் ஸாம யஜுஸ் என்ற மூன்று வேதங்களிலும், ஒளிந்திருப்பதை (மீன் கொத்திப் பறவை) யதா-எவ்வாறு, மத்ஸ்யம் - மீனை, உதகே-ஜலத்தில், ப்ரிபச்யேத்-நன்கு பார்க்குமோ, ஏவம்-அவ்வாறு, பர்யபச்யத் உ (ஏவ) பார்த்தே விட்டாள். ஊர்த்வா:- உயர்ந்தவர்களான, தே - அந்த தேவர்கள், அனு-உடனே,வித்வா-(அவள் தங்களைப் பார்த்துவிட்டதை அறிந்து, ரிச: ஸாம்ன: யஜுஷ: (5ம் வேற்றுமை) ரிக் வேதத்தையும்,ஸாம வேதத்தையும், யஜுர் வேதத்தையும் விட்டு,ஸ்வரம் ஏவ-ஸ்வ-ஸ்வதந்திரனை ஹரியிடம் ரமதே-மகிழும் முக்யப்ராணனிடமேயுள்ள ஓம் என்ற விஷ்ணுவையே ப்ராவிசன்-சரணமடைந்தனர்.

N.B.:ஸ்வர:என்ற பதத்திற்கு முக்யப்ராணன்,விஷ்ணு என்று அர்த்தமும் உண்டு ஸ்வ-தம்மிடமேரமதே-மகிழ்பவர்).

இதை எவ்வாறு அறியலாம்?

1-4-4

यदा वा ऋचमाप्नोति । ओमित्येव अति स्वरति । इति एवं साम । एवं यजुः । एष उ स्वरः । यदेतत् अक्षरम् । एतत् अमृतं अभयम् । तत्प्रविश्य देवाः अमृताः अभवन् ॥ ४ ॥

யதா வா ரிசமாப்னோதி । ஓமித்யேவ அதிஸ்வரதி । இதி ஏவம் ஸாம। ஏவம் யஜு:। ஏஷ உ ஸ்வர:। யத் ஏதத் அக்ஷரம்। ஏதத் அம்ருதம் அபயம்। தத் ப்ரவிச்ய தேவா: அம்ருதா: அபவன் ॥

யதா-எப்பொழுது,(ஓம் இல்லாத மூன்று வேதங்களும் துர்க்கையிடமிருந்து காப்பாற்றச் சக்தியற்றவையான தாலேயே அல்லவா) ரிசம் ஆப்னோதி-(இப்பொழுது அத்ய யனம் செய்பவர்கள்) ரிக்வேதத்தை அத்யயனம் செய்வ தற்கு முதலில் ஓம் இதி ஏவ ஓம் என்றே சொல்லிப்பிறகு அதிஸ்வரதி-அத்யயனம் செய்கிறார்கள். ஏவகும்=ஏவம் ஸாம-இம்மாதிரியே ஸாமவேதத்தையும், ஏவகும்=ஏவம் யஜு:-இம்மாதிரியே யஜுர்வேதத்தையும் அத்யயனம் செய்கிறார்கள். 1-4-3ல் ஸ்வரனையே பிரவேசித்தனர், சரணமடைந்தனர் என்றிருக்கிறதே அவன் யார்? உப நிஷத்தே பதிலளிக்கிறது. ஏஷ: உ(ஏவ)ஸ்வர:- ஓம் என்று கூறப்படுபவனே ஸ்வரன் எனப்படுபவன். யத்—எது, ஏதத்— எல்லோரின் அருகிலிருப்பதோ, அக்ஷரம்-நான்குவித நாச மற்றதோ,ஏஷ:உ(ஏவ)-அந்த விஷ்ணுவே ஸ்வரன் ஆவான் அவனுடைய மகிமையைக் கூறுகிறார். ஏதத்-அம்ருதம்- இந்த விஷ்ணு, நித்யமுக்தன். (மரணமற்றவன்) அபயம்- பயமில்லாதவன் அதனால்,தத்-அந்த விஷ்ணுவை ப்ரவிச்ய— சரணமடைந்து, தேவா:- தேவர்கள் அம்ருதா: அபவன்- மோக்ஷத்தை அடைந்தார்கள். மரணபயமின்மையையும் அடைந்தனர்.

1-4-5 அம்மாதிரி உபாஸிக்கும் மற்றவர்களுக்கும் மோக்ஷம் கிடைக்கும் என்கிருர்.

स य एतत् एवं विद्वान् अक्षरं प्रणौति । एतदेव अक्षरंस्वरं अमृतं अभयं प्रविशति । तत्प्रविश्य यत् अमृता देवाः । तत् अमृतो भवति ॥ ५ ॥

ஸ ய ஏதத் ஏவம் வித்வான் அக்ஷரம் ப்ரணௌதி। ஏததேவ அக்ஷரம் ஸ்வரம் அம்ருதம் அபயம் ப்ரவிசதி। தத் ப்ரவிச்ய யத் அம்ருதா தேவா:। தத் அம்ருதோ பவதி॥

ய:- யார், ஏதத்-இந்த ஓம் என்ற விஷ்ணுவை. ஏவம் வித்வான்-இம்மாதிரி ஓம் உடன்சேர்ந்து உபாஸித்ததால் தான் தேவர்களுக்கு மோக்ஷம் முதலியவற்றைத் தந்தார் என்று அறிந்து, அக்ஷரம் - நாசமற்ற விஷ்ணுவை, ப்ரணௌதி-ஓங்காரத்திஞல் (ப்ரணவத்தால்) துதிக்கிருனே ஸ:– அவன், ஏதத் ஏவ–இதே, அக்ஷரம்-நாசமற்ற விஷ்ணுவையே, ஸ்வரம்-ஸ்வ-தன்னிடமே ரமதே மகிழ்பவனும், அம்ருதம்-நித்யமுக்தனும், அபயம்-பயமற்றவனும், பிறரையும் பயமற்றவர்களாகச் செய்பவனுமான விஷ்ணுவை, ப்ரவிசதி-நுழைகிருன் (அடைகிருன்). தத்-ப்ரவிச்ய-அவரை அடைந்து, யத்-எவ்வாறு, தேவா:- தேவர்கள், அம்ருதா: மோக்ஷமடைந்தனரோ, தத்-அவ்வாறு, அம்ருத:-மோக்ஷமடைபவஞக, பவதி-ஆகிருன்.

1–4–5 முற்றிற்று.

அத். 1 கண்டம் 5 மந்திரங்கள் 5

1-5-1 முன் 1-2-9ல் (P21) உத்கீதோபஸாஃனப் பூர்ணமாகச் செய்தவன் மறுமையில் மோக்ஷமடைவான் எனப்பட்டது.

இங்கு அவன் இம்மையிலும் பல புத்திரர்களை அடைவான் என்பதை ஓர் கதையின் மூலம் கூறுகிறார்.

अथ खलु य उद्गीथः स प्रणवः । यः प्रणवः सः उद्गीथः इति । असौ वा आदित्यः उद्गीथः एषः प्रणवः । ओमिति ह्येषः स्वरन् एति ॥

அத கலு ய: உத்கீத: ஸ ப்ரணவ:। ய: ப்ரணவ:, ஸ உத்கீத: இதி। அஸௌ வா ஆதித்ய: உத்கீத: ஏஷ: ப்ரணவ:। ஓமிதி ஹ்யேஷ: ஸ்வரன் ஏதி॥

அத - வேறு உபாஸனை ஆரம்பம்-ய:- யார், உத்கீத:- உயர்ந்தவனும் கானம் செய்யப்படுபவனும், எங்குமிருப்பவனுமான விஷ்ணுவோ, ஸ:- அவனே, ப்ரணவ:- ப்ர - உயர்ந்தவனும், ண - நடத்துபவனும், வ-அனைவரால் அடையப்படுபவனுமானதால் ப்ரணவன் என்ற பெயருடன் ப்ரணவன் என்ற வாயுவிடமிருப்பவன் | ய:ப்ரணவ:- எவன் ப்ரணவன் என்ற வாயுவிடம் இருக்கிறானோ, ஸ:- உத்கீத:- அவனே உத்கீதனுவான். இதி க்லு-என்பது, பிரசித்தமானது ப்ரணவன் என்ற உத்கீதன், எங்குள்ள வாயுவிடம் உளன்? அஸௌ ஆதித்ய:-இந்த சூரியனிடமுள்ள உத்கீத:-விஷ்ணு ஏஷ: உத்கீத: ப்ரணவ:- சூரியனிடமுள்ள ப்ரணவன் என்ற முக்ய வாயுவிடம் இருக்கிறான். ஏஷ:-இந்த சூரியனிடமுள்ள வாயுவிடமுள்ள உத்கீதன் என்ற விஷ்ணு, ஓம் இதி ஸ்வரன்- ஓம் என்று ஜபித்துக்கொண்டு, ஏதி - ஸஞ்சரிக்கிறான். ஹி-பிரசித்தம் ||

1-5-2

एतमु एव अहं अभ्यगासिषम् । तस्मात् मम त्वं एकोऽसि । इति ह कौषीतकिः पुत्रमुवाच । रश्मीन् त्वं पर्यावर्तयतात् । बहवो वै ते भविष्यन्ति । इति अधिदैवतम्

ஏதமு ஏவ அஹம் அப்யகாஸிஷம் । தஸ்மாத் மம த்வம் ஏகோ அஸி । இதி ஹ கௌஷீதகி: புத்ரமுவாச। ரச்மீன்த்வம்பர்யாவர்த்தய தாத்। பஹவோ வைதே பவிஷ்யந்தி । இதி அதிதைவதம் ॥

கௌஷீதகி:- அப்பெயருள்ள ஒரு ரிஷி, புத்ரம் - தமது புதல்வனிடம், பிள்ளாய்! ஏதம் உ ஏவ - இந்த சூரியனிடமுள்ள முக்ய வாயுவிடமுள்ள விஷ்ணுவையே, அஹம்-நான் அப்யகாஸிஷம்-நன்ருக கானம் செய்தேன் உபாஸித்தேன். தஸ்மாத்-அதனுல் மம-எனக்கு, த்வம்-நீ, ஏக: அஸி - ஒரு புத்திரனுக இருக்கிருய். த்வம்—நீ ரச்மீன் =ரச்மிஷு—சூரிய கிரணங்களிலுள்ள முக்யவாயுவிடமுள்ள விஷ்ணு ரூபங்களை பர்யாவர்த்தயதாத்—நன்கு உபாஸிப்பாயாக.தே—உனக்கு, பஹவ:— பல புத்திரர்கள், பவிஷ்யந்தி—பிறப்பார்கள்.பிறகு மோக்ஷமும் அடையலாம். வை—பிரசித்தம், இதி—என்று, உவாச—சொன்னுர். இதி—இவ்வாறு, அதிதைவதம்—தேவர்களிடமுள்ள விஷ்ணுவின் உபாஸனை முடிந்தது.

1-5-3

अथाध्यात्मम् । य एवायं मुख्य प्राणः । तं उद्गीथं उपासीत । ओमिति ह्येष स्वरन् एति ॥ ३ ॥

அத அத்யாத்மம் । ய ஏவாயம் முக்யப்ராண:। தம் உத்கீதம் உபாஸீத । ஓமிதி ஹ்யேஷ ஸ்வரன் ஏதி॥

அத—இப்பொழுது, அத்யாத்மம்—நம் தேகத்திலேயேயுள்ள உத்கீதனின் உபாஸனையைக் கூறுகிருர். ய: முக்யப்ராண:—எந்த முக்யவாயு,அயம் ஏவ—இந்த தேகத்திலுள்ளவனே, தம் உத்கீதம் — அவனிடமுள்ள உத்கீதன் என்ற ஹரியை, உபாஸீத—உபாஸிக்கவேண்டும். ஹி—பிரசித்தம். தம்-ஏஷ:— அந்த முக்ய வாயுவிடமுள்ள உத்கீதன்.ஓம் இதி ஸ்வரன்—ஓம் என்று ஜபித்துக்கொண்டு,ஏதி—ஸஞ்சரிக்கிருன்

1–5–4 இங்கு 1–5–2 மந்திரமே.

एतमु...उवाच । प्राणान् त्वं भूमानं अभिगायतात् । बह्वो...भविष्यन्ति इति ॥ ४ ॥

P.40 ஏதமு...உவாச । ப்ராணன் த்வம் பூமானம் அபிகாயதாத் । பஹவோ......பவிஷ்யந்தி । இதி ॥

ப்ராணன்–ப்ராணேஷு–முக்யப்ராண ரூபங்களிலுள்ள பூமானம் பரிபூர்ணனை விஷ்ணுவின் ரூபங்களை, த்வம்–நீ, அபிகாயதாத்–நன்கு கானம் செய்வாயாக. (கோடிட்ட இடங்களில் 1–5–2ல் உள்ள அர்த்தமேயுள்ளது. அதைப் பார்க்க.

1–5–5 இங்கு 1–5–1 மந்திரமே.

अथ खलु ... इति होतृषदनात् हैवापि दुरुद्गीतं अनुसमाहरति इति । अनुसमाहरति इति ॥ ५ ॥

P.40 அதகலு...இதி । ஹோத்ருஷதனத் ஹைவாபி துருத் கீதம் அனுஸமா ஹரதி இதி । அனுஸமா ஹரதி இதி ॥5॥

1–5–1 அர்த்தம் பார்க்க. தவறான கானத்தினால் ஏற்படும் பாவங்களைப் போக்கும் உபாஸனையைக் கூறுகிறார். ஹோத்ருஷதனத்=ஹோத்ருஷதனத்=ஹோதா என்ற ரித்விக்கை, ஸதனம்-ஆசிரயமாகக் கொண்ட அக்னி ஹோத்ருஸதனம் எனப்படுவான். இங்கு அக்னியிலுள்ள விஷ்ணுவைக் கொண்டு,5ம் வேற்றுமையால்,அக்னியிடமுள்ளவிஷ்ணுவை உபாஸிப்பதினாலேயே, துருத்கீதம்-துஷ்டமானஅதாவது தப்பான கானத்தால் ஏற்படும் பாவத்தைப் போக்கிக் கொண்டு, அனுஸமாஹரதி–விதிப்படி செய்த கானமாகி

இஷ்டமான பலனைத் தரும்படி செய்கிறான். ஹவை அபி-பிரசித்தமானது. இந்தப் பதத்தை இருமுறை கூறியதின் கருத்து 1–3–12 முடிவில் கூறப்பட்டுளது.

1–5–5 முற்றிற்று.

அத்யாயம் 1 கண்டம் 6 மந்திரங்கள் 8

1–6–1 முன்னர் P. 6 1–1–2ல் ரிக்வேதாபிமானி ஸரஸ்வதியைக் காட்டிலும் ஸாம என்ற முக்யப்ராணன் உயர்ந்தவன் என இருவர்களாகக் கூறப்பட்டனர். இங்கு அவரிருவரும் சேர்ந்து அர்த்தநாரீசுவரன் போல் ஒருவராகக் கூறப்படுகின்றனர்.

इयमेव ऋक् । अग्निः साम । तदेतत् एतस्यां ऋचि अध्यूढं साम । तस्मात् ऋचि अध्यूढं साम गीयते । इयमेव सा । अग्निः अमः । तत्साम ॥ १ ॥

இயமேவ ரிக் । அக்னி: ஸாம । ததேதத் ஏதஸ்யாம் ரிசி அத்யூடம் ஸாம । தஸ்மாத் ரிசி அத்யூடம் ஸாம கீயதே । இயமேவ ஸா । அக்னி: அம: । தத் ஸாம ||1||

இயமேவ-இந்தப் பூமி தேவியிடமுள்ள ஸரஸ்வதியே, ரிக்-ரிக் எனப்படுவாள். அக்னி:- அக்னி தேவனிடமுள்ள முக்ய வாயுவே, ஸாம-ஸாம எனப்படுவான் (அனைவரிடமும் ஸமமாயிருப்பதால்) தத்–பிரசித்தமான, ஏதத்–இந்த ஸாம என்ற வாயு, ஏதஸ்யாம் ரிசி-இந்த ஸரஸ்வதியிடம், அத்யூடம்-இணைந்துள்ளார். தஸ்மாத்–அதனால், உலகில் அனைவராலும், ரிசி அத்யூடம் ஸாம - ரிக்வேத மந்திரங்களுடன் இணைந்த ஸாம மந்திரங்கள், கீயதே – கானம்

செய்யப்படுகின்றன. இயமேவ-இந்த ஸரஸ்வதியே, ஸா-(ஸாரத்வாத்-ஸ்த்ரீகளில் உயர்ந்தவளாதலால்) ஸா எனப் படுவாள். அக்னி: அக்னியிடமுள்ள வாயுவே, அம: (நமியதே - அறியப்படாதவனுதால் அம எனப்படுவான்) தத்ஸாம-அவ்விருவரும் சேர்ந்து ஸா+அம=ஸாம என்று, ஒரே சரீரத்துடன்கூடிய தம்பதிகளாகக் கூறப்படுகிறுர்கள்.

இம்மாதிரியே 1–6–2ல், அந்தரிக்ஷ லோகத்திலுள்ள ரிக் என்ற ஸரஸ்வதியும்,பூத வாயுவிடமுள்ள முக்யவாயுவும் சேர்ந்து, 1–6–3ல் ஸ்வர்க்கத்திலுள்ள ரிக் என்ற ஸரஸ்வதியும், சூரியனிடமுள்ள வாயுவும் சேர்ந்து, 1-6–4ல் நக்ஷத்திரங்களிடமுள்ள ரிக் என்ற ஸரஸ்வதியும், சந்திரனிடமுள்ள வாயுவும் சேர்ந்து 1–6–5ல் சூரியனின் வெண்மையான ஒளியிலுள்ள ரிக் என்ற ஸரஸ்வதியும், நீலமான (கருப்பான) ஒளியிலுள்ள வாயுவும் சேர்ந்து, ஸா+அம= ஸாம என்ற ஒரே சரீரத்துடன் கூடிய தம்பதிகளாகவுள்ளனர்.

1–6–6 இந்த தம்பதிகள் ஸேவிக்கும் யஜமானனையும், அவன் மகிமைகளையும் கூறுகிறுர்.

अथ य एषो अन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते ।
हिरण्यश्मश्रुः हिरण्यकेशः आप्रणखात् सर्व एव सुवर्णः ॥६

அத ய ஏஷோ அந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே । ஹிரண்ய ச்மச்ரு: ஹிரண்ய கேச: । ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண: ||6 ।

அத - வேறு விஷயம் இது. ஆதித்யே - சூரியனிடம், அந்த:- உள்ளேயுள்ள இந்த தம்பதிகளிடம், ய:- எந்த, ஏஷ:- இந்த, ஹிரண்மய:- பொன்நிறமுடையவன் அல்லது ஆனந்தமயனுன, புருஷ:- மனிதன், த்ருச்யதே - ஞானக் கண்ணுக்குப் புலப்படுகின்றுனே, ஹிரண்யகேச:-பொன்நிற

முள்ள ஆனந்தமயமானகூந்தலையுடையவனே,ஆ
நகம் வரையில், ஸர்வ ஏவ ஸுவர்ண:- தேகம்
பொன்மேனியனே!

1-6-7

तस्य यथा कप्यासं पुण्डरीकम् । एवं अक्षिणी । तस्य उत् इति नाम । स एष सर्वेभ्यः पाप्मभ्यः उदितः । उदेति ह वै सर्वेभ्यः पाप्मभ्यः । य एवं वेद ॥७॥

தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகம் | ஏவமக்ஷிணீ | தஸ்ய உத் இதி நாம | ஸ ஏஷ ஸர்வேப்ய: பாப்மப்ய: உதித: | உதேதி ஹ வை ஸர்வேப்ய: பாப்மப்ய: | ய ஏவம் வேத ||7||

தஸ்ய-அந்த சூரியனிடமுள்ள ஸ்ரீஹரிக்கு, யதா-எவ்வாறு, கபி ஆஸம்-க-ஜலத்தை, பி-குடித்துக் கொண்டு ஆஸம் - இருக்கும் தண்டையுடைய, புண்டரீகம் - செந்தாமரை இருக்குமோ,ஏவம்-அவ்வாறே, அக்ஷிணீ-இரண்டு கண்களுண்டு தஸ்ய - அவனுக்கு, உத் இதி நாம - உத் (மேலேயிருப்பவன்) என்று பெயர். ஏனெனில், ஸ:-பிரசித்தி பெற்ற, ஏஷ:- இவன், ஸர்வேப்ய: பாப்மப்ய - எல்லா பாபங்களையும் தாண்டினவன் ய:- யார், ஏவம்-வேத-இம் மாதிரி அறிவானே, அவன், ஸர்வேப்ய: பாப்மப்ய:- பாபங்களிலிருந்தும், உதேதி - விடுபட்டு மேலே யிருக்கிறான். ஹ வை-மிகப் பிரசித்தமானது இது.

N.B.: சங்கர பாஷ்யத்தில் கப்யாஸம்=கபி-குரங்கின், ஆஸம் - ஆஸனவாய் போன்று சிவந்த கண்கள் என்ற அர்த்தம் கூறப்பட்டுள்ளது விந்தையானது.

ஹிருக் ஸுகம் ஹிரண்யம் ஸ்யாத், பாஹ்யானந்தாத் ப்ருதக் யத:। ஆதிக்யார்த்தே மயட் யஸ்மாத், அதி கானந்த ரூபக:॥ (ஐதரேய பாஷ்யம். 1-2-3)

ரத்யானந்தௌ பூர்ணநித்யௌ, ஹிதௌ தேன ஹிரண் மய:॥ ஸ்வர்ணவர்ணதயா வாபி, வாஸுதேவோ ஹிரண்மய:॥

(ஹிதௌ = நிஹிதௌ ரஸ்ச ணஸ்ச யஸ்மின் = ஹிரண்மய:)

1-6-8 P. 44ல் அர்த்தநாரீசுவர தம்பதிகள் ஸ்ரீஹரி யின் சேவகர்கள் எனக் கூறுகிறார்.

तस्य ऋक् च साम च गेष्णौ । तस्मात् उद्गीथः । तस्मात्तु एव उद्गाता एतस्य हि गाता । स एषः । ये च अमुष्मात् परांचः लोकाः तेषां च ईष्टे देवकामानां च । इति अधिदैवतम् ॥८॥

தஸ்ய ரிக் ச, ஸாம ச, கேஷ்ணௌ । தஸ்மாத் உத்கீத:। தஸ்மாத்து ஏவ உத்காதா। ஏதஸ்ய ஹி காதா। ஸ ஏஷ:। யே ச அமுஷ்மாத் பராஞ்ச: லோகா:। தேஷாம் ச ஈஷ்டே தேவகாமானாம்ச। இதி அதி தைவதம்॥

தஸ்ய—அந்த சூரியனிடமுள்ள ஹரிக்கு; ரிக்ச, ஸாமச-ஸரஸ்வதியும் முக்ய வாயுவும், கேஷ்ணௌ - பாடுபவர்கள் ஆவர். தஸ்மாத் - அதனால், (இவ்விருவர்களால் பாடப் படுவதால்), சூரியனிடமுள்ள ஹரி, உத்கீத = உத்-உயர்ந்த வன், கீத:- பாடப்படுபவன் உத்கீதன் எனப்படுகிறான். தஸ்மாத்து ஏவ - அதனாலேயே, உத்காதா – உலகிலுள்ள எந்த ரித்விக்கும் ஏதஸ்ய-சூரியனிடமுள்ள ஹரியை,காதா-பாடுபவனாவான். ஹ - பிரசித்தம் ஸ ஏஷ:- பிரசித்தனான

இந்த ஹரி, யேசலோகா:- எந்த உலகங்கள், அமுஷ்மாத்—ஸ்வர்க்கத்திற்கு, பராஞ்ச: தாண்டி - மேலேயுள்ள உலகங்களோ தேஷாம்-அவைகளுடைய,தேவகாமானும்-ஸ்வர்க்க போகங்களைத் தருவதற்கு, ஈஷ்டே, சக்தியுள்ளவனாயிருக்கிறான். இதி-இவ்வாறு, அதிதைவதம்-தேவர்களிடமுள்ள உத்கீத பகவானின் உபாஸனை கூறப்பட்டது.

1–6–8 முற்றிற்று.

அத்யாயம் 1 கண்டம் 7 மந்திரங்கள் 8

1–7–1 P.43 6ம் கண்டத்தில் தேவதைகளிடம் ஸரஸ்வதியும் வாயுவும் அர்த்தநாரீசுவரர்களாயிருப்பதைக் கூறினார். இந்தக் கண்டத்தில் அதே மாதிரி நம் தேகத்திலுள்ளனர் என்கிறார்.

अथ अध्यात्मं । वागेव ऋक् । प्राणः साम । तदेतत् एतस्यां ऋचि अध्यूढं साम । तस्मात् ऋचि अध्यूढं साम गीयते । वागेव सा । प्राणो अमः । तत् साम ॥१॥

அத அத்யாத்மம்। வாக் ஏவ ரிக்। ப்ராண: ஸாம। ததேதத் ஏதஸ்யாம் ரிசி அத்யூடம் ஸாம। தஸ்மாத் ரிசி அத்யூடம் ஸாம கீயதே। வாகேவ ஸா। ப்ராணோ அம:। தத்ஸாம॥

அத—இப்பொழுது, அத்யாத்மம்-தேகத்திலுள்ள அந்த தம்பதிகளைக் கூறுகிறார். வாக்ஏவ-வாய் என்ற இந்திரியத்திலுள்ள ஸரஸ்வதியே, ரிக் எனப்படுவாள். தத்-பிரஸித்தமான, ஏதத்-இந்த வாயு, ஏதஸ்யாம்ரிசி—இந்த ஸரஸ்வதியிடம், அத்யூடம்—இணைந்துள்ளான். தஸ்மாத் - அதனால், உலகில் அனைவராலும், ரிசி அத்யூடம் ஸாம-ரிக்வேத மந்தி

ரங்களுடன் இணைந்த ஸாம மந்திரங்கள், கீயதே - கானம் செய்யப்படுகின்றன. வாக்ஏவ-வாயிலுள்ள ஸரஸ்வதியே, ஸா—(ஸ்த்ரீகளில் உயர்ந்தவளாதலால், ஸாரத்வாத்) ஸா எனப்படுவாள். ப்ராண:- தேகத்திலுள்ள முக்யவாயு, அம:- (ந மீயதே — அறியப்படுவதில்லை யாதலால்) அம எனப்படு வான். தத் - அவ்விருவரும் சேர்ந்து, ஸா + அம = ஸாம என்று ஒரே சரீரமுள்ள அர்த்தநாரீசுவர தம்பதியாக கூறப் படுகின்றனர்.

இம்மாதிரியே 1–7–2ல் கண்களிலுள்ள ஸரஸ்வதியும், ஜீவனிடமுள்ள முக்ய வாயுவும் 1–7–3ல் காதுகளிலுள்ள ஸரஸ்வதியும், மனதிலுள்ள வாயுவும், 1–7–4ல் கண்களின் வெண்மையான ஒளியிலுள்ள ஸரஸ்வதியும், நீல (கருமை யான) ஒளியிலுள்ள வாயுவும், சேர்ந்து, ஸா + அம = ஸாம என்ற அர்த்தநாரீச்வர தம்பதியாக ஒரே சரீரத்துடன் விளங்குகின்றனர். அவ்விருவர்களால் சேவிக்கப்படும் பகவானைக் கூறுகிறார்.

1–7–5

अथ य एषो अन्तरक्षिणि पुरुषो दृश्यते सैव ऋक् । तत् साम । तत् उक्थं । तत् यजुः । तत् ब्रह्म । तस्यै तस्य तदेव रूप । यदमुष्य रूपं । यौ अमुष्य गेष्णौ तौ गेष्णौ । यन्नाम तन्नाम ॥

அத ய ஏஷோ அந்த: அக்ஷிணி புருஷோ த்ருச்யதே ஸைவரிக். தத் ஸாம. தத்உக்தம். தத்யஜு:। தத்ப்ரஹ்ம தஸ்யை தஸ்ய ததேவ ரூபம் யதமுஷ்ய ரூபம்। யௌ அமுஷ்ய கேஷ்ணௌ தௌ கேஷ்ணௌ। யந்நாம தந்நாம ॥

அத-இப்பொழுது ய:—எந்த, ஏஷ:-பிரசித்தரான,அக்ஷிணி அந்த:- கண்ணின் உள்ளே தம்பதிகளிடம் உள்ள, புருஷ:- உத்கீதன் என்ற ஹரி, த்ருச்யதே-ஞானக் கண்ணால் காணப் படுகிறானோ,ஸா ஏவ-அவனே, ரிக்-ஞான ஸ்வரூபியாதலால் ரிக் - எனப்படுவான். தத் ஸாம-அவனே, அனைவரிடமும் ஸமமாயிருப்பதால் ஸாம ஆவான். தத் உக்தம்-அவனே, அனைத்தையும் உண்டுபண்ணுவதால் உக்தன் ஆவான், தத் யஜு:—அவனே யாகத்தில் பூஜிக்கப்படுவதால் யஜுஸ் ஆவான். தத் ப்ரஹ்ம - அவனே குணபூர்ணன் ஆவான். அமுஷ்ய—சூரியனிடமுள்ள ஹரிக்கு, யத்ரூபம்—எந்த பொன் நிறம், பூர்ணானந்தமுள்ள ரூபமோ, தத்ஏவ ரூபம் அதே தான் ரூபம், தஸ்ய ஏதஸ்ய-அந்தக் கண்களிலுள்ள ஹரிக்கும் உண்டு. யௌ-எந்த ஸரஸ்வதி முக்ய வாயு தம்பதிகள், அமுஷ்ய-சூரியனிடமுள்ள ஹரிக்கு, கேஷ்ணௌ - பாடகர் களோ, தௌ-அவ்விருவர்களே,தஸ்யஏதஸ்ய கேஷ்ணௌ-கண்களிலுள்ள ஹரிக்கும் பாடகர்கள். அமுஷ்ய—சூரியனிட முள்ள ஹரிக்கு, யந் நாம - உத் என்ற எந்தப் பெயரோ, தஸ்ய ஏதஸ்ய-கண்களிலுள்ள ஹரிக்கும், தந்நாம-அந்தப் பெயரே ||

1–7–6

स एष च एतस्मात् अर्वांचः लोकाः । तेषां च ईष्टे मनुष्यकामानां च इति । तत् य इमे वीणायां गायन्ति । एतं ते गायन्ति । तस्मात् ते धनसनयः ॥६॥

ஸ ஏஷச, ஏதஸ்மாத் அர்வாஞ்ச: லோகா: । தேஷாம் ச ஈஷ்டே மனுஷ்யகாமானாம்ச இதி । தத்ய இமே வீணாயாம் காயந்தி । ஏதம் தே காயந்தி தஸ்மாத் தே தனஸனய: ॥ 6 ॥

ஸ:- பிரசித்தனான, ஏஷ: ச-இந்தக் கண்களிலுள்ள ஹரியே, ஏதஸ்மாத்–இந்தப் பூலோகத்துக்கு, அர்வாஞ்ச: லோகா:- கீழேயுள்ள உலகங்களுண்டோ, தேஷாம்ச–அவர்களின் போகங்களையும், மனுஷ்யகாமானும் ச – மனிதர்கள் விரும்பும் போகங்களையும் தருவதற்கு ஈஷ்டே–சக்தியுள்ளவனாகிறான். யே-எந்த, இமே – இந்த உலகில் அரசர்கள் முதலியோரின் முன், வீணயாம்-வீணையில், காயந்தி-பாடுகின்றனர், இதியத் - என்பது எதுவோ, தத் – அது, ஏதம்-இந்த ஹரியைப்பற்றியே, காயந்தி-பாடுகின்றனர். தஸ்மாத்-அரசர் முதலியோரிடமுள்ள ஹரியைப் பாடுவதாலேதான், சந்தோஷமடைந்த ஸ்ரீஹரியிடமிருந்து, தனஸனய:- பணத்தை அடைகிறார்கள். (ஈசாவாஸ்யம் முதல் மந்திரத்தில் கூறியபடி அந்த அரசர் முதலியோர் அஸ்வதந்திரர்களல்லவா).

1–7–7 தேவர்களிடமும் நம் தேகத்திலும் கூறிய தத்வங்களை அறிந்து பாடுகிறவனுடைய பலனைக் கூறுகிறார்.

अथ य एतदेवं विद्वान् साम गायति । उभौ साम गायति । सोऽमुनैव । स एषः । ये च अमुष्मात् परांचः लोकाः । तांश्च आप्नोति । देवकामांश्च ॥ ७ ॥

அத ய ஏதத் ஏவம் வித்வான், ஸாம காயதி। உபௌ ஸாம காயதி। ஸோ அமுனைவ ஸ ஏஷ:, யே ச அமுஷ்மாத் பராஞ்ச: லோகா:। தாம்ஸ்ச ஆப்னோதி। தேவகாமான் ச ॥ 7 ॥

அத-இப்பொழுது, ய:-எந்த அதிகாரி, ஏதத்-ரிக் ஸாம ஹரி ஆகியோரின் மகிமைகளை, ஏவம் வித்வான்-கூறியவாறு அறிந்து, ஸாம காயதி – ஸாம கானம் செய்கிறானோ, ஸ:- அவன், சூரியனிடமும் கண்களிலுமுள்ளவர்களைப் பற்றி, ஸாம காயதி - ஸாம கானம் செய்கிறானோ, ஸ:- அந்த

பிரசித்தனுன, ஏஷ:-இவன், அமுஷ்மாத்-இந்த ஸ்வர்க்கத்தைக் காட்டிலும், பராஞ்ச: லோகா:- உயர்ந்த உலகங்களோ, தான்ச-அவைகளேயும், தேவகாமான்ச-தேவர்களின் போகங்களேயும், ஆப்னோதி – அடைகிருன். ஸ்வதந்திரமாகவே அடைகிருனு? ஸ:-அவன், அமுனு ஏவ - கானத்திற்குரிய சூர்யனிடமுள்ள ஸ்ரீஹரியின் அருளாலேதான்.

1–7–8

अथ अनेनैव, ये च एतस्मात् अर्वांचः लोकाः । तांश्च आप्नोति । मनुष्य कामान् च । तस्मात् उ हैवंवित् उद्गाता ब्रूयात् ॥८॥

அத அனேனைவ, யே ச ஏதஸ்மாத் அர்வாஞ்ச: லோகா: । தாம்ஸ்ச ஆப்னோதி । மனுஷ்ய காமான் ச । தஸ்மாத்உ ஹ ஏவம்வித் உத்காதா ப்ரூயாத் ॥

அத—இப்பொழுது, அனேனஏவ-இந்தக் கண்களிலுள்ள ஸ்ரீஹரியின் அருளாலேயே, ஏதஸ்மாத் - இந்த பூலோகத்திற்கு, அர்வாஞ்ச: லோகா:- கீழே உள்ள, யேச லோகா:- எந்த உலகங்களுண்டோ, (தன் கானத்தால்) தான்ச-அந்த உலக போகங்களேயும், ஆப்னோதி - அடைவிக்கிருன். ச— அது மாத்திரமல்ல, மனுஷ்ய காமான் ச-மானிடர்கள் விரும்புகிறவைகளேயும் அடைவிக்கிருன். அதாவது முக்ய உத்காதாவான முக்ய வாயு, மேல் உலக தேவ போகங்களேயும், உலகில் உத்காதா என்ற ரித்விக்காகவுள்ளவன், தாழ்ந்த மானிட உலக போகங்களேயும் அடைவிக்கிருன். தஸ்மாத்-உஹைவை - அதனுலேயே, ஏவம்வித்-இம்மாதிரி யறிந்த, உத்காதா–என்ற ரித்விக்கு, யாகம் செய்யும் யஜமானனிடம் ஏவம் ப்ரூயாத்—பின்வருமாறு கூறவேண்டும்.

1–7–9

कं ते कामं आगायानि इति । एष ह्येव कामगानस्य ईष्टे । य एवं विद्वान् साम गायति । साम गायति ॥९॥

கம் தே காமம் ஆகாயானி இதி । ஏஷ ஹ்யேவ காம கானஸ்ய ஈஷ்டே । ய ஏவம் வித்வான் ஸாம காயதி ஸாம காயதி ॥

தே - யஜமானனை உமக்கு, கம் காமம் – இஷ்டமான எந்த போகங்களைத் தரும்படி, ஆகாயானி-கானம் செய்யட்டும், இதி–என்று । ய:– யார், ஏவம் வித்வான்–இம்மாதிரி அறிந்து, ஸாம காயதி–ஸாம கானம் செய்கிறானோ(மறுபடியும் ஸாம கானம் செய்கிறானோ என்பது அதை உறுதிப்படுத்தவே). ஏஷ: ஏவ–இந்த உத் காதாவே, காமகானஸ்ய ஈஷ்டே – இஷ்டங்களை அடைவிப்பதற்குச் சக்தியுள்ளவன் ஆவான்.

N. B. : ஸ்ரீ ராகவேந்திரரின் கண்டார்த்தத்தின்படி 8, 9 இரு மந்திரங்களாகும் வேதேசரின்படி 8, 9 ஒரே மந்திர மாகும். 1–7–8–9 முற்றிற்று.

அத்தியாயம் 1 கண்டம் 8 மந்திரங்கள் 7

1–8–1 உத்கீதன் என்ற ஸ்ரீ ஹரியே ஸர்வோத்தமர் என முன்னர் கூறினார். அதையே விமர்சத்தின் மூலம் ஸ்தாபித்த கதையைக் கூறுகிறார்.

त्रयो ह उद्गीथे कुशला बभूवुः । शिलकः शालावत्यः, चैकितायनो दाल्भ्यः, प्रवाहणो जैबलिः इति । ते ह ऊचुः । उद्गीथे वै कुशलाः स्मः । हन्त उद्गीथे कथां वदामः । इति ॥१॥

த்ரயோ ஹ உத்கீதே குசலா: பபூவு:। சிலகஸ் சாலாவத்ய:, சைகிதாயனோ தால்ப்ய:। ப்ரவாஹணோ ஜைபிலி:। இதி। தேஹ ஊசு:। உத்கீதே வை குசலாஸ் ஸ்ம:। ஹந்த உத்கீதே கதாம் வதாம: இதி ॥

1 சாலாவத்ய:சிலக:- சலாவதி என்பவளின் புத்திரரான, சிலக:என்பவர், 2 உசைகிதாயன:-சிகிதாயனரின் தால்ப்ய: புத்திரரான, தால்ப்ய: என்பவர், 3 ஜைபிலி:-ப்ரவாஹண: ஜிபிலர் என்பவரின் புத்திரரான, ப்ரவாஹணன் என்பவர் (5-3-1) இதி-என்ற, த்ரய:- மூவர், உத்கீதே-அப்பெயர் கொண்டஸாமத்தில்குசலா:பபூவு:-நிபுணர்களாயிருந்தனர் ஹ-பிரசித்தம். தே-அவர்கள், ஊசு:- பரஸ்பரம் சொல்லிக் கொண்டனர்.ஹ-ஆச்சர்யம். உத்கீதே-உத்கீத ஸாமத்தில், குசலா:ஸ்ம:- நிபுணர்களாய் உள்ளோம் என்பது, வை - பிரசித்தமானது.ஹந்த-சந்தோஷம். உத்கீதே-அப்பெயர் கொண்ட ஸாமத்தில், கதாம் வதாம: இதி-வினா விடை ரூபமான வாதத்தைச் செய்வோம் என்று ॥

N. B.: ஸ்ரீ மத்வரின் கதாலக்ஷணம் என்ற நூலில் 1) வாதகதா- 2) ஜல்பகதா- 3) விதண்டாகதா என்ற மூவிதமான வாதங்களையும், மத்யஸ்தர்களையும் வாதம் செய்யும் முறைகளையும் வகுத்துள்ளார்.

வாதகதா= (தத்வ ஞானத்தைப் பெற குரு, சிஷ்யர், நல்லோர்களின் வாதம்) ஜல்பகதா= (புகழ் பெறுவது முதலிய நோக்கங்களுடன் போட்டியுடன் வாதித்தல்) விதண்டகதா = (குறும்புத்தனமாக பதில் தருவது முதலிய தீயோர்களின் வாதம்)

1-8-2

तथेति ह समुपविविशुः । स ह प्रवाहणो जैबलिः उवाच । भगवन्तौ अग्रे वदताम् । ब्राह्मणयोः वदतोः वाचं

श्रोष्यामि इति । सह शिलकः शालावत्यः चैकितायनं दाल्भ्यं उवाच । हन्त त्वा पृच्छानि इति । पृच्छ इति होवाच ॥२॥

ததேதி ஹ ஸமுப விவிசு: । ஸ ஹ ப்ரவாஹணோ ஜைபிலி: உவாச । பகவந்தௌ அக்ரே வததாம் । ப்ராஹ்மணயோ: வததோ: வாசம் ச்ரோஷ்யாமி இதி । ஸஹ சிலகஸ் சாலாவத்ய:, சைகிதாயனம் தால்ப்யம், உவாச। ஹந்த த்வா ப்ருச்சானி இதி । ப்ருச்ச இதி ஹோவாச ॥

(கதையானதால் இங்கு முக்கியமான பதங்களுக்குத் தான் அர்த்தம் தரப்பட்டுள்ளது.)

அப்படியே ஆகட்டும் என்று மூவரும் (ஸஹ-சேர்ந்து) ஸமுபவிவிசு:- உட்கார்ந்தனர் என்பது ஹ - பிரசித்தம். (க்ஷத்ரியனான) ஸ:- அந்த ப்ரவாஹணர், பூஜ்யர்களான தாங்களிருவரும் முதலில் பேசுங்கள். வாதம் செய்யும் இரு பிராம்மணர்களுடைய வார்த்தைகளைக் கேட்கிறேன் என்று கூறினார். அந்தப் பிரசித்தரான சிலகர், தால்ப்யரிடம், 'ஹந்த-தாங்கள் அனுமதித்தால், த்வா-உம்மை ப்ருச்சாமி-வினவுகிறேன்', இதி-என்றார். தால்ப்யர், 'கேளும்' என்று சொன்னார்.

1–8–3

का साम्नो गतिः? इति । स्वरः इति होवाच । स्वरस्य का गतिः? इति । प्राणः इति होवाच । प्राणस्य का गतिः? इति । अन्नं इति होवाच । अन्नस्य का गतिः? इति । आपः इति होवाच ॥ ३ ॥

கா ஸாம்நோ கதி:? இதி । ஸ்வர: இதி ஹோவாச। ஸ்வரஸ்ய கா கதி:? இதி । ப்ராண: இதி ஹோவாச । ப்ராணஸ்ய கா கதி:? இதி । அன்னம் இதி ஹோவாச । அன்னஸ்ய கா கதி:? இதி । ஆப: இதிஹோவாச ॥

i. சிலகர்:- நல்லதையும் கெட்டதையும் எரிப்பதில் சமமாயிருப்பதால் ஸாம என்று அக்னியின் பெயர். அவன் ஸாமத்தின் அபிமானி. ஸாம்ன: காகதி:-அந்த ஸாமத்தின் கதி யாது? அதாவது அக்னி மோக்ஷத்தில் யாரை அடைகிறுன்? தால்ப்யர்:– அக்னிஸ்வரன் என்ற வருணனை அடைகிறுன். ஸ்வ–ஸ்வதந்திரனை ஹரி ரமதே அஸ்மின்–இந்த வருணனிடம் மகிழ்பவன் ஆதலால் அப்பெயர். மேலும் அவன் ஸ்வரத்தின் அபிமானி.

ii. சிலகர்;– அந்த வருணன் யாரை அடைகிறுன்? தால்ப்யர்:–ப்ராணனை(சூரியனை) அடைகிறுன். சூர்யனுக்கு ப்ராணன் என்று பெயர். தன் உதயத்தால் உலகை, ப்ரணேத்ருவாத்–நடத்துபவன் அல்லவா! பிரம்மசூ. 2–4–13 தாஸப்ராணர்களில் ஐவர் உண்டு. அதில் ப்ராணவாயுவின் அபிமானியானவன்.

iii. சிலகர்;– அந்தப்ராணன் (சூரியன்) யாரை அடைகிறுன்? தால்ப்யர்:– அவன் அன்னத்தை (தக்ஷப் பிரஜேசுவரனை)அடைகிறுன்.அவன் சிவனுல்சொல்லப்பட்டபடியால் அன்னம் எனப்படுபவன் மேலும் அன்னத்தின அபிமானியாவான்.

iv. சிலகர்:– அந்த அன்னம் (தக்ஷன்) யாரை அடைகிறுன்? தால்ப்யர்–அவன் ஆப: (இந்திரனை) அடைகிறுன். ஆபாலனுத்–(மூவுலகங்களையும்) நன்கு பாதுகாபபதால் ஆப: என்று இந்திரனுக்குப் பெயர். ஆப : என்ற ஜலத்துக்கு அவனும் அபிமானியாவான்.

1–8–4. v. சிலகர்:- அந்த ஆப:(இந்திரன்) யாரை அடைகிறான்? தால்ப்யர்:–அவன் அஸௌ லோக:–இந்த ஸ்வர்க்கலோகம் என்ற (சிவனை) அடைகிறான். அஸௌ = முக்கிய ப்ராணனிடம் அண்டியிருப்பதாலும், லோக: (லுக் ப்ரகாசே) சுத்தஸ்படிக தேகத்துடன் பிரகாசிப்பதாலும் சிவனுக்கு ஸ்வர்க்கலோகம் எனப்பெயர். மேலும் அவன் இந்திரனின் குருவும் ஸ்வர்க்கலோக அபிமானியும் ஆவான்.

vi. சிலகர்:– அந்த ஸ்வர்க்கமென்ற சிவன் யாரை அடைகிறான்? தால்ப்யர்:– சிவனுக்குமேல் யார் என்று வினவக்கூடாது. ஏனெனில், நாம் சிவனையே ஸாமம் என்றும் அவனே ஸர்வோத்தமன் என்றும் ஸ்தாபித்து உள்ளோம். ஸாம என்பது ஸ்வர்க்க ஸம்ஸ்தாவம் ஹி-ஸ்வர்க்கலோகம் என்ற சிவனையே அல்லவா ஸர்வோத்தமன் எனத்துதிக்கிறதல்லவா!

1–8–5. சிலகர்:– தால்ப்யரே! நீர் கூறும் சிவனின் ஸர்வோத்தமத்வம் ஸ்தாபிக்கப்பட்டதல்ல. இப்பொழுது யாராவது ஒருவர் 'இவ்வாறு கூறும் உமது தலை வெடித்துக் கீழே விழும்', எனக் கூறினால், உமது தலை நிச்சயம் வெடித்து விழும். நான் உமது நண்பனானதால் அப்படிச் சொல்லவில்லை, சொல்லவும் மாட்டேன்.

1–8–6 vii தால்ப்யர்–தாங்கள் அனுமதித்தால் தங்களிடமிருந்து அறிந்துகொள்கிறேன், என்றார். சிலகரும் 'அறிவீராக' என்றார்.

viii. தால்ப்யர்:–இந்த ஸ்வர்க்கலோகம் என்ற சிவன் யாரை அடைகிறான்? சிலகர்:– அயம் லோக:-பூலோகம் என்ற பிரம்மாவை அடைகிறான். ஜீவோத்தமரானதால் அயம் என்றும் உத்தமராகப்பிரகாசிப்பதால் லோக: என்று

பூலோகத்தின் அபிமானியாதலால் இந்தலோகம் என்றும் பிரம்மாவின் பெயர்களாகும்.

ix. தால்ப்யர்:—இந்த உலகம் என்ற ப்ரம்மா யாரை அடைகிறார்? சிலகர்:— இந்தலோகமே எல்லா லோகங்களுக்கும் ஆதாரமாயிருப்பதால் அப்பெயர்கொண்ட பிரம்மாவுக்குமேல் யார் என்று வினவக்கூடாது. நாம் பிரம்மாவையே ஸாமத்தால் கூறப்படுபவன் என்றும் ப்ரதிஷ்டாஸம்ஸ்தாவம்-அவரே ஸர்வோத்தமர் என்றும் ஸ்தாபித்துள்ளோம். ஸாமமும் அவரே ஸம்ஸ்தாவம் எனக்கூறுகிறது.

1–8–7

அப்பொழுது ஜிபிலரின் புத்திரனான ப்ரவாஹணன் என்ற அரசன் சிலகரே! நீர் கூறும் ப்ரம்மாவின் ஸர்வோத்தமத்வம் தீர்மானமானதல்ல. இப்பொழுது யாராவது ஒருவர், 'இவ்வாறு கூறும் உமது தலை வெடித்துக் கீழே விழும்' என்று கூறினால், உமது தலை நிச்சயம் வெடித்து விழும், 'நான் உமது நண்பனானதால் அப்படிக் கூறவில்லை. கூறவும் மாட்டேன்'' என்றான்,

சிலகர்;- தாங்கள் அனுமதித்தால் தங்களிடமிருந்து அறிந்து கொள்கிறேன்' என்றார். ப்ரவாஹணன் :- 'அறிவீராக' என்றான்.

1–8–7 முற்றிற்று.

## அத்தியாயம் 1 கண்டம் 9 மந்திரங்கள் 3

1–9–1. ix. சிலகர்:- இந்தப் பூலோகம் என்ற பிரம்மா யாரை அடைகிறார்? ப்ரவாஹணன்:- ஆகாசம் என்ற விஷ்ணுவை அடைகிறார். ஆ - நன்கு எங்கும், காசதே- பிரகாசிக்கிறார் ஆதலால் ஆகாசம் என்று விஷ்ணுவுக்குப் பெயர். அவருடைய மகிமைகள்:- இந்த எல்லா பிரம்மா

முதலிய ஜீவர்களும் அவரிடமிருந்தே பிறக்கின்றனர். அவராலேயே அழிக்கப்படுகின்றனர். அவரே இந்த எல்லா ஜீவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர். அவரே அனைவர்க்கும் முக்கிய ஆச்ரமாயிருப்பவர். பிரசித்தி பெற்ற இவரே, உயர்ந்தவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்.

(கீழுள்ள எல்லோரைக் காட்டிலும்) உத்தமனான பாரதீ 'பரா'. அவளைக் காட்டிலும் உத்தமர் வாயுபரா + உ = 'பரோ'. அவரைக் காட்டிலும் உத்தமளான லக்ஷ்மீ 'பரோவரம்' அவளைக் காட்டிலும் உத்தமர் விஷ்ணு 'பரோவரீயான்' அல்லது பாரோவரீயகம். உத்கீத:- உயர்ந்தவராயும் அனைவராலும் பாடப்படுபவராயும் உள்ளவர். அனந்த:- எங்குமுள்ளவன். எல்லா தேசங்களிலும் எல்லா காலங்களிலும் எல்லா குணங்களினுலும் நிறைந்தவன்.

N. B.: பிரம்மசூத்திரம் 1–1–22 ஓம் ஆகாசஸ்தல்லிங்காத் ஓம் என்ற சூத்திரத்திற்கு இதுவே விஷய வாக்ய மாகும். ஸாம ஸம்ஹிதையில்:-

பரஸ்மாத் உத்தமம்,பரோ இதி ப்ரோக்தம்தத; பரம் ।
பராவரம் பரம் தஸ்மாத்,ப்ரோக்தம் பாரோவரீயகம்॥

1–9–2 இதை அறிந்தவனின் பலனைக் கூறுகிறார்.

परोवरीयो हास्य भवति । परोवरीयसो हि लोकान् जयति उ । य एतमेवं विद्वान् परोवरीयांसं उद्गीथं उपास्ते ॥ २ ॥

பரோவரீயோ ஹாஸ்ய பவதி । பரோவரீயஸோ ஹி லோகான் ஜயதிஉ । ய ஏதமேவம் வித்வான் பரோவரீயாம்ஸம் உத்கீதம் உபாஸ்தே ॥

ய:-யார்,ஏதம் பரோவரீயாம்ஸம்- இந்த உத்தமோத்தமரான, உத்கீதம்-ஸ்ரீ ஹரியை, ஏவம் வித்வான்-இம்மாதிரி அறிவானே,உபாஸ்தே-உபாஸிக்கிறானே, அஸ்ய-இவனுக்கு பரோவரீய:- உத்தமோத்தமனான பகவான், (ரக்ஷகனாக) பவதி-ஆகிறான். பரோவரீயஸ: லோகான்-உத்தமோத்தமமான விஷ்ணு லோகங்களை, ஜயதிஉ (ஏவ)-நிச்சயம் அடைகிறான். ஹ-இது பிரசித்தமானது.

1–9–3

तं हैतं अतिधन्वा शौनकः उदरशाण्डिल्याय उक्त्वा उवाच । यावन्तः एनं प्रजायां उद्गीथं वेदिष्यन्ते । परोवरीयो ह एभ्यः तावत् अस्मिन् लोके जीवनं भविष्यति । तथा अमुष्मिन् लोके इति । स य एतमेवं विद्वान् उपास्ते । परोवरीय एव हास्य (अस्मिन् लोके) जीवनं भवति । तथा अमुष्मिन् लोके । लोके इति । लोके लोके इति ॥३

தம் ஹ ஏதம் அதிதன்வா சௌனக: உதரசாண்டில்யாய உக்த்வா உவாச। யாவந்த: ஏனம் ப்ரஜாயாம் உத்கீதம் வேதிஷ்யந்தே। பரோவரீய ஹ ஏப்ய?, தாவத், அஸ்மின் லோகே ஜீவனம் பவிஷ்யதி। ததா அமுஷ்மின் லோகே இதி। ஸ ய ஏதம் ஏவம் வித்வான் உபாஸ்தே। பரோவரீய ஏவ ஹாஸ்ய அஸ்மின் லோகே ஜீவனம் பவதி। ததா அமுஷ்மின் லோகே। லோகே இதி। லோகே லோக இதி॥

தம்-பிரசித்தமான, ஏதம்-இந்த ஆகாசம் என்ற உத்கீதம்-உயர்ந்தவனையும்,கானம் செய்யப்படுபவனும் எங்கும் இருப்பவனுமான, விஷ்ணுவை சௌனக:-சுனகரின் புத்திர

ரான,அதிதன்வா என்ற முனிவர், உதரசாண்டில்யர் என்ற முனிவருக்கு, உக்த்வா - சொல்லிவிட்டு, பின்வருமாறு அதன் பலனே, உவாச-கூறினர். யே-எவர்கள்,ஏனம்-இந்த உத்கீதர் என்ற விஷ்ணுவை, ப்ரஜாயாம்-ஸாதுக்களின் கூட்டத்திற்கு வேதிஷ்யந்தே - த்ரேதாயுகத்தில் தெரிவிக்கிருர்களோ, ஏப்ய:- இவர்களுக்கு, யாவத்த:- எவ்வளவு காலம் த்வாபரம் முதலியனவோ,தாவத்-அவ்வளவு காலம் அஸ்மின்லோகே - இவ்வுலகில், ஜீவனம் பவிஷ்யதி - உயிர் வாழலாம். ததா - அவ்வாறே, அமுஷ்மின்லோகே - பரலோகத்திலும் வாழ்வு உண்டு. இதி என்று (சொன்னர்). ஸ:- பிரசித்தனை, ய:- எந்த அதிகாரி, ஏதம் - இந்த விஷ்ணுவை, ஏவம் வித்வான் – இம்மாதிரி அறிந்து, உபாஸ்தே - உபாஸிக்கிருனே, அஸ்ய - இவனுக்கு, பரோவரீய: ஏவ - உத்தமோத்தமனை ஆகாசம் என்ற விஷ்ணுவே அதாவது அவன் அருளாலேயே, இவ்வுலகிலும் பரலோகத்திலும் நீண்ட காலம் உயிர் வாழ்வான்.திருப்பிச் சொன்னது ஆதரத்தால். 1–9–3 முற்றிற்று.

அத்யாயம் 1 கண்டம் 10 மந்திரங்கள் 8

1–10–1 ப்ரஸ்தாவம், ப்ரதிஹாரம், உத்கீதம் என்ற ஸாமங்களிலுள்ள உபாஸனேயைக் கூறும்முன் ஓர் கதையை சொல்கிருர்.

मटचीहतेषु कुरुषु । आटक्या सह जायया । उषस्तिर्ह चाक्रायण: इभ्यग्रामे प्रद्राणक: उवास । सह इभ्यं कुल्माषान् खादन्तं बिभिक्षे ॥१॥

மடசீஹதேஷு குருஷு। ஆடக்யா ஸஹ ஜாயயா। உஷஸ்திர்ஹ சாக்ராயண:। இப்யக்ராமே ப்ரத்ராணக: உவாஸ। ஸஹ இப்யம் குல்மாஷான் காதந்தம் பிபிக்ஷே ॥

குருஷு-குருதேசம்(குரு தேசத்தினர்கள்) மடசீ-பெரிய கல் மழையால் (ஆலங்கட்டி) ஹதேஷு - அழிக்கப்பட்ட பொழுது(பஞ்சத்தால்)ஆடக்யா ஸஹ ஜாயயா-சமீபத்தில் யௌவனமடைந்த மனைவியுடன், சாக்ராயண:-சக்ராயணரின் புத்திரரான(ஓர்சக்கரத்தை இருப்பிடமாகக்கொண்ட) உஷஸ்தி: என்பவர், இப்யக்ராமே-ஓர் பணக்காரனின் கிராமத்தில் (யானைகளின் தலைவனின் கிராமத்தில்) ப்ரத்ராணக:- அன்ன பானத்திற்கு திரிந்து கொண்டு உவாஸ-வசித்து வந்தார். ஸ:- அவர், குல்மாஷான் - ஓர் வகை தான்யச் சுண்டலை, காதந்தம் - தின்று கொண்டிருந்த, இப்யம் - பணக்காரனை (யானைகளின் தலைவனை) பிபிக்ஷே-பிச்சை கேட்டார். ஹ—ஐயோ பாவம் .

1–10–2

तँहोवाच । नेतोऽन्ये विद्यन्ते यच्च ये मे इमे उप- निहिताः इति । एतेषां मे देहि इति होवाच । तान् अस्मै प्रददौ । हन्त अनुपानं इति । उच्छिष्टं वै मे पीतं स्यात् इति ह उवाच । न स्वित् एतेऽपि उच्छिष्टाः? इति ॥२॥

தகும்ஹோவாச। நேதோ அன்யே வித்யந்தே। யச்ச யேமே உபநிஹிதா: இதி। ஏதேஷாம் மே தேஹி இதி ஹோவாச। தான் அஸ்மை ப்ரததௌ: ஹந்த அனுபானம் இதி। உச்சிஷ்டம் வை மே பீதம் ஸ்யாத் இதி ஹோவாச। நஸ்வித் ஏதே அபி உச்சிஷ்டா:? இதி ॥

தம் — அவரிடம் (அம்மனிதன்) யே-எவை, மே-எனக்காக, உபநிஹிதா:-அருகில் வைக்கப்பட்டுள்ளனவோ இத। அன்யே - இவைகளைத் தவிர வேறு, நவித்யந்தே - இல்லை. யத் ச - அதனாலும் - (உமக்குத் தரும்படியாக

இல்லை) இதி உவாசஹ - என்று தெளிவாகக் கூறினன். ஏதேஷாம் - இவைகளிலேயே, மே தேஹி - எனக்குக் கொடும், இதி உவாசஹ-என்று உஷஸ்தி கேட்டார். அவன் தான்-அவைகளை, அஸ்மை - இவருக்கு, ப்ரதெதௌ-நன்கு தந்தான். மேலும் கையிலுள்ள ஜல பாத்திரத்திலிருந்து, அனுபானம் - ஜலத்தையும் குடியுங்கள், இதி - என்ருன். ஹந்த-சந்தோஷம் ஆச்சர்யம். உஷஸ்தி, அந்த ஜலத்தைக் குடித்தால், மே-என்னல், உச்சிஷ்டம்-குடித்த மீதியான எச்சில், பீதம் ஸ்யாத்-குடிக்கப்பட்டதாக ஆகும். வை-சாஸ்திரத்தில் பிரசித்தம் ஆகையால் நான் குடிக்க மாட்டேன்.'' இதிஉவாசஹ.என்று சொன்ஞர். அதற்கு அவன், ஏதே அபி-இந்த சுண்டல்கூட (நான் தின்ற மீதி யானதால்) உச்சிஷ்டா:நஸ்வித்-எச்சில் அல்லவா என்ன? (எச்சிலேதான்) என்று கேட்டான். இம்மாதிரி கேட்கும் (ஸ்வரத்துக்கு) குரலுக்கு காகுஸ்வரம் எனப்பெயர் (8-8-3)

अवज्ञा सूचको नीच-स्वरः काकुः इतीरितः ।
तात्पर्यं न किल स्वार्थे काक्वा वाक्यं यदुच्यते ॥

அவமதிப்பைக் குறிப்பிடும் தாழ்ந்த ஸ்வரத்துக்கு காகு எனப்பெயர். அக்குரலால் சொல்லப்பட்டதற்கு எதிரிடை யான அர்த்தம் கொள்ளவேண்டும். 2. கீதை 2-14 மாத்ராஸ்பர்சாஸ்து என்ற சுலோகம் காகுஸ்வரத்தில் கூறப் பட்டதைக் கவனிக்க. (3) பிரம்மசூத்திரம் 3-4-28 ஓம் ஸர்வான்ன அனுமதிஸ்து ப்ராணுத்யயே தத்தர்சனுத் ஓம் என்பதற்கு இந்தக்கதை விஷயவாக்யமாகவுளது.

1-10-3

न वा अजीविष्यं इमान् अखादन् । इति होवाच । कामो मे उदपानं इति । सह खादित्वा अतिशेषान्

जायायै आजहार । सा अग्रे एव सुभिक्षा बभूव । तान् प्रतिगृह्य निदधौ ॥३॥

நவா அஜீவிஷ்யம் இமான் அகாதன் । இதி ஹோவாச । காமோ மே உதபானம் இதி । ஸ ஹ காதித்வா அதிசேஷான் ஜாயாயை ஆஜஹார । ஸா அக்ரே ஏவ ஸுபிக்ஷா பபூவ । தான் ப்ரக்ஹ்ய நிததௌ ॥

உஷஸ்தி அவனிடம், இமான்-உமது எச்சிலான இந்த சுண்டலே, அகாதன்-சாப்பிடாவிட்டால், நவை அஜீவிஷ்யம்-உயிர்போயே இருக்கும். உதபானம்-ஜலம் குடிப்பது, மே காம:-என் விருப்பத்தை யொட்டியுள்ளது. மழை பெய்துள்ளதால் எங்கும் ஜலம் கிடைக்கும்', இதி ஹ உவாச-என்று சொன்னார். ஸ:-அந்த உஷஸ்தி, சுண்டலைத் தின்றுவிட்டு, அதிசேஷான்-மீதியை, ஜாயாயை-மனைவியின் பொருட்டு, ஆஜஹார-கொண்டுவந்தார். ஸா-அவள், அக்ரே ஏவ-இவர் வருவதற்கு முன்னரே, ஸுபிக்ஷா-நல்ல (உச்சிஷ்டமல்லாத) பிச்சையைப்பெற்று, பசியைப்போக்கி கொண்டவளாக, பபூவ-இருந்தாள். தான்-அவற்றை, ப்ரதிக்ருஹ்ய-கணவரின் கையிலிருந்து பெற்றுக்கொண்டு, நிததௌ-சேமித்து வைத்தாள்.

1-10-4

स ह प्रातः संजिहानः उवाच । यत् बत अन्नस्य लभेमहि । लभेमहि धनमात्राम् । राजाऽसौ यक्ष्यते । स मा सर्वैः आर्त्विज्यैः वृणीत इति ॥४॥

ஸஹப்ராதஷ் ஸஞ்ஜிஹான: உவாச । யத் பத அன்னஸ்ய லபேமஹி । லபேமஹி தனமாத்ராம் । ராஜா அஸௌ யக்ஷ்யதே । ஸ: மா ஸர்வை: ஆர்த்விஜ்யை: வ்ருணீத இதி ॥

ஸ:-அந்த உஷஸ்தி, ப்ராத:-காலையில், ஸஞ்ஜிஹான:-படுக்கையிலிருந்து எழுந்ததும், உவாச-மனைவியிடம் சொன்னார். பத-ஐயோ தினந்தோறும் சாப்பாட்டிற்கு துக்கப்படவேண்டியிருக்கிறதே! அன்னஸ்ய (மாத்ராம்) கொஞ்சம் அன்னத்தை, லபேமஹி(சேத்)-நாம் அடைந்து விட்டால், (அதைச்சாப்பிட்டு உயிர்பெற்று) தனஸ்ய மாத்ராம்-பணக்குவியலை, லபேமஹி-அடைவோம். யத்-எவ்வாறென்றால், அஸௌராஜா (தூரத்திலுள்ள) அந்த, அரசன், யக்ஷ்யதே-யாகம் செய்யப்போகிறான். ஸ:-அவன் மா-என்னை,ஸர்வை:ஆர்த்விஜ்யை:-எல்லா ரித்விக்குகளின் கார்யங்களைச் செய்யுமாறு, வ்ருணீத-வரிப்பான், இதி-என்று ||

1-10-5

तं जाया उवाच । हन्त पते इमे एव कुल्माषाः इति । तान् खादित्वा अमुं यज्ञं विततं एयाय । तत्र उद्गातॄन् आस्तावे स्तोष्यमाणान् उप उपविवेश । सह प्रस्तोतारं उवाच ॥

தம் ஜாயா உவாச । ஹந்த பதே இமே ஏவ குல்மாஷா: இதி । தான் காதித்வா அமும் யஜ்ஞம் விததம் ஏயாய । தத்ர உத்காத்ரூன் ஆஸ்தாவே ஸ்தோஷ்யமாணான் உப உபவிவேச । ஸஹ ப்ரஸ்தோதாரம் உவாச ||

தம்-அவரிடம், ஜாயா-மனைவி, உவாச:பின்வருமாறு கூறினாள். ஹந்த-சந்தோஷம், பதே!-கணவரே! இமே ஏவகுல்மாஷா:-இதோ இவைகளே நேற்று நீங்கள் என்னிடம் கொடுத்த சுண்டல்' இதி-என்று கொடுத்தாள். தான்-அதை, காதித்வா:தின்றுவிட்டு விஸ்த்ருதம்-விஸ்தாரமாக நடந்துகொண்டிருந்த, அமும்யஜ்ஞம் - அந்த

யாகத்தை ஏயாய—அடைந்தார், தத்ர-அங்கு, உத்காத்ருன்-உத்காதா என்ற ரித்விக்கு, ஆஸ்தாவே—நன்கு துதிக்கும் கர்மத்தில் ஸ்தோஷ்யமாணன்-துதிக்கப்போகிறவர்களுடைய, உப-அருகில், உபவிவேச-உட்கார்ந்தார். ஸ: அவர், ப்ரஸ்தோதாரம்-அப்பெயர் கொண்ட ரித்விக்கிடம் உவாச-கூறியதாவது,

1-10-6

प्रस्तोतः या देवता प्रस्तावं अन्वायत्ता । तां चेत् अविद्वान् प्रस्तोष्यसि । मूर्धा ते विपतिष्यति इति ॥ ६ ॥

ப்ரஸ்தோத: । யா தேவதா ப்ரஸ்தாவம் அன்வாயத்தா । தாம் சேத் அவித்வான் ப்ரஸ்தோஷ்யஸி। மூர்த்தா தே விபதிஷ்யதி ॥ இதி ॥6॥

ப்ரஸ்தோத:-ஹேப்ரஸ்தோதாவே! யாதேவதா-எந்த தேவதை, ப்ரஸ்தாவம் அன்வாயத்தா-ப்ரஸ்தாவ ஸாமத்தால் கூறப்படுகிறதோ, தாம்-அதை, அவித்வான்-அறியாமல், ப்ரஸ்தோஷ்யஸிசேத்-துதிப்பீராகில், தேமூர்த்தா-உமது தலை, விபதிஷ்யதி-நிச்சயம் வெடித்துவிழும், இதி-என்று।

1-10-7

एवमेव उद्गातारमुवाच । उद्गातः या देवता उद्गीथं अन्वायत्ता । तां चेत् अविद्वान् उद्गास्यसि । मूर्धा ते विपतिष्यति इति ॥

ஏவமேவ உத்காதாரம் உவாச । உத்காத: । யா தேவதா உத்கீதம் அன்வாயத்தா। தாம்சேத் அவித்

வான் உத்காஸ்யஸி। மூர்த்த தே விபதிஷ்யதி இதி ॥7॥

ஏவம்ஏவ-இம்மாதிரியே, உத்காதாரம்-உத்காதாவிடம் உவாச-கூறினர். உத்காத:-ஹே உத்காதாவே! யாதேவதா-எந்த தேவதை உத்கீதம்அன்வாயத்தா-உத்கீத ஸாமத்தால் கூறப்படுகிறதோ, தாம்-அதை அவித்வான்-அறியாமல், உத்காஸ்யஸிசேத்-துதிப்பீராகில், மூர்த்நாதே (நிச்சயம்) விபதிஷ்யதி-உமது தலை வெடித்து விழும் என்று॥

1-10-8

एवमेव प्रतिहर्तारमुवाच । प्रतिहर्तः या देवता प्रतिहारं अन्वायत्ता । तां चेत् अविद्वान् प्रतिहरिष्यसि । मूर्धा ते विपतिष्यति इति । ते ह समारताः तूष्णीं आसांचक्रिरे ॥७॥

ஏவமேவ ப்ரதிஹர்த்தாரமுவாச। ப்ரதிஹர்த்த: யா தேவதா ப்ரதிஹாரம் அன்வாயத்தா। தாம் சேத் அவித்வான் ப்ரதிஹரிஷ்யஸி। மூர்த்தா தே விபதிஷ்யதி இதி। தே ஹ ஸமாரதா: தூஷ்ணீம் ஆஸாம் சக்ரிரே ॥

ஏவமேவ-இம்மாதிரியே, ப்ரதிஹர்த்தாரம்-பிரதிஹர்த்தாவிடம், உவாச-சொன்னர். ப்ரதிஹர்த்த:- ஹேப்ரதிஹர்த்தாவே! யாதேவதா-எந்த தேவதை, ப்ரதிஹாரம் அன்வாயத்தா-ப்ரதிஹார ஸாமத்தால் கூறப்படுகிறதோ, தாம்-அதை, அவித்வான்-அறியாமல், ப்ரதிஹரிஷ்யஸிசேத்-துதிப்பீராகில், தே மூர்த்தா விபதிஷ்யதி - உமது தலை நிச்சயம் வெடித்து விழும் இதி-என்று. தே-அந்த மூவரும், ஸமாரதா:- அவரவர்களின் காரியங்களிலிருந்து விலகி, தூஷ்ணீம்-பேசாமல், ஆஸாம் சக்ரிரே-இருந்தனர் ॥

1-10-8 முற்றிற்று.

அத்யாயம் 1 கண்டம் 11 மந்திரங்கள் 8

1–11–1 எதற்காக இந்தக் கதை கூறப்பட்டதோ அந்த உபாஸனையைக் கூறுகிறார்,

अथ ह एनं यजमानः उवाच । भगवंतं वै अहं विविदिषाणि इति । उषस्तिः अस्मि चाक्रायणः । इति होवाच । सहोवाच । भगवंतं वै अहं एभिः सर्वैः आर्त्विज्यैः पर्येषिषं । भगवतो वै अहं अवित्त्वा अन्यान् अवृषि । भगवांस्तु एव मे सर्वैः आर्त्विज्यैरिति ॥ १ ॥

அத ஹஏனம் யஜமான: உவாச। பகவந்தம் வை அஹம் விவிதிஷாணி இதி। உஷஸ்தி: அஸ்மி சாக்ராயண:। இதி ஹோவாச। ஸஹோவாச। பகவந்தம் வை அஹம், ஏபி: ஸர்வை: ஆர்த்விஜ்யை: பர்யேஷிஷம்। பகவதோ வை அஹம் அவித்வா அன்யான் அவ்ருஷி; பகவாம்ஸ்து ஏவ மே ஸர்வை ஆர்த்விஜ்யை: இதி ॥

இது சுலபமாகப் புரியும் என்று பதவுரை தரவில்லை. பிறகு இவரை யாகம் செய்யும் அரசன், பின்வருமாறு கேட்டான். (வை-தங்களுடைய பூஜ்யத்வம் பிரசித்தம்) நான் (தங்கள் பெயர் என்னவென்று)அறிய விரும்புகிறேன் அவர், உஷஸ்தி: எனப் பெயர். சக்ராயணரின் புத்திரர் என்று கூறினார். அரசன் பூஜ்யரான தங்களையே இந்த எல்லா ரித்விக்குகளின் கார்யத்திற்காகத் தேடினேன். தாங்கள் இருந்த இடத்தை அறியாததால், மற்றவர்களை வரித்தேன். இப்போது தாங்கள் கிடைத்து விட்டதால், பூஜ்யரான தாங்களே து - விசேஷமாக அதாவது எல்லா ரித்விக் கார்யங்களுக்கும் வரிக்கப்படுகிறீர் என்று கூறினான். வை-இது பிரசித்தம்,

1–11-2

तथेति । अथ तर्हि एते एव समतिसृष्टाः स्तुवंतां यावत् तेभ्यो धनं दद्याः । तावत् मम दद्याः इति । तथेति ह यजमानः उवाच ॥ २ ॥

ததேதி। அததர்ஹி ஏதே ஏவ ஸமதிஸ்ருஷ்டா: ஸ்துவந்தாம்। யாவத் தேப்யோ தனம் தத்யா:। தாவத் மம தத்யா: இதி। ததேதிஹ, யஜமான: உவாச ||

ததா இதி-அப்படியே ஆகட்டும் (என உஷஸ்தி ஒப்புக் கொண்டு,) (நான் அங்கீகரிப்பதால் இந்த பிராம்மண த்ரோஹம் ஏற்படும்,அங்கீகரிக்காவிட்டால் எனக்குப்பணம் கிடைக்காது என்று யோசித்து மறுபடியும்), அததர்ஹி-அப்படியானல், ஸ ம தி ஸ்ருஷ்டா:- உன்னால் முன்னரே வரிக்கப்பட்டவர்களும், இப்போது என்னால் அனுமதிக்கப் படுபவர்களுமான, இந்த ப்ராம்மணர்களே, ஸ்துவந்தாம்-துதிக்கட்டும். தேப்ய:- அவர்களுக்கு, யாவத் தனம்-எவ்வளவு பணம், தத்யா:- தருவீரோ, தாவத்-அவ்வளவு பணம், மம தத்யா:- எனக்குத் தருவீராக, இதி-என்ருர். யஜமான:- யாகம் செய்யும் அரசன், ததா இதி-அப்படியே ஆகட்டும் என, உவாச-சொன்னுன். ஹ-இவ்விரு கோஷ்டி பிராம்மணுபராதம் தனக்கு ஏற்படவில்லை என்று அரச னுக்குச் சந்தோஷம்.

1–11–3 (இங்கு முன்வந்த பதங்களே பெரும்பாலும் உள்ளன. ஆதலால் மூலம் முழுவதும் தராமல் பொழிப் புரையே தரப்படுகிறது.)

பிறகு இந்த உஷஸ்தியை ப்ரஸ்தோதா அணுகினுன். ப்ரஸ்தாவ ஸாமத்தின் தேவதை யார் என்று அறியாமல்

துதித்தால் என்தலைவெடித்துவிழும் என்று கூறினீர். அதன் தேவதை யார்? தாங்கள் எனக்குச் சொல்வீராக என வேண்டினான்.

1–11–4 உஷஸ்தி:– முக்யப்ராணனின் அந்தர்யாமியான ப்ராணன் என்ற விஷ்ணுவே ப்ரஸ்தாவ ஸாமத்தின் தேவதை. ப்ரஸ்தூயந்தே அனேன இதி ப்ரஸ்தாவ: । இவனையே எல்லா ஜீவராசிகளும் தூக்கத்திலும் பிரளயத்திலும் ப்ரவேசிக்கிறார்கள். மரணத்தில் விட்டுவிடுகின்றனர். சிருஷ்டிகாலத்தில்பிறக்கின்றனர்.

1–11–5 பிறகு இந்த உஷஸ்தியை உத்காதா அணுகினான் உத்கீத ஸாமத்தின் தேவதையை அறியாமல் துதித்தால் என்தலை வெடித்து விழும் என்றீரே, அந்த தேவதையைத் தாங்கள் எனக்குக் கூறுவீராக என்றான்.

1–11–6 உஷஸ்தி:– சூர்யனின் அந்தர்யாமியான ஆதித்யன் என்ற விஷ்ணுவே உத்கீத ஸாமத்தின் தேவதை. உலகில் எல்லா ஸங்கீதவித்வான்களின் கானத்தை முக்கியமாக அனுபவிப்பவன் இவனே. இவனையே எல்லோரும் உயர்ந்தவன் என்று உரக்கக் கூறுகின்றனர்.

1–11–7 பிறகு அந்த உஷஸ்தியை, ப்ரதிஹர்த்தா அணுகினான். ப்ரதிஹார ஸாமத்தின் தேவதை யார் என்று அறியாமல் துதித்தால் என்தலை வெடித்து விழும் என்றீரே, அந்த தேவதையை எனக்குத் தாங்கள் கூறுவீராக என வேண்டினான்.

1–11–8 உஷஸ்தி:– சாதத்தில் மாத்திரமல்ல நாம் சாப்பிடும் எல்லாப் பொருள்களிலுமுள்ள அன்னம் என்று பெயருள்ள விஷ்ணுவே ப்ரதிஹார ஸாமத்தின் தேவதை. ப்ரதிஹாரம் என்றால் போஜனம் என்று அர்த்தம். சாப்பிடுபவர்கள் அந்த விஷ்ணுவையே ஆசிரயமாகக் கொண்டு உயிர்வாழ்கின்றனர்.

N.B.: நான் வந்தபோது இந்த மூன்று பகவத் ரூபங்களை அறியாமல் நீங்கள் துதித்தபோது நான் உங்கள் தலைகள் வெடித்துவிழும் என்று சொல்லியிருந்தால் அப்படியே ஆகியிருக்கும். நல்லவேளையாக அந்த அனர்த்தம் ஏற்படவில்லை என்றார். 1–11–8 முற்றிற்று.

அத்யாயம் 1. கண்டம் 12. மந்திரங்கள் 2

1–12–1 முந்திய கண்டங்களில் உத்கீதோபாஸனத்தால் பாபமின்மை, முக்தியில் ஆனந்தப்பெருக்கு, பலபுத்திரப் பேறு, அன்னபானம் முதலிய பலன்களுண்டு எனப்பட்டது. இங்கு அந்த உபாஸனையால் அன்னமும் கிடைக்கும் என்கிறார். ஒரு கதையின் மூலம்.

ॐ अथातः शौवः उद्गीथः । तत् ह बको दाल्भ्यः ग्लावो वा मैत्रेयः स्वाध्यायं उद्वव्राज । तस्मै श्वा श्वेतः प्रादुर्बभूव । ते अन्ये श्वानः उपसमेत्य ऊचुः । अन्नं नो भगवान् आगायतु । अशनायाम वै इति ॥ १ ॥

ஓம் அதாத: சௌவ:உத்கீத: । தத்ஹ பகோ தால்ப்ய: க்லாவோ வா மைத்ரேய: ஸ்வாத்யாயம் உத்வவ்ராஜ। தஸ்மை ச்வா ச்வேத: ப்ராதுர் பபூவ। தே அன்யே ச்வான: உபஸமேத்ய ஊசு: । அன்னம் நோ பகவான் ஆகாயது। அசனாயாமவை இதி ॥

अथ - இது வேறு வித்யா, அத:–உத்கீத உபாஸனைப் பலனைப் பெற்றவர்களிருப்பதால் சௌவ:–(ச்வா=நாய்)ஓர் நாயினால் சொல்லப்பட்டதும், மற்ற நாய்களால் அனுஷ்டிக்கப்பட்டதுமான சௌவ என்ற, உத்கீத:-உத்கீதன் என்ற விஷ்ணுவின் உபாஸனை (கூறப்படுகிறது). தத்=ததா-

ஓர் சமயம். தால்ப்ய:-தல்பரிஷியின் புத்திரனும், பக:– என்ற பெயருள்ளவனும், வா-அல்லது. மைத்ரேய:-மித்ரா என்பவள் க்லாவவத்-அவனைக்கூப்பிட்டபோது கல்போல பேசாமலிருந்ததால் க்லாவன் என்ற பெயருடையவனுமானவன், ஸ்வாத்யாயம்–வேதாத்யயனத்தின் பொருட்டு, உத்வவ்ராஜ-எங்கேயோ சென்றான். தத்=ததா அப்பொழுது தஸ்மை-அவனையும்(சிவன் முதலிய தேவர்களையும் அனுக்ரஹிப்பதற்கு, முக்யப்ராணன், ச்வா–நாயின் உருவங் கொண்டு, ச்வேத:- ச்வபி : இத:- நாய்களின் உருவங் கொண்ட, சிவன் முதலிய தேவர்களுடன் சேர்ந்து, ப்ராதுர் பபூவ–அவன்முன் தோன்றினான். தம்–அந்த நாயின் ரூபமுள்ள வாயுவின், உப–சமீபத்திற்கு, அன்யே ச்வான:– நாயுருவமுள்ள மற்ற தேவர்களும், ஸமேத்ய–வந்து, ஊசு:- பின்வருமாறு கூறினர். பகவான்–ஆறு குணங்கள் நிறைந்த பூஜ்யரான தாங்கள், ந:–எங்களுக்கு, அன்னம்–சாதத்தை யுத்தேசித்து, ஆகாயது–நன்றாகப் பாடுவீராக. அதாவது போஜனம் கிடைப்பதற்குக் காரணமான உபாஸனையை உபதேசிப்பீராக. அசனாயாமவை–பசியினால் சாப்பாட்டை விரும்புகிறோம். வை–பிரசித்தம். இதி–என்று.

1–12–2

तान् होवाच । इहैव मा प्रातः उप समीयात इति । तत् ह बको दाल्भ्यः ग्लावो मैत्रेयः प्रतिपालयां चकार । ते ह यथैवेदं बहिष्पवमानेन स्तोष्यमाणाः संरब्धाः । इत्येवं आससृपुः । ते ह समुपविश्य हिंचक्रुः । ओं अदाम । ॐ पिबाम । ॐ देवो वरुणः प्रजापतिः सविता । अन्नमिह आहरत् अन्नपते । अन्नमिह आहर आहर ओमिति ॥

தான்ஹோவாச। இஹைவ மா ப்ராத: உபஸமீயாத இதி தத்ஹ பகோ தால்ப்ய: க்லாவோ மைத்ரேய: ப்ரதிபாலயாம் சகார। தேஹயதைவேதம் பஹிஷ்பவமானேன ஸ்தோஷ்யமாணா: ஸம்ரப்தா। இத்யேவம் ஆஸஸ்ருபு:। தே ஹ ஸமுப விச்ய ஹிம்சக்ரு:। ஓம் அதாம ஓம் பிபாம। ஓம் தேவோ வருண:। ப்ரஜாபதிஸ் ஸவிதா। அன்னமிஹ ஆஹரத்। அன்னபதே। அன்னமிஹ ஆஹர। ஆஹர ஓமிதி

தான்-நாயின் ரூபமுள்ள சிவன் முதலியோரிடம், ச்வரூப: வாயு:- நாயின் உருவமுள்ள முக்ய ப்ராணன், இஹஏவ-இந்த இடத்திலேயே, ப்ராத:- நாளை காலையில், மா-என்னை, ஸமீயாத-அணுகுங்கள். இதிப்ரோவாச-என்று சொன்னார். தத்ஹ - அந்த வார்த்தையை தல்ப புத்திரனை பகன் கேட்டு, ப்ரதிபாலயாம் சகார-அந்தக் காலை வேளையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். தேஹ-இதைக் கேட்ட நாய் ரூபம் கொண்ட மற்ற தேவர்களும், யதைவ இதம்—இந்த உதாரணம் போல் பஹிஷபவமானம் என்ற ஸ்தோத்திரத்தால், ஸ்தோஷ்யமாணா:- துதிக்கும் ரித்விக்குகள் போல் ஸம்ரப்தா:- ஒவ்வொருவரும் கச்சம் கட்டிக் கொண்டு எறும்புகள் சாரிசாரியாகப் போவது, யதைவ இதம்,என்ற உதாரணம் போல், இத்யேவம் - இம் மாதிரி அவஸரமாகப் பரப்புடன் ஆஸஸ்ருபு:- அந்த இடத்தில் வந்து குழுமி இருந்தனர்.

பிறகு, தே-அவர்கள், ஸமுபவிச்ய-உட்கார்ந்து, ஹிம் சக்ரு:- ஹிம் என்று கத்தினர்.

ஓம் அதாம - என்ற மந்திரத்தை ஸாமகானம் போல ஸ்வரத்துடன் பாடினர். ஓம் - குணபூர்ணனை முக்ய ப்ராணாந்தர்க்கத விஷ்ணுவே, வாயுவே! அன்னம் அதாம—நாம் சாதத்தைச் சாப்பிடுவோம். ஓம் — பகவன், பிபாம-

ஜலத்தைக் குடிப்போம். நீங்கள் இருவரும் தத்தம் தகுதிக்கேற்ப, தேவ:- ஸர்வஜ்ஞர்கள் வருண:- அனைவராலும் வரிக்கப்படுபவர்கள். ப்ரஜாபதி:- மக்களின் தலைவர்கள். ஸவிதா-உலகங்களைப் படைப்பவர்கள். அன்னபதே-உணவு பொருள்களின் தலைவர்களே: அன்னம் - உணவை, இஹ-எங்களுக்கு. ஆஹரத் = ஆஹரது - கொண்டு வரட்டும். அதாவது கொண்டு வருவீர்களாக. அன்னம் இஹஆஹர-உணவை - எங்களுக்குச் கொண்டு வாருங்கள். ஆஹர - கொண்டு வாருங்கள். ஓம்-ஹே குண பூர்ணர்களே! (இரு தடவை சொன்னது ஆர்வத்தைக் குறிக்கிறது) அதன்படியே அன்னத்தை அனைவரும் அருந்தினர் என்றும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

N. B.: (1) பகோ தால்ப்ய: என்பவர் ஒருவர், க்லாவோ வா மைத்ரேயர் மற்றொருவர் ஆக இரண்டு பேர்கள் என்று பிறரின் அர்த்தம் தவறு. ஏனெனில் அங்கு வா அல்லது alias என்ற பதமுள்ளதை அவர்கள் கவனிக்கவில்லை. (2) இம்மந்திரத்தை பௌர்ணமியன்று கானம் செய்தால் அன்னபானம் ஏராளமாகக் கிடைக்கும். பஞ்சமே இராது.

1–12–2 முற்றிற்று.

அத்யாயம் 1 கண்டம் 13 மந்திரங்கள் 3

1–13–1 ஸாம வேத அம்சங்களில் ஸ்தோ பாக்ஷரங்கள் என்பன உண்டு. கானத்தைப் பூர்த்தி செய்வதற்காக சேர்க்கப்படும் அர்த்தமற்ற எழுத்துக்கள் அல்லது பதங்களாகும். அவைகளின் உபாஸனையின் பொருட்டு அவைகளைப் பற்றிய விபரங்கள் தரப்படுகின்றன.

**இந்த உபாஸனையின் பலனைக் கூறி முடிக்கிறார்.**

| எண் | ஸ்தோபாக்ஷரம் | அபிமானி தேவதை | கூப்பிடப்படும் பெயர் |
|---|---|---|---|
| 1 | ஹாவு | இந்த பூமி தேவி | ஹாவுகார: (இது ரதந்தர ஸாமத்தில் பிரசித்தம்) |
| 2 | ஹாயி (10) | வாயு (அதிதைவதம்) | ஹாயிகார: |
| 3 | அத | சந்திரன் | அதகார: |
| 4 | இஹ | ஆத்மா (வயாப்தனன விஷ்ணு) | இஹகார: |
| 5 | ஈ | அக்னி | ஈகார: |
| 6 | ஊ | சூர்யன் | ஊகார: |
| 7 | ஏ | இந்திரன் (நிஹவன்) | ஏகார: |
| 8 | ஔஹாயி | எல்லாதேவர்கள் | ஔஹாயிகார: |
| 9 | ஹிம் | பிரம்மா | ஹிங்கார: |
| 10 | ஹாயி (2) | வாயு (அத்யாத்மம்) | — |
| 11 | யாயா | ஸரஸ்வதி (அன்னம்) | யாயாகார: |
| 12 | விராட் | லக்ஷ்மீ (விராட், வாக்) | — |
| 13 | ஹுப் | விஷ்ணு (அநிருக்த: ஸஞ்சர:) | ஹுப்கார: |

1-13-3

दुग्धेऽस्मै वाग्दोहं । यो वाचो दोहः । अन्नवान् अन्नादो भवती । य एतां एवं साम्नां उपनिषदं वेद । उपनिषदं वेद ॥ ३ ॥

துக்தேSஸ்மை வாக்தோஹம் । யோ வாசோதோ ஹ: । அன்னவான் அன்னுதோ பவதீ। ய ஏதாம் ஏவகும் ஸாம்னும் உபநிஷதம் வேத உபநிஷதம் வேத ॥

ய:– எந்த அதிகாரி, ஸாம்னும்—ஸாம வேதத்தின் அம்ச மான ஸ்தோபாக்ஷரங்களின், ஏதாம்—இந்த, உபநிஷதம்—ரஹஸ்யமான அர்த்தத்தை, ஏவம் – இம்மாதிரி, வேத-அறிவானே, அஸ்மை - இவனுக்கு, வாச: தோஹ:– வேத வாக்யங்களால் கறக்கப்படும் பலனை மோக்ஷம் என்பது, ய:- எதுவோ தம் வாக்தோஹம் - அந்தப் பலனை மோக்ஷத்தை, இந்த உபாஸனம், துக்தே - கறக்கிறது. தருகிறது. அல்லது வாக்கிலுள்ள ஸ்ரீ ஹரி கறப்பான். தருவார். இருமுறை கூறியது. ஆதரவைக் குறிக்கிறது.

1–13–3 முற்றிற்று.

इति श्रीमदानंदतीर्थ भगवत्पादाचार्य विरचिते श्रीमच्छांदोग्यउपनिषत्भाष्ये प्रथमोऽध्यायः ॥

இதி ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத்பாதாசார்ய விரசிதே ஸ்ரீமச்சாந்தோக்ய உபநிஷத் பாஷ்யே ப்ரதமோ அத்யாய: ॥

முதல் அத்யாயம் முற்றிற்று.

**இரண்டாம் அத்தியாயத்தில் 26 கண்டங்களும் 30 மந்திரங்களும் உள்ளன.**

இவைகளிலும் ஸாமோபாஸனையையே விஸ்தாரமாகக் கூறுகிறார். 1 ஹிங்காரம் 2 ப்ரஸ் தாவம் 3 உத்கீதம் 4 ப்ரதிஹாரம் 5 நிதனம் என்று ஐந்து வித ஸாமங்கள். ஸாமன் என்ற விஷ்ணுவின் ரூபங்களே அவற்றால் முறையே 1 ப்ரத்யும்னன் 2 வாஸுதேவன் 3 நாராயணன் 4 அநிருத்தன் 5 ஸங்கர்ஷணன் எனக் கூறப்படுகின்றன. இவையே உலகங்களிலும், மழையிலும் எல்லா ஜலங்களிலும், ரிதுக்களிலும் பசுக்களிலும் எங்கும் உள்ள ஐந்து ரூபங்களை உபாஸிக்க வேண்டும்.

மேலும் இவ்வைந்து ரூபங்களுடன் ஆதி, உபத்ரவம் என்ற இரண்டைச் சேர்த்து ஏழுவித ஸாமமாக்கி ஆதி என்ற வராஹ ரூபமும், உபத்ரவம் என்ற நரஸிம்மரூபமும் ஆக ஏழு ரூபங்கள் ஆங்காங்கு உள்ளன. அவற்றின் உபாஸனையும் செய்ய வேண்டும் எனப்படுகிறது.

முதல் அத்தியாயத்தில் கூறிய உபாஸனைகளே போதுமானது, பின்னர் கூறியுள்ள பலஅபூர்வ விஷயங்களை அறிய வேண்டும் என்பதற்காக முக்கியமான விஷயங்களையே இனி கூறப் போகிறோம். அனைத்தையும் மொழி பெயர்த்தால் இரண்டு அல்லது மூன்று பாகங்களாக வெளியிடவேண்டியிருக்கும்.

அத்யாயம் 2 கண்டம் 22 மந்திரங்கள் 1

ஸாம கானம் செய்பவர்களின் குரல் வகைகளைக் கூறுகிறார்.

विनर्दि साम्नः वृणे । पशव्यं इत्यग्नेः उद्गीथः । अनिरुक्तः प्रजापतेः । निरुक्तः सोमस्य । मृदु श्लक्ष्णं वायोः । श्लक्ष्णं बलवत् इन्द्रस्य । क्रौंचं बृहस्पतेः । अपध्वांत वरुणस्य । तान् सर्वानेव उपसेवेत । वारुणं त्वेव वर्जयेत् ॥

வினர்த்தி ஸாம்ந: வ்ருணே। பசவ்யம் இதி அக்னே: உத்கீத:। அநிருக்த: ப்ரஜாபதே:। நிருக்த: ஸோமஸ்ய। ம்ருது ச்லக்ஷ்ணம் வாயோ:। ச்லக்ஷ்ணம் பலவத் இந்த்ரஸ்ய। க்ரௌஞ்சம் ப்ருஹஸ்பதே:। அபத்வாந்தம் வருணஸ்ய। தான்ஸர் வாணேவ உபஸேவேத। வாருணம்து ஏவவர்ஜயேத் ॥

ஸாம்ந:—ஸாம என்று பெயருள்ள விஷ்ணுவின்,கானம் செய்யும் குரல், வினர்தி—சிறந்த நாதமுடையது. 1¼ ஷூ வயதுள்ள எருதின் குரல் அல்லது மேககர்ஜனை போன்று ஸ்திரமான ஸ்வரத்துடன் கூடியது. ஆகையால் ஸ்ரீஹரியின் குரலை, வ்ருணே-நான் வரிக்கிறேன் என்று ஓர் ரிஷீ அல்லது உத்காதா கூறுகிறுர். அக்குரலுடன்தான் கானம் நானும் செய்வேன் என்று கருத்து. அக்னே:- அக்னி தேவனின், உத்கீத:- ஸாம கானம், பசவ்யம்-பசுவின் குரல் போன்றது ப்ரஜாபதே:- பிரம்மாவின் கானம், அநிருக்த:- ஒப்பற்றது. கம்பீரமானது ஸோமஸ்ய-சந்திரனுடைய கானம்-நிருக்த:-ஒப்புள்ளது-மணியின் ஓசை போன்றது. வாயோ:-வாயுவின் கானம், ம்ருது மேகத்தின் சப்தம் போன்றும், 20 ஷூ வயதுள்ள எருதின் குரல் போன்றும் உள்ளது. ச்லக்ஷ்ணம்-கம்பீரமானது. இந்த்ரஸ்ய-இந்திரனுடைய கானம், ச்லக்ஷ்ணம்-கம்பீரமாயும், பலவத்-பலமுள்ளதாயும் உளது. ப்ருஹஸ்பதே:- ப்ருஹஸ்பதியின் கானம், க்ரௌஞ்சம்—அன்றில் பக்ஷியின் குரல் போன்றது வருணஸ்ய - வருணனுடைய கானம், அபத்வாந்தம் - உடைந்த வெண்கலப் பாத்திரத்தின் சப்தம் போன்றது. (அபஸ்வரம்) தான் ஸர்வானேப உபஸேவேத - அந்த எல்லா ஸ்வரங்களையும் கையாளலாம், து - ஆனல், வாருணம் ஏவ - வருணனின் குரலை து-விசேஷமாக, வர்ஜயேத்-விட்டுவிட வேண்டும்.

மூன்றும் அத்தியாயத்தில் 19 கண்டங்களும் 95 மந்திரங்களும் உள. இந்தக் கண்டத்தில் முக்கியமானவைகளில் முதலில் மதுவித்யா.

3–1–1

असौ आदित्यो देवमधु । तस्य द्यौरेव तिरश्चीनवंशः ।
अंतरिक्षं अपूपः । मरीचयः पुत्राः ॥ १ ॥

அஸௌ ஆதித்யோ தேவமது ! தஸ்ய த்யௌரேவ திரஸ்சீன வம்ச: । அந்தரிக்ஷம் அபூப: । மரீசய: புத்ரா: ॥

**அஸௌ-அந்த, வை-பிரசித்தமான, ஆதித்ய:-சூரியனிடமுள்ளவனும், ஆதி - முதற் காரணமாயிருப்பவனும், த் - எங்கும் வியாபித்திருப்பவனும், ய:- ஞான ஸ்வரூபியுமான, ஆதித்யன் என்ற பெயருடையவிஷ்ணு,மது-ஆனந்தானுபவ பூர்ணன். எல்லா தேவர்களாலும் ஆசிரயிக்கப்பட்டிருப்பதால் தேவமது, தேவர்களுக்குத் தேன் போன்றவன். தஸ்ய** அந்த விஷ்ணுவுக்கு, த்யௌ:- ஒளி முதலிய குணங்கள் பொருந்திய, த்யு என்ற பெயருடைய லக்ஷ்மீ, திரஸ்சீன வம்ச:-சாய்வான மூங்கில்விட்டம் குனிந்து வணங்கி அவரை வம்ச: தன் வசப்படுத்துகிறவள். அந்தரிக்ஷம் - தம் முள்ளேயே ஹரியை நன்கு பார்ப்பதால் அந்தரிக்ஷன் என்ற பெயருள்ளவனும், அந்தரிக்ஷலோகத்தில் இருப்பவனுமான வாயு, லக்ஷ்மி என்ற சாய்வான விட்டத்தை ஆசிரயமாகக்கொண்ட, அபூப:- தேன் அடை ஆவான். ஸ்ரீஹரியின் விசேஷ ஸன்னிதானமுடையவன். மரீசய:– சூரிய கிரணங்களிலுள்ள, வஸுருத்ரன் ஆதித்யன் ஆகியோர் தேனைச் சேர்க்கும் ஈக்களின் புத்திரர்கள், மரீசீ முதலியவர்கள், அவ்வித ஹரியின் உபாஸனை தான் மதுவித்யா 3–12–1 சூரியனின் உள்ளேயுள்ள ஸ்ரீஹரியே ஸர்வ வேத ப்ரதிபாத்யன் ஆதலால் வேதங்களின் தாய் என்ற காயத்ரீ முதலிய ஆறு ரூபமுடையவன். நான்கு பாதங்களுடையவன் என்று அவரை உபாஸிக்க வேண்டும் என்கிறார்,

3–12–1

गायत्री वा इदं सर्वं भूतं । यदिदं किं च । वाग्वै गायत्री । वाक् वा इदं सर्वं भूतं । गायति त्रायते च ॥

காயத்ரீவா இதம் ஸர்வம் பூதம் । யதிதம் கிஞ்ச । வாக்வை காயத்ரீ । வாக்வா இதம் ஸர்வம் பூதம் । காயதி த்ராயதே ச ॥

முதல் ரூபம்—காயத்ரீவை—காயத்ரீ என்ற பெயருள்ளவன். காயத்ரீயில் இருப்பவன். சூரியனுக்குச் சமமான ஒளியுள்ளவன். ஸ்த்ரீரூபமுடையவன். ஹயக்ரீவன் என்ற ரூபம்-வை—பிரஸித்தம்.

2ம் ரூபம். யத் இதம் கிஞ்ச—இந்த எதெல்லாம் உண்டோ, இதம் ஸர்வம்=இந்த ஸர்வாந்தர்க்கதம்—அதெல்லாவற்றின் உள்ளேயுள்ளதும் பூதம்—(பூபௌ)—தேச கால குணங்களால் பரிபூர்ணமான மத்ஸ்யம் முதலிய அவதாரங்களின் கூட்டமாகும்.

3ம்ரூபம்—வாக்—பேச்சிலுள்ளவனும், வக்தி பேசுபவனுதலால் வாக் என்ற பெயருள்ளவனும், ஸ்த்ரீரூபமுடையவனுமான ஹயக்ரீவனே ஆவான். இதம் ஸர்வம் பூதம்—இந்த எல்லாவற்றிலுமுள்ளவனும், தேசகால குணபூர்ணமான பூதம் என்ற பெயருடைய மத்ஸ்யாதி அவதார ரூபக் கூட்டமும் அவனே. ஹயக்ரீவரூபத்திற்கு காயத்ரீ என ஏன் பெயர்? காயதி—எல்லா வேதங்களையும் கானம் செய்பவர். த்ராயதே ச உலகையும் காப்பாற்றுகிறார்.

3–12–2

या वै सा गायत्री । इयं वाव सा । येयं पृथिवी । अस्यां हि इदं सर्वं प्रतिष्ठितं । एतामेव नातिशीयंते ॥२॥

யாவைஸா காயத்ரீ । இயம் வா வஸா । யேயம் ப்ருதிவீ । அஸ்யாம் ஹி இதம் ஸர்வம் ப்ரதிஷ்டிதம் ஏதாமேவ நாதிசீயந்தே 2॥

4ம்ரூபம்—யா—எந்த, வை—பிரசித்தமான, காயத்ரீ—என்ற முதல் ரூபமோ, இயம்—இந்த ரூபம், ஸா—என்று, வாவ—ப்ரசித்தம் யார் அவன்? யாஇயம்—இந்த, ப்ருதீவீ—எந்த பூமியுண்டோ, இந்தப்பூமியின் உள்ளே இருப்பவனும், ப்ருதுத்வாத்—பெரியவனுதலால் ப்ருதிவீ என்ற பெயருடன் ஸ்த்ரீரூபமாக இருப்பவனே. பூமி எனப்பட்டவன் எவ்வாறு விஷ்ணு ஆவான்? 2 காரணங்கள் 1. அஸ்யாம்—இந்தப் பூமியில் ஸர்வம் பூதம்—எல்லா உலகங்களும் ப்ரதிஷ்டிதம்—அதனை அண்டி அதற்கு அதீனமாக உளது. 2. ஏதாம் வை-இந்தப்பூமியையே, நாதிசீயந்தே—யாரும் மீறுவதில்லை. அதுவே ஸர்வோத்தமமானது.

3-12-3

या वै सा पृथिवी । इयं वाव सा । यदिदं अस्मिन् (अंतः) पुरुषे शरीरं । अस्मिन् हीमे प्राणाः प्रतिष्ठिताः । एतदेव नातिशीयंते ॥ ३ ॥

யா வை ஸா ப்ருதிவீ । இயம் வாவ ஸா । யதிதம் அஸ்மின் (அந்த:)புருஷே சரீரம் ॥ அஸ்மின் ஹீமே ப்ராணா: ப்ரதிஷ்டிதா: । ஏததேவ நாதி சீயந்தே ॥

5ம் ரூபம் யா வை—எந்த பிரஸித்தமான, ப்ருதிவீ—பூமியின் உள்ளேயுள்ள ப்ருதிவீ என்ற 4ம்ரூபமோ, ஸா இயமேவ=அயமேவ ஸ:—அந்த ரூபம் இதுவே. எது? யத் இதம் எந்த ரூபம், அஸ்மின் புருஷே—இந்த ஜீவனின், அந்த—உள்ளே, சரீரம்=ச—ரம்—ஆனந்தரூபியாயும், ர—ரதி—

மகிழ்ச்சிஸ்வரூபியாயும், ஈர-அனைத்தையும் பிரேரிப்பவனு யும் உள்ளதால் சரீரம் என்ற பெயருள்ளவனும், அந்த: புருஷ-தேகத்தின் உள்ளே புருஷன் என்ற ஜீவனிடமும் உள்ளவனே, இயமேவஸா-அயமேவ ஸ:-ப்ருதிவீ என்று பேருடையவன்- முன் மந்திரத்தின் கடைசியில் கூறிய 2 காரணங்களையும் இங்கு சேர்க்க,

3-12-4

यद्वै तत्पुरुषे शरीरम् । इदं वा तत् । यदिदमस्मिन् अंतः पुरुषे हृदयम् ॥ ४ ॥

யத்வைதத் புருஷே சரீரம் । இதம் வா தத் । யதி தம் அஸ்மின் அந்த: புருஷே ஹ்ருதயம் ॥4॥

6ம் ரூபம்-யத்வைதத்-எந்த பிரஸித்தமான, புருஷே-ஜீவனிடம் அவனையும் வியாபித்து சரீரம்-சரீரம் என்று பெயருள்ள ஐந்தாவது ரூபமோ, அந்த:புருஷே-ஜீவனின் உள்ளேயே ஹ்ருதயம்=ஹ்ருத்+அயம் ஹ்ருதி-இதயத்தை, அயதே-அடைந்தவன் ஆகையால், ஹ்ருதயம் என்ற பெயருடையவனும், ஹ்ருதயத்தில் இருப்பவனுமான, தத்-பகவானின்ரூபம், இதமேவ-இந்த முதல் ரூபமே ॥

3-12-5

सैषा चतुष्पदा षड्विधा गायत्री । तदेतत् ऋचाऽभ्युक्तम् ॥ ५ ॥

ஸா ஏஷா சதுஷ்பதா ஷட்விதா காயத்ரீ ॥ ததேதத் ரிசா அப்யுக்தம் ॥

ஸா-இம்மாதிரி, காயத்ரீ என்ற தன்னையும், சேர்த்து, 1. காயத்ரீ,(மற்ற ஐந்துடன்)2. பூத, 3. வாக், 4. ப்ருதிவீ

நித்யமான பொருள்களை (ஜீவர்கள், வேதங்கள், காலம் முதலியன) பிரேரித்துக் கொண்டிருந்தார்). தஸ்மாத்— அவரைக் காட்டிலும், அன்யத்-வேறான, பர:=பரம்-உத்தம மான, கிஞ்சன—எந்த வஸ்துவும், ந ஆஸ - இல்லை. ஹ— பிரசித்தம். அக்ரே-(சிருஷ்டியின் முன்) பிரளயத்தில், யத்- எந்த, தம:- லக்ஷ்மீயின் ரூபமான துர்க்கா, அப்ரகேதம்- அபரிமிதமான, ஸலிலம் - ஜலமாக (பூத்வா-ஆகி) ஆஸீத்- இருந்தாளோ, (தேன) தமஸா-அந்த துர்க்கையால், இதம்- ஸர்வம்-இந்த எல்லாம், அப்ரகேதம் - அறிய முடியாதபடி ஆ-நன்றாக கூன்ஹம்=கூஹிதம்—மறைக்கப்பட்டு இருந்தன.

N. B.: பிற பாஷ்யார்த்தம்:- ஸர்வம் கலு-இதம் ப்ரஹ்ம- இதம் ஸர்வம் ப்ரஹ்ம கலு — இந்த எல்லாமே, ப்ரஹ்மம் என்பது பிரசித்தமானது. எப்படி என்றால், த ஜ் ஜ ல ா ன் (ஒரே பதம்) தத்ஜ-தத்ல - தத்அன் - அந்த ப்ரம்மத்தினிட மிருந்து உண்டாவதாலும், அதனிடமேலயமடைவதாலும் அதனாலேயே அந்தக்காலத்திலேயே செயல்படுவதாலும் தஜ்ஜத்வாத் — தல்லத்வாத் — ததனத்வாத் என்ற மூன்று காரணங்கள் ஆகவே பிரம்மத்தைத்தவிர வேறொன்றுமில்லை பிரம்ம ஸத்யம் ஜகத் மித்யா—பிரம்மமே ஸத்யமானது. உலகம் மித்யை ஆனது. ஜீவோ ப்ரஹ்மைவ நாபர:-| ஜீவனே பிரம்மம் வேறல்ல. விமர்சம்: இந்த அர்த்தத்திற்கு ப்ரமாணமில்லை பிரமாணங்களுக்கு விருத்தமானது. நம் அர்த்தத்திற்குப் பிரமாணமான ரிக் வேதத்தில் பிரளய ஜலத்தில் ப்ரம்மம் ஒன்றே உள்ளது. வேறு எதுவுமில்லை என்பது தவறு. நபர: கிஞ்சனாஸ-என்று-அந்த பிரம்மத்தைக் காட்டிலும் பர=உத்தமமான வஸ்து இல்லை எனப்பட்டு உள்ளது. மேலும் பிற வஸ்துக்கள். துர்க்காஸ்வரூபமான ப்ரளயஜலத்தால் நாம் அறியாதவாறு மறைக்கப்பட்டுள்ளன என்றும் சொல்கிறது. அந்த ப்ரம்மம் விஷ்ணுவேதான். ஏனென்றால் அந்த அபரிமிதமான ஜலத்தில் அவரைத்தவிர வேறு யாரும் சுகமாக விருக்கத்திறன் உள்ளவரில்லை. அவரு டைய நாராயணன் என்ற பெயர் பிரளய ஜலத்தில் பால

ரூபியாக படுத்திருப்பவர் என்று பிரசித்தம். நாரம் என்றால் ஜலம். அதுவே அவருக்கு ஆசிரயமாக இருந்தது.

ஆபோ நாரா இதி ப்ரோக்தா:, ஆபோ வைநர ஸூனவ: ।, அயனம் தஸ்யதா பூர்வம் தேன நாரா யணஸ் ஸ்ம்ருத: ॥

விஷ்ணு ஸஹஸ்ரநாமம் - மஹோததிசய:– பெரிய பிரளய ஸமுத்திரத்தில் படுத்திருப்பவன் விஷ்ணுவே என்று குறிக்கிறது. தத் - என்று பிரம்மத்தைக் குறிக்கும் பதத்தை, ஜலான்-ஜலத்தில் செயல்புரிபவன் என்ற பதத்தோடு சேர்த்து தஜ்ஜலான் என்று ஒரு பதமாக்கி தஜ்ஜலத்வாத் etc. என்ற அர்த்தம் பிரமாண மற்றது. பிரமாணவிருத்த மானது. பிரம்மத்தினிடமிருந்து உலகம் உண்டாவதாலும் அழிவதாலும் மித்யாவானது என்பதும் பொருந்தாதது.

3–16–1 முன்னர் பல உபாஸனைகள் சொல்லப்பட்டன. இனியும் பலஉபாஸனைகளைச் சொல்லப்போகிறார். அவற்றை செய்ய ஆயுள் போதாது. நீண்ட ஆயுள் இருந்தாலும் பல வியாதிகளால் பீடிக்கப்பட்டு அவற்றைச் செய்ய முடியாது. ஆகையால் ஆயுள் விருத்திக்காகவும் அரோகதிடகாத்திரத் திற்காகவும் புருஷயஜ்ஞம் அதாவது நமது பிறப்பிலிருந்து இறப்பு வரையிலுள்ள வாழ்க்கையே ஓர் யாகமாகப் பாவிக்கவேண்டும் என்கிறார்.

पुरुषो वाव यज्ञः । तस्य यानि चतुर्विंशति वर्षाणि । तत् प्रातस्सवनं । चतुर्विंशत्यक्षरा गायत्री । गायत्रं प्रातस्सवनं । तदस्य वसवो अन्वायत्ताः । प्राणा वाव वसवः । एते हि इदं सर्वं वासयंति ॥१॥

புருஷோவாவ யஜ்ஞ:। தஸ்ய யானி சதுர்விம்சதி வர்ஷாணி। தத் ப்ராதஸ் ஸவனம்। சதுர்விம்சத்ய க்ஷரா காயத்ரீ। காயத்ரம் ப்ராதஸ் ஸவனம்। ததஸ்ய வஸவோ அன்வாயத்தா:। ப்ராணா வாவ வஸவ:। ஏதேஹி இதம் ஸர்வம் வாஸயந்தி ॥

புருஷ:– ஜீவன், வாவ - நித்யம் பக்தியுடன், யஜ்ஞ:- நான் விஷ்ணுவின் பூஜையான யாகம் (என்று உபாஸிக்க வேண்டும்) தஸ்ய - அவனுடைய மொத்த வயதான 116 வருஷங்களில், யாளி சதுர்விம்சதி வர்ஷாணி- எந்த முதல் 24 வருஷங்களோ, தத் = தானி - அவை, ப்ராதஸ்ஸவனம்- யாகத்தின் காலைபூஜையாகும். ஏனெனில் காயத்ரீ-காயத்ரீ சந்தஸ் (வ்ருத்தம்) சதுர்விம்சதி அக்ஷரா - 24 எழுத்துக்களை யுடையது.ப்ராதஸ்ஸவனம்-காலைபூஜையானது.காயத்ரம்- காயத்ரீ சந்தஸ்ஸிலுள்ள மந்திரங்களுடன் கூடியது.ததஸ்ய அந்தக் காலை பூஜைக்கு,வஸவ:—வஸுக்கள்,அன்வாயத்தா: -தொடர்புள்ள தேவதைகள் ஆவர். ப்ராணாவாவ-நமது இந்திரியாபிமானி தேவதைகளே,வஸவ:- வஸுக்களாவர். ஹினப்படி என்றால், ஏதே-இவர்கள், இதம் ஸர்வம்-இந்த எல்லா ஜீவராசிகளை, வாஸயந்தி-உயிருடன் வசிக்கும்படிச் செய்கின்றனர்.

3–16–2

तं चेत् एतस्मिन् वयसि। किंचित् उपतपेत्। स ब्रूयात्। प्राणा वसवः। इदं मे प्रातस्सवनं। माध्यंदिनं सवनं अनुसंतनुत। इति। माऽहं प्राणानां वसूनां मध्ये। यज्ञो विलोप्सीय। इति। उद्धैव तत एति। अगदो ह भवति ॥ २ ॥

தம் சேத் ஏதஸ்மின்வயஸி। கிஞ்சித் உபதபேத்। ஸ ப்ரூயாத்। ப்ராணா வஸவ:। இதம்மே ப்ராதஸ் ஸவனம்। மாத்யந்தினம் ஸவனம் அனு ஸந்தனுத।

இதி । மா அஹம் ப்ராணானும் வஸூனும் மத்யே । யஜ்ஞோ விலோப்ஸீய। இதி । உத்தைஹவ தத ஏதி। அகதோ ஹ பவதி ॥

தம்-விஷ்ணு பூஜையான யாகமாகவிருப்பவனை, ஏதஸ்மின்வயஸி - காலை பூஜையான 24 வருஷங்களின், மத்யே வயஸி-நடு வயதில், கிஞ்சித் - ஏதாவது ஜ்வரம் முதலியன, உபதபேத்-சேத்-பாதித்தால், ஸ:- அவன், ப்ருயாத் - பின் வருமாறு பிரார்த்திக்க வேண்டும். ப்ராணா:வஸவ: -ஹே இந்திரியாபிமானி வஸுக்களே! இதம் மே ப்ராதஸ்ஸவனம் இந்த என்னுடைய காலை பூஜையின் வயதை,மாத்யந்தினம் ஸவனம் அனு-நடுப்பகல் பூஜையான வயது வரையிலும், ஸந்தனுத-தொடரும்படிச் செய்வீர்களாக. அஹம்-நான் ப்ராணானும் வஸூனும் மத்யே. இந்திரியாபிமானி வஸுக்களின் ஆட்சியின் நடுவில், யஜ்ஞ:- விஷ்ணு பூஜை என்ற யாகமான நான்,மாவிலோப்ஸீய-தவறிப்போகவேண்டாம் இதி-என்று, இம்மாதிரி பிரார்த்தனையால், தத:- அந்த ஜ்வரம் முதலியேவற்றிலிருந்து,உத் ஏதி-வெளியேறுகிறான். (விடுபடுகிறான்) ஹவை-இது உண்மையே,ஏனெனில்,அவன், அகத: ஹபவதி-நோயற்றவனாக நிச்சயம் ஆகிறான்.

3–16–3, இம்மாதிரியே அடுத்த 2 மந்திரங்கள் மாறுதல்களுடன் உள்ளன. பிறகு (25 மு 68வரை) எந்த 44 வருஷங்களுண்டோ, அவை யாகத்தின் நடுப்பகல் பூஜையாகும். ஏனெனில் த்ருஷ்ப்சந்தஸ் 44 எழுத்துக்களையுடையது. நடுப்பகல் பூஜையானது த்ருஷ்டுப்சந்தஸ்ஸிலுள்ள மந்திரங்களுடன்கூடியது. இந்தப்பூஜைக்கு ருத்ரர்கள் தொடர்புள்ள தேவதைகள் ஆவர். அவர்களும் நமது இந்த்ரியாபிமானி தேவதைகளே. அவர்கள் இந்த எல்லா ஜீவராசிகளையும் அழவைப்பவர்கள்.

3–16–4 விஷ்ணு பூஜை என்ற யாகமாக விருக்கும் அவனை இந்த வயதின் நடுவில் ஜ்வரம் முதலியன பாதித்தால், அவன் ''ஹே, இந்திரியாபிமானி ருத்திரர்களே!

இந்த என்னுடைய நடுப்பகல் பூஜையின் வயதை, மூன்றும் பூஜையின் (மாலை பூஜை என்று கூறலாகாது) வயது வரை யிலும், தொடரும்படி செய்வீர்களாக. உங்கள் ஆட்சியின் நடுவில் விஷ்ணு பூஜைஎன்ற யாகமான நான் தவறிப்போக வேண்டாம்'' என்று பிரார்த்திக்க வேண்டும். அந்த ஜ்வரம் முதலியவற்றிலிருந்து விடுபடுகிறுன். இது பிரசித்தம் உண்மையிலேயே நோயற்றவனுகிறுன்.

3–16–5 பிறகு (69 மு 116 வரு) எந்த 48 வருஷங்களுண்டோ, அவை 3ம்ஸவனம் அல்லது மாலை பூஜையாகும் ஏனெனில் ஜகதீசந்தஸ் 48 எழுத்துக்களையுடையது. 3ம் ஸவனமானது ஜகதீசந்தஸ்ஸிலுள்ள மந்திரங்களுடன் கூடியது. இந்தப்பூஜைக்கு ஆதித்யர்கள் தொடர்புள்ள தேவதைகளாவர். அவர்களும் இந்திரியாபிமானி தேவர்களே. அவர்கள் இந்த எல்லா ஜீவராசிகளுக்கும், சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் முதலிய எல்லா விஷயங்களையும் அறிவிக்கிறுர்கள். தருகிறுர்கள்.

3-16-6 விஷ்ணு பூஜை என்ற யாகமாகவுள்ள அவனை இந்தவயதின் நடுவில், ஜ்வரம் முதலியன பாதித்தால், அவன் ''ஹே இந்திரியாபிமானி ஆதித்யர்களே! இந்த என்னுடைய 3ம் ஸவனத்தின் வயதை அதன் பூர்ணவயதான 116 முடிய பூர்ண ஆயுள் உள்ளவனுகச் செய்வீர்களாக உங்களுடைய ஆட்சியின் நடுவில் யாகமாகிற நான் தவறிப் போகவேண்டாம். யாகத்தை ஸம்பூர்ணமாகச் செய்விப்பீர்களாக'', என்று பிரார்த்திக்கவேண்டும். இந்தப் பிரார்த்தனையால் ஜ்வரம் முதலியவற்றிலிருந்து விடுபட்டு நோயற்றவனுகிறுன் நிச்சயம்.

3-16-7 இந்தமாதிரி உபாஸனையைச் செய்து 116வரு வாழ்ந்து பலனடைந்தவர் யாராவது உண்டா என்றுல் உண்டு என்கிறுர்.

**एतत् हस्मवै तद्विद्वानाह । महिदासः ऐतरेयः । स किं मे एतदुपतपसि । योऽहमवेन न प्रेष्यामि इति ।**

स ह षोडशं वर्षशतं अजीवत् । स ह षोडशं वर्षशतं जीवति य एवं वेद ॥

ஏதத் ஹஸ்மவை தத்வித்வான் ஆஹ । மஹிதாஸ: ஐதரேய : । ஸகிம்மே ஏதத் உபதபஸி । யோ அஹம் அனேன நப்ரேஷ்யாமி । இதி । ஸஹ ஷோடசம் வர்ஷசதம் அஜீவத் । ஸஹ ஷோடசம் வர்ஷசதம் ஜீவதி । ய ஏவம் வேத ॥

ஏதத்—இது புருஷயஜ்ஞத்தின் உபாஸனம், ஹ-அல்லவா தத்-அதையும் நடுவில் வியாதிவந்தால் அதைப்போக்கும் விதத்தையும், ஐதரேய:-இதரா என்பவளின் பிள்ளையான, மஹிதாஸ:-மஹிதாஸன் என்ற ஓர் ரிஷி (பகவான் அல்ல) வித்வான்-அறிந்துகொண்டு அந்த வியாதியிடம் 'ஏ வியாதியே! ஸ:-அப்பேர்பட்ட, த்வம்-நீ, மம—என்னுடைய, ஏதத்-இந்த தேகத்தை,கிம்-ஏன்,உபதபஸி = ஹிம்சிக்கிருய்? ய:அஹம்-எந்த நான் (விஷ்ணுபூஜை என்ற யாகமானவன்) அனேன-இந்த, ஹிம்சையால் நப்ரேஷ்யாமி-இறக்க மாட்டேன்'. இதி-என்பது. ஹ-பிரசித்தம். ஸ:-அந்த ரிஷி, ஷோடகம் சதம்-16 + 100 = 116 ஆடு, அஜீவத்-உயிருடன் இருந்தார். ஹ-பிரசித்தம். ய:ஏவம்வேத-யார், இம்மாதிரியான புருஷயஜ்ஞத்தை, அறிவானே, ஸ:-அவனும், ஷோடகம் வர்ஷசதம்-116 ஆடு ஜீவிப்பான். ஹ-சந்தேகமில்லை. 3-16-7 முற்றிற்று.

3-17-1 முதல் 5 பிரஸித்த யாகத்திற்கும் இந்தப் புருஷயஞ்ஞத்திற்குமுள்ள பொருத்தங்களை அடுத்த பக்கத்தில் காண்க.

3-17-1 :- பிரசித்தயாகத்திற்கும் இந்தப்புருஷயஜ்ஞத்திற்கும் உள்ள பல பொருத்தங்களை விளக்குகிறார்.

| ப்ரசித்தயாகம் | புருஷயஜ்ஞம் |
|---|---|
| 1 தீக்ஷை-யாகம் செய்யத்தகுதியைத் தரும் ஸம்ஸ்காரம் | 1 உண்பதற்கும் குடிப்பதற்கும் ஆசை, கிடைக்காவிடில் துக்கம் |
| 2 உபஸத:-யாகத்தின் அங்கமான கார்யத்தைச் செய்தல் | 2 ஷை ஆகாரம் குடிநீர்களை அடைந்து சந்தோஷம் |
| 3 ஸ்துதம்-ஸ்தோத்ரம்ரிக்வேதமந்திரம் கலந்து ஸாமகாணம். சஸ்த்ரம் மந்திரத்தைச்சொல்வது | 3 சிரித்தல் சாப்பிடுதல் குதூஹலமாயிருத்தல் முதலியன |
| 4 தக்ஷிணைகள் | 4 தவம், வ்ரதம், சாஸ்திரவிசாரம் மனோவாக்காயங்களில் நேர்மை. |
| 5 ஸோஷ்யதி = ஸவனம் செய்யப் போகிறான் அஸோஷ்ட-ஸவனம் செய்தான் என்று சொல்லுதல் | 5 இவன் தந்தையிடமிருந்து பிறத்தல். இவன் மனைவியிடம் புத்திரனை உண்டு பண்ணுதல். புத்ரன் இவன் அம்சம். |
| 6 அவப்ருதஸ்நானம் முடிவு | 6 மரணம் |

3-17-6 இதையெல்லாம் அங்கிரஸ்ஸின் புத்திரனான கோரன் என்ற ரிஷி, தேவகி என்ற ஸ்த்ரீயின் புத்திரனான கிருஷ்ணன் என்ற பெயருடைய ஒருவருக்கு (ஸ்ரீகிருஷ்ண பகவானல்லன்) சொல்லி உபாஸனா முறையையும் விளக்கினார். மூன்றாம் அத்தியாயம் 3-7-19 முற்றிற்று.

அத்தியாயம் 4 கண்டங்கள் 17 மந்திரங்கள் 79

4-1-1 இங்கு ஞானத்தைத் தரும் ஸம்வர்க வித்யா (வாயுவின் வித்யா) கூறப்படுகிறது. அதன் சம்பந்தமான கதை கீதாமாகாத்ம்யத்தில் சுலோக ரூபமாக அழகாகக் கூறப்பட்டுள்ளது. கதையானதால் மூலமந்திரங்களைத் தரவில்லை.

ஓம் ஜனச்ருதி என்பவரின் பிள்ளையும், புத்ராயணரின் வம்சத்தினனுமானவன் கோதாவரிக்கரையிலுள்ள ப்ரதிஷ்டான புரத்தரசனாக இருந்தான். அவன் சிரத்தையுடன் கொடுப்பவன். ஏராளமாகவும் கொடுப்பவன். வீடுகளையும் அன்னசத்திரங்களையும் ஆங்காங்கு ஏற்படுத்தி அன்னதானம் செய்பவன். அவன் ஓர் சமயம் இரவில் தன் உயர்ந்த உப்பரிகையில் கட்டிலில் படுத்திருக்கையில் ஹம்ஸ பக்ஷிகள் ஆகாயத்தில் பறந்து சென்றன. அவைகளில் ஒன்று வேகமாக முன்னே சென்றது. பின் வருபவைகளில் ஒரு ஹம்ஸம் அதனிடம் ஹோயி பல்லாக்ஷ-ஏமந்தமான பார்வையையுடையவனே! இந்த பௌத்ராயணனின் ஒளி ஸ்வர்க்கலோகம் வரையில் பரவியிருக்கிறதே? தெரியவில்லையா? அந்த ஒளியைத்தாண்டிச் செல்லாதே. அது உன்னை எரித்துவிடும் என்றது.

முன் சென்ற ஹம்ஸம் அதனிடம், 'அடே! ஏதத்ஸந்தம் இந்த உப்பரிகையிலுள்ள ஏனம்-இந்தப் பௌத்ராயணனை ஸயுக்வானம் - வண்டியின் நுகத்தடியை அண்டியிருப்பவரான, ரைக்வரைப்போல் சொல்கிறாயே அதாவது இவனுடைய மகிமை எங்கே? ரைக்வருடைய மகிமை எங்கே?

என்றது. அதற்கு மற்ற ஹம்ஸம் அந்த ரைக்வர் யார்? அவருடைய மகிமை யாது? எனக்கேட்டது.

முன் ஹம்ஸம், (க்ருதாயஜிதாய = க்ருதயுகே ஜிதே) நம் கர்மாக்களை நன்கு செய்து கிருதயுகத்தை ஜயித்து விட்டால், தாழ்ந்தவையான த்ரேதா முதலிய யுகங்களும் அந்தப் பலனைத் தந்துவிடும். அதுபோல், ரைக்வர் என்ற மாமுனிவர் இந்த அரசனின் ராஜ்யத்தில் வசிக்கையில், ராஜ்யத்திலுள்ள மக்கள் செய்யும் புண்ய கர்மங்கள் அனைத்தும் முக்கியமாக அம்முனிவரையே அடைகிறது. மேலும் அந்த ராஜ்யத்திலுள்ள ஒவ்வொருவரும் அறிந்து உள்ள அனைத்தையும் அவர் அறிவார் இவ்வுலகில் நல்லார் ஒருவர் உளரேல், அவர்பொருட்டு எல்லோர்க்கும் பெய்யும் மழையல்லவா என்றது.

பௌத்ராயணன் அந்த ஹம்ஸம் தன்னைத் தாழ்த்தியும் ரைக்வரை உயர்த்தியும் கூறியதைக்கேட்டுக் காலையில் படுக்கையைவிட்டு எழுந்ததுமே தன்தேரோட்டியிடம் ஹம் ஸங்கள் கூறியதைச் சொல்லி, அந்த ரைக்வமுனிவரைத் தேடி அழைத்துவரும்படி கட்டளையிட்டான். அவன் சில இடங்களில் தேடித் திரும்பிவந்து காணவில்லை என்றான். அரசன் சாஸ்த்ரவிசாரம் நடக்கும் இடங்களில்தான் பிராம் மணர்களைத் தேடவேண்டும். அங்கு விசாரித்து அழைத்து வா என்றான். அவன் மறுபடியும் பல இடங்களில் தேடிக் கடைசியில் காஷ்மீர தேசத்தில், ராஜனின் வாயிலில் ஓர் வண்டியின் அடியில் உடலிலுள்ள சொறியைச் சொறிந்து கொண்டு இருப்பவரைக்கண்டு, அருகில் சென்று நமஸ் கரித்து, உட்கார்ந்து, 'ஹே பூஜ்யரே! தாங்கள் ரைக்வ முனிவரா? என வினவினான் அவர் 'ஆம்' என்றார். (கீதா மாகாத்ம்யத்தில், அவர் நாம் பூர்ணகாமர்கள் ஆனால் நமக்குப் பணிபுரியும் ஓர் பிரம்மசாரி தேவை; என்று கூறிய தாக உளது.) தேரோட்டியும் திரும்பிவந்து அரசனிடம் 'கண்டேன் அவரை' என்றான். 4-1-8 முற்றிற்று.

4-2-1 மு 5 அப்பொழுதே பௌத்ராயணன் 600 பசுக்கள், தங்கச் சங்கிலி, கோவேறுகழுதைகள் பூட்டிய தேர் முதலியதுடன் அந்த ரைக்வரை அடைந்து நமஸ்கரித்தான் 'ஹே ரைக்வரே! இந்தப் பசுக்கள் தங்கச்சங்கிலி தேர் ஆகியவற்றைத் தக்ஷிணையாகப் பெற்றுக்கொண்டு, தாங்கள் எந்த தேவதையை உபாஸிக்கிறீரோ, அந்த தேவதையை எனக்கு உபதேசிப்பீராக' எனவேண்டினன். அந்த ரைக்வர், அஹ-ஏ, சூத்ர-சுசா ஆத்ரவணத்-ஹம்ஸத்தின் அவமதிப்பைக் கேட்டு மிகுந்த துக்கத்துடன் ஓடோடியும் வந்துள்ள க்ஷத்ரியனே! (பிரம்மசூத்திரம் 1-3-34, 35) இந்தப் பசுக்கள் தங்கச்சங்கிலி, தேர் ஆகியவை உனக்கே இருக்கட்டும்', என்று கோபத்துடன் கூறினர்.

அரசன் இந்த தக்ஷிணை அற்பமானது என்று நினைத்து, தனது நகர்வந்து, 1000 பசுக்கள், தங்கச்சங்கிலி, தன்மகள் முதலியதுடன் மறுபடியும் அவரை நமஸ்கரித்து,'ஹே ரைக்வரே! இவைகளையும், நீர் வசித்துவரும் ஊரையும் எல்லாவற்றையும் பெற்றுக்கொண்டு எனக்கு அவசியம் உபதேசிக்க வேண்டும் என்றான். ரைக்வர், அந்த ராஜகன்னிகையின் முகத்தைப் பார்த்து, அனைத்தையும் பெற்றுக்கொண்டு 'ஏ அரசனே! நீ குருசுச்ருஷை இல்லாமலேயே, இந்த தக்ஷிணைகளாலேயே உபதேசம்பெறுகிறாய்போலும்' என்றார் (வேதேசரின் டீகா-ராஜகன்னிகையைப் பார்த்து, விரக்தனான எனக்கு இவள் ஏன்? சுச்ருஷைக்கு ஒரு பிரம்மசாரி இல்லையே என்று தக்ஷிணைகளை ஏற்கவில்லை.) பிறகு அரசனுக்கு அவர் உபதேசிக்க வசித்த ஊருக்கு ரைக்வபர்ணா என்று பெயர். அது மஹாவ்ருஷம் என்ற தேசத்தில் (காஷ்மீர்) உள்ளது. 4-2-5 முற்றிற்று.

4-3-1 ரைக்வர் பௌத்ராயணனுக்கு உபதேசித்தது ஸம்வர்க்கவித்யா,

वायुर्वाव संवर्गः । यदा वा महाप्रलये अग्निः उद्वायति । वायुमेव अप्येति । यदा सूर्यो अस्तमेति ।

वायुमेव अप्येति । यदा चन्द्रः अस्तमेति वायुमेव अप्येति ॥ १ ॥

வாயுர்வாவ ஸம்வர்க்க:। யதா வா மஹாப்ரளயே அக்னி: உத்வாயதி । வாயுமேவ அப்யேதி । யதா ஸூர்ய: அஸ்தமேதி வாயுமேவ அப்யேதி । யதா சந்த்ர: அஸ்தமேதி । வாயுமேவ அப்யேதி ॥

முக்ய வாயுவே, ஸம்வர்க்க: எனப்படுவார். ஏனெனில் எல்லா தேவர்களை ஸம்ஹரிப்பவர். மஹாப்ரளயே-பெரிய ப்ரளயத்தில், அக்னி எப்பொழுது நாசமடைகிருனே அப்போது முக்ய வாயுவையே அடைகிருன். சூரியனும் சந்திரனும் அவ்வாறே முக்கிய வாயுவையே அடைகின்றனர்.

4-3-2

यदा आपः उच्छुष्यति । वायुमेव अपियंति । वायुर्वैह्येतान् सर्वान् संवृंक्ते । इति अधिदैवतम् ॥ २ ॥

யதா ஆப: உச்சுஷ்யந்தி । வாயுமேவ அபியந்தி வாயுர்வை ஹ்யேதான் ஸர்வான் ஸம்வ்ருங்க்தே । இதி அதி தைவதம் ॥

எப்பொழுது (1-8-3ல்) ஜலத்தின் அபிமானி இந்திரன் இறக்கிருனே, வாயுவையே அடைகிருன். இதுதேவதைகளைப்பற்றியது ஆகும்.

4-3-3

अथाध्यात्मं । प्राणोवाव संवर्गः । स यदा स्वपिति । प्राणमेव वाक् अप्येति । प्राणं चक्षुः । प्राण

श्रोत्रं । प्राणं मनः । प्राणो ह्येव एतान् सर्वान् संवृङ्क्ते इति ॥ ३ ॥

*அதாத்யாத்மம் ப்ராணோவாவ ஸம்வர்க்க: । ஸ யதாஸ்வபிதி ப்ராணமேவ வாக் அப்யேதி । ப்ராணம் சக்ஷு:। ப்ராணம் ச்ரோத்ரம் । ப்ராணம் மன: । ப்ராணோஹ்யேவ, ஏதான் ஸர்வான் ஸம்வ்ருங்தே இதி ॥*

இப்பொழுது தேகத்தில் ஸம்வர்க்கர் யார் என்று கூறுகிருர். ப்ராணன் என்ற முக்யவாயுவே ஸம்வர்க்கம் எனப்படுவார். ஏனெனில், ஸ:யதாஸ்வபிதி-ஒரு ஜீவன் எப்போது தூங்குகிருனே அப்பொழுது அவன் தேகத்திலுள்ள ப்ராணனையே வாக்கு, கண், காது, மனது முதலியவற்றின் அபிமானி தேவர்கள் அடைகிருர்கள். அவரே இந்த எல்லா தேவதைகளையும் செயலற்றவர்களாகச் செய்கிருர். ஆகவே வாயுவே ஜீவோத்தமர். 4-3-3 முற்றிற்று. 4-3-8 மொத்தம்.

4-4-1 முன்னர் 3-18-2ல் வாஸுதேவன் முதலிய நான்கு ரூபங்களின் வித்யா கூறப்பட்டது. இங்கு ஒவ்வொரு ரூபத்தின் நான்கு ரூபங்களைப்பற்றி 4 முதல் 9 முடிய 6 கண்டங்களில் கதையுடன் விஸ்தரிக்கிருர். கதையானதால் மூல மந்திரங்களைத் தரவில்லை.

ஓம். ஜபாலா என்பவளின் புத்திரன் ஜாபாலன். ஸத்யகாமன் என்றபெயருள்ளவன். தந்தையை இழந்தவனுதலால் தன்தாயிடம், பூஜ்யளே! நான் பிரம்மசர்யத்தை-வேதாத்யயனத்தை உத்தேசித்து குருகுலத்தில் விசேஷமாக (வெளியூரில்) வசிக்கப்போகிறேன். என் கோத்ரம் எது? எனக் கேட்டான்.

4-4-2 அவள், அப்பா! உன் கோத்ரம் எது என எனக்குத் தெரியாது. ஏனெனில் வீட்டுவேலைகள் பலவற்றையும் செய்துகொண்டு யௌவனத்தில் உன்னைப் பெற்றேன், அவற்றிலேயே மூழ்கியிருந்ததால் இதை விசாரிக்கவில்லை. என்பெயர் ஜபாலா. உன் பெயர் ஸத்யகாமன். ஆசார்யனிடம் 'நான் ஸத்யகாம ஜாபாலன்' எனச் சொல்வாயாக' என்றாள்,

4-4-3 அவன் ஹரித்ருமதரின் புத்திரரான கௌதமரை அணுகி, 'பூஜ்யரான தங்களிடம் வேதாத்யயனத்தை உத்தேசித்து வசிக்கத் தங்கள் சிஷ்யனாக இருக்கிறேன்', என்றான். 4-4-4 அவர், சந்திரன்போல் அழகனே! ஸோமபானத்திற்கு உரியவனே! உன் கோத்ரம் எது? என்று கேட்டார். அவன் தாயார் கூறியதையெல்லாம் கூறி நான் ஸத்யகாம ஜாபாலனாக உளேன்' என்றான். 4-4-5 கௌதமர் 'இம்மாதிரி நேர்மையுடன் ப்ராம்மணன் (3 வர்ணத்தினன்) அல்லாதவன் உண்மை,பேசவேமாட்டான் ஆகவே இவன் ப்ராம்மணன்', என்று தீர்மானித்து, ஏ ஸோமபானார்ஹனே! ஸமித்துக்களைக் கொண்டுவா: உபநயனம் செய்விக்கிறேன்.' என்று சொல்லி உபநயனம் செய்து, இளைத்து, பலமில்லாத 400 பசுக்களைக் கொட்டிலில் இருந்து வெளியே ஓட்டிவந்து, ஸௌம்யனே! இவற்றைக்காட்டிற்கு ஓட்டிச்சென்று, நன்றாக மேய்த்து, 1000 பசுக்களாகச் செய்துகொண்டு வீட்டுக்குத் திரும்பிவா', என்றார். ஸத்யகாமனும் சிரத்தாபக்தியுடன் பல ஆண்டுகள் காட்டில் வசித்துவந்தான். அவைகளும் 1000 ஆயின.

4-4-5 முற்றிற்று.

4-5-1 அப்பொழுது ரிஷப:-ஜீவசிரேஷ்டரான முக்கிய வாயு அந்த மந்தையிலுள்ள ஓர் எருதில் புகுந்து, 'ஏ ஸத்யகாம! நாம் 1000 ஆகிவிட்டோம். நம்மைக் குருவின் வீட்டிற்கு ஓட்டிச் செல்வாயாக 4-5-2 உனக்கு விஷ்ணுவின் அம்சத்தைக் கூறட்டுமா? என்றார், அவனும் கூறுங்கள்'

என்றுன். வாஸுதேவன் ஸங்கர்ஷணன் ப்ரத்யும்னன், அநிருத்தன் என்பன விஷ்ணுவின் நான்கு ரூபங்கள், ஒவ்வொன்றும் அந்தப்பெயர்களையே கொண்ட நான்கு ரூபங்களையுடையது. 1. கிழக்கில் உள்ளது. அத்திசையை அடக்கி ஆள்வது. கிழக்குதிக் என்ற பெயருள்ள வாஸுதேவ-வாஸுதேவன். 2. அம்மாதிரியே மேற்கிலுள்ள ரூபம், வாஸுதேவ-ஸங்கர்ஷணன். 3. தெற்கிலுள்ளது வாஸுதேவ-ப்ரத்யும்னன். 4. வடக்கிலுள்ளது. வாஸுதேவ-அநிருத்தன் என்பது. இம்மாதிரி நான்கு அம்சங்களையுடைய வாஸுதேவனுக்கு ப்ரகாசவான் என்று பெயர் 4-5-2 எந்த அதிகாரி இதை அறிந்து உபாஸிக்கிருனே அவன் இவ்வுலகில் பிரகாசம் (புகழ்) உள்ளவனுகிருன். பிரகாசமான வைகுண்டம் முதலிய லோகங்களையும் அடைகிருன், இதை யார் அறிவானே அவனும் ஷை பலன்களைப் பெறுவான். 4-5-3 முற்றிற்று.

4-6-1 முக்யவாயு இம்மாதிரி கூறி உனக்கு அக்னிதேவன் மற்றொரு அம்சத்தைச் சொல்வான் என்ருர். ஸத்யகாமன் மறு நாட்காலையில் பசுக்களை வீட்டுக்கு ஓட்டிச்சென்று வழியில் மாலையில் அவைகளைத் தடுத்து நிறுத்தி அக்னிகார்யம் செய்துவிட்டு அக்னியின்முன் கிழக்கு நோக்கி உட்கார்ந்தான்.

4-6-2 அக்னி ப்ரத்யக்ஷமாகி, 'ஏ ஸத்யகாமா! உனக்கு 2வது ரூபமான ஸங்கர்ஷணனின் நான்கு ரூபங்களைக் கூறுகிறேன். 1 பூமிக்குள் உள்ளது. பூமி (ப்ருதிவீ) என்று பெயருடையது-ஸங்கர்ஷண வாஸுதேவன். 2. அந்தரிக்ஷத்தில் உள்ளது. அப்பெயர் கொண்டது-ஸங்கர்ஷண-ஸங்கர்ஷணன். 3 ஸ்வர்க்கத்திலுள்ளது. த்யு என்ற அப்பெயருள்ளது. ஸங்கர்ஷண-ப்ரத்யும்னன் 4 ஸமுத்திரத்திலிருப்பது அப்பெயருள்ளது. ஸங்கர்ஷண-அநிருத்தன். இந்த ஸங்கர்ஷணனுக்கு அனந்தவான் என்று பெயர். பலன் முன்போலவே. 4-6-5 முற்றிற்று.

4-7-1 அந்த அக்னி, உனக்கு ப்ரம்மதேவர் மற்றொரு அம்சத்தைக் கூறுவார் என்றான். மறு நாட்காலையில் ஸத்யகாமன் பசுக்களை ஓட்டிச்சென்று வழியில் சூர்யனின் அஸ்தமன இடத்தில் அக்னிகார்யம் செய்து உட்கார்ந்ததும் 4-7-2 ஹம்ஸரூபம் கொண்டு பிரம்மா பறந்து வந்து, ஹே ஸத்யகாமா! உனக்கு நான் மூன்றாவது ப்ரத்யும்னனின் அம்சத்தைக் கூறுகிறேன் என்றார்.

4-7-3- 1 அக்னியிலுள்ளது, அப்பெயருள்ளது ப்ரத்யும்ன-வாஸுதேவன் 2 சூரியனிடமுள்ளது அப்பெயருடையது. ப்ரத்யும்ன—ஸங்கர்ஷணன், 3 சந்திரனிடமுள்ளது, அப்பெயருள்ளது ப்ரத்யும்ன-ப்ரத்யும்னன். 4 மின்னலில் இருப்பது அப்பெயர் (வித்யுத்) கொண்டது.பிரத்யும்ன-இந்தப் பிரத்யும்னனுக்கு ஜ்யோதிஷ்மான் என்று பெயர். அநிருத்தன் பலன் முன்போல். 4-7-4 முற்றிற்று.

4-8-1 அந்தப்ரம்மா, 'உனக்கு மற்றொரு அம்சத்தை வருணன் உபதேசிப்பான்' என்றார். மறுநாள் காலை ஸத்யகாமன் பசுக்களை ஓட்டிக்கொண்டு எங்கு அஸ்தமித்ததோ அங்கு தங்கி அக்னிகார்யம் செய்து உட்கார்ந்தான். 4-8-2 வருணன் நீர்க்காகத்தின் ரூபங்கொண்டு அவனிடம் பறந்து வந்து, 4-8-3 ஏ ஸத்யகாமா! நான் உனக்கு நான்காவது ரூபமான அநிருத்தனின் அம்சங்களைக் கூறுகிறேன் என்றான். 1. ப்ராணனிடத்திலும் இந்திரியங்களிலும் இருப்பவன். ப்ராணன் எனப்பெயருள்ளவன் - அநிருத்தவாஸுதேவன் 2 கண்களிலிருப்பவன் அப்பெயர் (சக்ஷுஸ்) கொண்டவன்—அநிருத்த—ஸங்கர்ஷணன், 3. காதுகளில் உள்ளவன் அப்பெயர் (ச்ரோத்ரம்) கொண்டவன். அநிருத்தப்ரத்யும்னன் 4. மனதில் உள்ளவன் 'அப்பெயர் (மனஸ்) கொண்டவன்· அநிருத்த-அநிருத்தன் இந்த அநிருத்தனுக்கு ஆயதனவான் (இருப்பிடமுடையவன்) எனப்பெயர் பலன் முன்போல். 4–8–4 முற்றிற்று.

4–9–1 காட்டிலிருந்து புறப்பட்டு ஸத்யகாமன் வழியில் மூன்று இரவுகளைக் கழித்து நான்காம் நாள் குருகுலத்தை அடைந்தான். ஆசார்யன் ஹே ஸத்யகாமா !

4-9-2 ஸோமபாஞர்ஹனே! ப்ரம்மத்தை அறிந்தவன் போலப் பிரகாசிக்கிருயே! உனக்கு யார் உபதேசம் செய் தார்! எனக்கேட்டார். அவன்; 'தேவர்களே உபதேசித் தனர்' என்று கூருமல் மனிதர்களைத் தவிர மற்றவர்கள்' என்ருன். அதாவது தங்களுடைய சிஷ்யனுக்கு உபதேசம் செய்ய மனிதர் தகுதியற்றவர்கள் என்பதற்கே 'தேவர்க ளே உபதேசித்ததால் எனக்குத் தங்களுடைய உபதேசம் தேவையில்லை என்று தாங்கள் சொல்லக்கூடாது. தாங்களே என் இஷ்ட சித்தியின் பொருட்டு உபதேசிக்க வேண்டும். 4-9-3 ஏனெனில் தங்களைப் போன்ற மகானுபாவர்களிட மிருந்து

आचार्यात् ह्येव विद्या विदिता साधिष्ठं प्रापयति ।

ஆசார்யாத்ஹி ஏவ வித்யா விதிதா ஸாதிஷ்டம் ப்ராபயதி ।

நாம் வரித்த ஆசார்யனிடமிருந்து கற்ற வித்தையே உறுதி யாகவும் மிகமிகச் சிறந்ததாயுமுள்ள பலனைத் தரும் என்ப தைக் கேட்டிருக்கிறேன். நான் முக்கிய வாயுவையும்,அக்னி தேவனையும், பிரம்மாவையும் வருணனையும் குருவாக வரிக்கவில்லை, அவர்களே அடியேனிடம் கிருபை புரிந்து உபதேசித்துள்ளனர். அதைக்கேட்டதால் தவறு உண்டோ? எனருன். உடனே ஆசார்யர் வாயு முதலியவர்கள் கூறிய தையே உபதேசித்து விட்டு அவர்களிடம் கேட்டதால் யாதொரு தவறும் கிடையாது என்ருர். அதை உறுதிப் படுத்த இருமுறை கூறியுள்ளார். பிரம்மஸூத்ரம் 3-3-45 பார்க்க.

அத் 4 கண்டம் 9 முற்றிற்று.

4-10-1 இந்தநான்கு ரூபமுள்ள பகவானின் வித்யையையும், மரணகாலத்தில் அறியவேண்டிய மார்க்கத்தையும் மற் ருெரு கதையுடன் கூறுகிருர்.

உபகோஸலன் என்ற பெயருள்ள கமலாயனரின் குமாரன் முற்கூறிய ஸத்யகாம ஜாபாலனிடம் பிரம்ம ஞானத்தைப்பெற சிஷ்யனாக இருந்து குருவின் கார்ஹபத்யம் தக்ஷிணாக்னி, ஆஹவனீயம் என்ற மூன்று அக்னிகளையும் 12 வருஷங்கள் நன்கு பூஜித்து வந்தான் ஸத்ய காமன் அவனைத் தவிர மற்ற சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து அவர்களை வீட்டுக்கு அனுப்பிவிட்டான் 4-10-2 அவன் மனைவி அவனிடம் இந்த உபகோஸலன் அதிக சிரமத்துடன் தங்களையும் என்னையும் மூன்று அக்னிகளையும் சிரத்தையுடன் பூஜித்து வருகிறான். தாங்கள் அவனுக்கு உபதேசம் செய்யவில்லை. இந்த அக்னிகளும் சிபார்சு செய்யவில்லை. ஆச்சர்மாயிருக்கிறதே! அவனுக்கு உபதேசம் செய்து அனுப்புவீராக என்றாள். ஆயினும் அவன் உபதேசிக்காமலேயே வெளியூர் சென்றுவிட்டான்.

4-10-3 உபகோஸலன்,வியாதியால் = வி-உயர்ந்த, ஆதியால் மனோ வியாதியால் நொந்து உண்ணாவிரதம் செய்யத் தீர்மானித்தான்.

குருபத்னி, 'அப்பா! நீ ஏன் சாப்பிடவில்லை? சாப்பிடுவாயாக', என்றாள். அவன், 'அம்மா! எனக்குப் பல ஆசைகள் இருந்தன. ஒன்றும் நிறைவேறாததால் மனோ வியாதிகளால் சாப்பிடவில்லை', என்றான்.

4–10–4 இச்சமயத்தில், அந்த மூன்று அக்னி தேவர்களும் பரஸ்பரம் 'இந்தச் சிஷ்யன் நம்மை வெகுகாலம் நன்கு பூஜித்து வருகிறான்.நாம் மூவரும் சேர்ந்து உபதேசிப்போம்' என்று கூறி, தங்கள் திவ்ய ரூபங்களுடன் அக்னி குண்டங்களிலிருந்து எழுந்து, பின்வருமாறு உபதேசித்தனர்.

4–10–5

प्राणो ब्रह्म । कं ब्रह्म । खं ब्रह्म ।

ப்ராணோ ப்ரஹ்ம। க[1]ம் ப்ரஹ்ம । க[2]ம் ப்ரஹ்ம ॥

(ஹே உபகோஸ! என்று அவனைக்கூப்பிட்டு)

(முக்ய ப்ரம்மம், அமுக்ய ப்ரம்மம் என இரண்டு உண்டு.) ப்ராண:- முக்கிய வாயு, ப்ரம்ம - (எல்லா ஜீவர்களிலும்) பூர்ணரும். அமுக்ய ப்ரம்மமும் ஆவார். பலத்தின் தேவதை, க[1]ம் - பரிபூர்ண ஸுகஸ்வரூபியான விஷ்ணு, பிரம்ம - பூர்ணரும். முக்ய ப்ரம்மமும் ஆவார். க[2]ம்-பரிபூர்ண ஞான ஸ்வரூபியான விஷ்ணு, ப்ரஹ்ம-பூர்ணரும் முக்ய ப்ரம்மமும் ஆவார் என்றனர். சூத்ர பாஷ்யம் 1–2–15ல் கம் - சுகம், ப்ரஹ்ம - பூர்ணமானது. க[2]ம் - ஞானம், ப்ரஹ்ம-பூர்ண மானது. என்று அர்த்தம் செய்யப்பட்டுளது.

4–10–5 முற்றிற்று.

4–11–1, 2 பிறகு அவர்கள் தனித்தனியே பின்வருமாறு உபதேசித்தனர்.

கார்ஹபத்யாக்னி :— பூமி, அக்னி, அன்னம், சூரியன் என்ற நால்வர்களின் பெயர்களுடன் அந் நால்வர்களிடமும் உள்ள

य एष आदित्ये पुरुषो दृश्यते ।
सोऽहमस्मि । स एवाहमस्मि ।

ய ஏஷ ஆதித்யே புருஷோ த்ருச்யதே ஸோஹே மஸ்மி। ஸ ஏவா ஹமஸ்மி ॥

3 'எந்த விஷ்ணு சூரியனிடம் (7ம் வேற்றுமை) திவ்ய த்ருஷ்டிக்குப் புலப்படுவாரோ',

ஸோஹமஸ்மி-அவராக நானிருக்கிறேன்; ஸஏவாஹமஸ்மி அவராகவே நான்இருக்கிறேன். என்றுசொன்னன். அதாவது அவர் என் அந்தர்யாமியாக உள்ளே இருக்கிருர். அவரே என உள்ளிருக்கிருர். அவர் அஹம் - அஹேயத்வாத் - விட்டு விடத்தகாதவராதலால் அஹம் என்ற பெயரையுடையவர், அஸ்மி-நித்யாஸ்திதாமாஞத்-எப்போதுமிருப்பவர் ஞான ஸ்வரூபியாயிருப்பவர் ஆதலால், அஸ்மி என்ற பெயரு

டையவர். என்பது அர்த்தம். ஏனெனில் சூரியனிடம் என்று 7ம் வேற்றுமையிலும் நான் என்று முதல் வேற்றுமையிலும் உள்ளதால் ஐச்யம் பொருந்தாது.

सप्तमीयं भवद्ग्रन्थस्याष्टमीं कुरुते सदा ।

இந்த ஏழாம் வேற்றுமையானது ஸகல சாஸ்திர விரோதமான ஜீவா ஈசுவர ஐக்யத்தைக் கூறும் நூல்களுக்கு எப்போதுமே அஷ்டமீயைச் செய்கிறது. அஷ்டமியன்று அத்யயனம் செய்யக்கூடாதல்லவா! அந்நூல்களை ஒரு பொழுதும் படிக்கக்கூடாது என அறிவிக்கிறது.

4–12–1, 2 தக்ஷிணாக்னி:- ஜலம், திசைகள், நக்ஷத்திரங்கள் சந்திரன் என்ற நால்வர்களின் பெயருடன் அந் நால்வரிட முள்ள விஷ்ணு சந்திரனிடம் (7ம் வே.) திவ்யதிருஷ்டிக்கும் புலப்படுவாரோ, அவராக நான் (முதல் வே.) உளேன் அதாவது அவர் என் அந்தர்யாமியாயிருக்கிறார். அவரே என் அந்தர்யாமியாயிருக்கிறார் என்று உபதேசித்தான்.

य एष चन्द्रमसि पुरुषो दृश्यते ।

ய ஏஷ: சந்த்ரமஸி புருஷோ த்ருச்யதே

4-13-1,2 ஆஹவனீயாக்னி:-ப்ராணன், ஆகாசம் ஸ்வர்க்கம் மின்னல் என்ற நால்வரின் பெயர்களுடன் அந்நால்வரிட முள்ள எந்த விஷ்ணு மின்னலில்(7ம்வே.)திவ்யத்ருஷ்டிக்குப் புலப்படுவாரோ, அவராக நான் (முதல் வே.) உளேன். அதாவது அவர் என் உள்ளேயிருக்கிறார் என் அந்தர்யாமி ஆவார். என்று உபதேசித்தான்.

य एष विद्युति पुरुषो दृश्यते ।

ய ஏஷ வித்யுதி புருஷ: த்ருச்யதே

4–14–1 அந்த மூன்று அக்னிகளும் மீண்டும் ஒன்று சேர்ந்து உபதேசித்தது:- ஹே உபகோஸலா! நாம் முதலில் சேர்ந்து

உபதேசித்தது (கம் ப்ரம்ம) ஆத்மவித்யா-எங்கும் வியாபித்துள்ள விஷ்ணுவின் வித்யை, தனித்தனியாக உபதேசித்தது (ஸோஹமஸ்மி) அஸ்மத்வித்யா–எங்களுடைய வித்யா அதாவது எங்கள் அந்தர்யாமியான விஷ்ணுவின் வித்யா என்று அறிவாயாக.

உனது ஆசார்யன் நீ அடையும் இடத்தையும் (மோக்ஷத்தை) அதற்குச் செல்லும் மார்க்கத்தையும் உனக்கு உபதேசிப்பார்.

आचार्यस्तु ते गतिं वक्ता ।

ஆசார்யஸ்து தே கதிம் வக்தா ।

எனக்கூறினர்.

இச்சமயத்தில் ஆசார்யனும் வந்து சேர்ந்தார். 'ஹே உபகோஸலா! என்று கூப்பிட்டார்.

4–14–2 'இதோ வந்து விட்டேன் ஸ்வாமி' என்றான். அவர் உன் முகம் பிரம்மத்தை அறிந்தவனின் முகம் போல் பிரகாசிக்கிறதே! யார் உபதேசித்தார்? எனக் கேட்டார். அவனோ, யார் எனக்கு உபதேசிப்பார்?

इहावेव निह्नुतः । इमे नूनं ईदृशाः अन्यादृशाः इति ह अग्नीन् अभ्यूदे ।

இஹாவேவ நிஹ்னுத: । இமே நூனம் ஈத்ருசா: அன்யாத்ருசா: । இதி ஹ அக்னீன் அப்யூதே॥

இஹ-இப்பூமியிலுள்ள மனிதர்களும், அவ-அடியிலுள்ள பாதாள உலகத்திலுள்ள அஸுரர்களும், வ-இருவர்களும், நிஹ்னுத:- பகவானை அவமதிக்கிறார்கள். ஆகவே, இமே-இந்த என்று (அக்னிகளைக் காட்டி) ஈத்ருசா;-அக்னிஜ்வாலைகள் போன்ற நிறமுடையவர்களும், அன்யாத்ருசா:-ஒப்பற்ற கை கால்கள் முதலிய அவயவங்களை உடையவர்களுமான தேவர்களே. நூனம்-நிச்சயமாக உபதேசித்தனர்

இதி-என்று,அக்னீன் அப்யூதே-அக்னிகளைத் தெரிவித்தான். ஹ-பிரசித்தம் ஆசார்யன், ஹே ஸோமபானுர் ஹனே! இந்த அக்னிகள் உபதேசித்தது எது? என்று கேட்டார். 4–14–3 இதைத்தான் என்று உபதேசித்ததைக் கூறினன். பிறகு அவர் ஸரி,நான் உபதேசிக்கப்போவதை அறிபவனே,தாமரை இலையில் ஜலம் ஒட்டாதது போல்,பாபங்கள் ஒட்டா என்று கூறி, 4–15–1

य एषो अन्तरक्षणि पुरुषो दृश्यते एष आत्मा इति होवाच ।

ய ஏஷோ அந்தரக்ஷணி புருஷோ த்ருச்யதே । ஏஷ ஆத்மா இதிஹோவாச ॥

கண்ணின் உள்ளே, ய: புருஷ:- எந்த பூர்ணமான ஆறு குணங்களையுடையவன்,த்ருச்யதே-திவ்யதிருஷ்டிக்குப் புலப்படுவானே, ஏஷ:- அவனே. ஆத்மா-கொடுத்தல் பெறுதல் ஆகியவற்றை யுள்ளவனும், நன்கு பெறத்தகுந்த சுகத்தை அனுபவிப்பவனுமான பகவான் என்று கூறி, அந்தப் பகவானுடைய குணங்களையும் உபதேசித்து அருளி, அவனே அனுப்பிவைத்தார். ஸூத்ரம் 1–2–13,16 ஓம் சுந்தர உபபத்தே: ஓம் பிறகு பிரம்ம சூத்ர பாஷ்யம் அத்தி. 4, பாதம் 3, 4ல் கூறிய விஷயங்களையும் விளக்கினர். 4–15–6 முற்றிற்று.

அத்யாயம் 5 கண்டங்கள் 24 மந்திரங்கள் 88

ஓம், 4–3–1ல் ஸம்வர்க்கர் என்ற முக்யப்ராணர் அக்னி முதலிய தேவர்களை ஸம்ஹரிப்பவர் எனப்பட்டது. மோக்ஷத்தைப் பெறவும் அவருடைய பிரஸாதம் இன்றியமையாதது ஆகவே அவருடைய மகிமையைக் கூறுகிறது.

5–1–1

यो ह वै ज्येष्ठं च श्रेष्ठं च वेद । ज्येष्ठश्च ह वै श्रेष्ठश्च भवति । प्राणो वाव ज्येष्ठश्च श्रेष्ठश्च ॥१॥

யோ ஹவை ஜ்யேஷ்டம்ச ச்ரேஷ்டம்ச வேத I ஜ்யேஷ்டஸ்ச ஹவை ச்ரேஷ்டஸ்ச பவதி I ப்ராணோவாவ ஜ்யேஷ்டஸ்ச ச்ரேஷ்ட்ஸ்ச II

(ப்ருஹதாரண்யம் அத்தி 8லும் இதுபோல் உளது)

ஹவை-பிரசித்தனை, ய:-எந்த அதிகாரி, ஜ்யேஷ்டம் ச-வயதினுல் பெரியவராயும், ச்ரேஷ்டம் ச-குணங்களினுல் உயர்ந்தவராயும் உள்ளவரை, வேத-அறிவானே, அவன் ஜ்யேஷ்டஸ்ச ச்ரேஷ்டஸ்ச-மோக்ஷத்தில் தனக்குச் சமமான வர்களிடையே, பெரியவனுயும் உயர்ந்தவனுயும், பவதி ஹவை-ஆகிருன் என்பது பிரஸித்தம் யார் வயதினுல் பெரியவனுயும் குணங்களினுலும் பெரியவர்? ப்ராண: வாவ-முக்யப்ராணரே என்பது பிரசித்தம்.

5-1-2 யார், வஸிஷ்டம்-வசிப்பவர்களில் உயர்ந்தவரை அறிகிருனே அவன் ஷெ பலனையடைகிருன். வாக்கின் அபிமானி அக்னியே வஸிஷ்டர்.

5-1-3 யார், ப்ரதிஷ்டாம் ஸ்திரமாயிருப்பவரை அறிகிருனே, அவன் இவ்வுலகிலும் மறு உலகிலும் சுகமாயிருப்பான் கண் அபிமானி சூர்யனே ப்ரதிஷ்டா ஆவான்.

5-1-4 யார்? ஸம்பதம்-செல்வத்தின் தேவதையை அறிகிருனே, அவன் ஸகலாபீஷ்டங்களையும் பெறுவான். காதின் அபிமானி இந்திரனே ஸம்பத் எனப்படுவான்.

5-1-5 யார்—ஆயதனம்—வீடு அரண்மனை ஆகியவற்றின் தேவதையை அறிகிருனே, அவன் இங்கு வீடு முதலியவற்றை அடைகிருன் மனதின் அபிமானி சிவனே ஆயதனம் எனப்படுவான்.

முக்யப்ராணன் ஸம்ஹாரம் செய்பவன் என்பதற்கு உரிய பலத்தையும் மேன்மையையும் கதையால் விளக்குகிருர் (1–2–1 பார்க்க)

5-1-6 மு 15:-வாயு ஜீவோத்தமர்; வாக் முதலிய இந்திரியாபி மானிகளான அக்னி முதலிய தேவதைகள் 'நானே உத்த மன்' என்று ஓர் சமயம் விவாதம் செய்தனர்.

5-1-7 அவர்கள் தம் தந்தையான பிரம்மாவிடம் சென்று, 'நம்மில் யார் சிரேஷ்டர்' எனக்கேட்டனர் (ப்ருஹதா ரண்யபாஷ்யம் 8-1-1ல் தந்தையான நாராயணனிடம் கேட்டனர் என்றுளது. அது ஒரு கல்பத்தில், இது ஒருகல் பத்தில் நடந்தது என அறியவும்) அவர் அவர்களிடம் உங் களிடையே, யார் இந்த என் உடலிலிருந்து வெளியேறினுல் இது பிணம் போன்று காணப்படுமோ, கீழே விழுமோ அவன் உங்களில் உயர்ந்தவன்' என்ருர்.

5-1-8 அவர்கள் பிரம்மாவின் தேகத்தை விட்டு ஒவ்வொரு வராக வெளியேறினர்.) வாக்கின் அபிமானி அக்னி முதலில் வெளியேறி, ஒரு வருஷம் கழித்து, திரும்பிவந்து தேகத் திலிருந்த மற்ற அபிமானி தேவதைகளை நான் இல்லாத போது நீங்கள் எவ்வாறு வாழ்ந்தீர்கள்? எனக் கேட்டான் அவர்கள் 'உன் கார்யமான பேச்சு ஒன்று மாத்திரம் இல் லாமல் ஊமையாக வாழ்ந்தோம் தேகம் வாழவில்லை என்ற னர்.

5-1-9 பிறகு கண்ணின் அபிமானி சூர்யன் 5-1-10 காதின் அபிமானி சந்திரன் 5–1–11 மனதின் அபிமானி சிவன் ஆகியோர் கிளம்பி திரும்பி வந்து அதே பதிலைக்கேட்டு தேகத்தில் வசித்தனர் 5–1–12 இப்பொழுது முக்யப்ராணன் கிளம்புகிறவனுய் நான்கு முளைகளில் உறுதியாகக் கயிறு களால் கட்டப்பட்ட ஓர் உயர்ந்த ஜாதிக் குதிரை அந்தக் கயிறுகளை அறுத்துக் கொண்டு முளைகளுடன்கூட செல்வது போல் மற்ற அபிமானிதேவர்களையும் இழுக்க ஆரம்பித் தார். உடனே அவர்கள் அனைவரும் முக்யப்ராணனிடம் பூஜ்யரே, நீரே நம்மில் குணங்களினுல் சிரேஷ்டர் வெளிக் கிளம்ப வேண்டாம் என்று வேண்டினர்.

5–1–13 வாக் அபிமானி அக்னி, 'நான் வஸிஷ்டனுக இருக்கும் குணம் உம்மிடமே முக்யமாயுளது உமது அதீனமானது என்றான். கண் அபிமானி ஸூர்யன். 'நான் ப்ரதிஷ்டாவாயிருக்கும் குணம் உம்முடையதே, உமக்கு அதீனமானது என்றான்.

5–1–14 சாதின் அபிமானி சந்திரன் நான் ஸம்பத்தாகவிருக்கும் குணம் உம்மிடமே முக்கியமாயுள்ளது. உமது அதீனமானது' என்றான். மனதின் அபிமானி சிவன், நான் ஆயதனமாகவிருக்கும் குணம் உம்மிடமே முக்கியமாயுள்ளது, உமது அதீனமானது' என்றான்.

5–1–15 இந்த நால்வர் கூறியது உண்மையே என்பதற்கு ஓர் அடையாளத்தைக் கூறுகிறார். இந்த இந்திரியாபிமானி தேவர்கள் ஸ்வதந்திரமாகத் தத்தம் தொழில்களைச் செய்ய சக்தியற்றவர்கள் என ஜ்ஞானிகள் கூறுவர். முக்ய ப்ராணனின் அதீனமாகவே செய்து வருகின்றனர். அதனுல் அவர்களைப் ப்ராணு: என்றே கூறுகிறோம். ப்ராணு: = இந்திரியங்கள் என்று அர்த்தமுண்டு அல்லவா! பிரம்மசூத்ரம் 1–4–3 ஓம் ததீனத்வாத் அர்த்தவத் ஓம். சேனைகளே போர் செய்து ஜயிக்கின்றன அரசன் போர் புரிவதில்லை. ஆயினும் அரசன் ஜயித்தான் என்கிறோம். ஏனெனில் அந்த சேனைகள் அரசனின் அதீனமானதால், சேனைகள் ஜயித்தன என்று கூருமல் அரசன் ஜயித்தான் என்கிறோம். இதற்கு ததீனத்வ ந்யாயம் எனப் பெயர்.

5–2–1

सहोवाच । किं मेऽन्नं भविष्यति इति । यत्किञ्चित् इदम् । आश्वभ्यः आशकुनिभ्यः इति होचुः । तद्वा एतत् अनस्यान्नम् । अनो ह वै नाम प्रत्यक्षम् । न हवा एवं विदि किञ्चन अनन्नं भवति इति ॥ १ ॥

ஸஹோவாச । கிம் மே அன்னம் பவிஷ்யதி இதி । யத்கிஞ்சித் இதம் ' ஆச்வப்ய : ஆசகுனிப்ய: இதி ஹோசு: । தத்வா ஏதத் அனஸ்ய அன்னம் । அனோ ஹவை நாம ப்ரத்யக்ஷம் । நஹவா ஏவம் விதி । கிஞ்சன அனன்னம் பவதி இதி ॥

ஸ: ஹஉவாச-அந்த முக்ய ப்ராணர் கேட்டார். நான் சிரேஷ்டன் என்றால், மே-எனக்கு, கிம்-எது; அன்னம் பவிஷ்யதி - சாப்பிடும் அன்னம்? இதி-என்று கேட்டான். அவர்கள், ஆச்வப்ய:- நாய் முதற்கொண்டு ஆசகுனிப்ய:- பக்ஷிகள் வரையிலுள்ள,பிராணிகளின் கூட்டம்,யத்கிஞ்சித்- ஏதாவதான, இதம் - இந்த தகுந்த அன்னமோ அதுவே', இதி ஊசு:- என்று சொல்லின.

தத்-அந்த-அவர்கள் கொடுத்த, ஏதத் - இந்த (எல்லா ப்ராணிகள் சாப்பிடும் அன்னமும், அனஸ்ய - முக்யப்ராண னுடைய, அன்னம் வை-அன்னம் என்பது பிரசித்தமானது. ஹி-ஏனெனில், அனோ=அன:-முக்யப்ராணன், ப்ரத்யக்ஷம்- ப்ரதி அக்ஷம் - ஒவ்வொரு பிராணியின் இந்திரியங்களிலும் ஸ்திரமாயிருப்பவன்,நாம-அல்லவா! ஏவம் விதி-இம்மாதிரி எல்லாம் முக்யப்ராணனின் அன்னம்,என்று அறிந்தவனிடம் கிஞ்சன-எதுவும் அனன்னம் நபவதி=அன்னம் பவதி-அன்ன மல்லாததாக ஆகாது. அன்னமேயாகும் என்பது. ஹவை- பிரசித்தம்.

5–2–2

सहोवाच किंमे वासो भविष्यति इति । आपः इति होचुः। तस्मात् वै एतत् अशिष्यन्तः पुरस्ताच्च उपरिष्ठाच्च अद्भिः परिदधति । लम्भुको ह वासो भवति । अनग्नो ह भवति ॥ २ ॥

ஸ ஹோவாச । கிம்மே வாஸோ பவிஷ்யதி இதி । ஆப: இதி ஹோசு: । தஸ்மாத்வை ஏதத் அசிஷ்யந்த: புரஸ்தாத்ச உபரிஷ்டாச்ச அத்பி: பரிதததி । லம்புகோ ஹ வாஸோ பவதி । அநக்னோஹ பவதி ॥

ஸ:- அந்த முக்யப்ராணர், மே - எனக்கு, கிம் - எது, வாஸ: பவதி - வேஷ்டியாகும்? இதி ஹ உவாச - என்று கேட்டார். (தே—அவர்கள்), ஆப:- எல்லா பிராணிகளும் குடிக்கும் ஜலம் உமக்கு வேஷ்டியாகும், இதி ஹ, ஊசு:-என்று சொன்னார்கள். தஸ்மாத்-அதனால், வை-அல்லவா, ஏதத்-இந்த அன்னத்தை, அசிஷ்யந்த:- சாப்பிடுபவர்கள், புரஸ்தாத்ச-முதலிலும், உபரிஷ்டாத்ச-(மேலேயும்) கடைசியிலும் (அன்னத்தின் கீழும் மேலும்), அத்பி:-ஜலத்தால், பரிதததி-மூடுகிறார்கள். முதலில், அம்ருத உபஸ்தரணம்ஸி - ஹே ஜலமே நீ விரிப்பாகவிருக்கிறாய்,' என்றும், கடைசியில் 'அம்ருத - ஹே ஜலமே! நீ மூடியாகவிருக்கிறாய்' என்று ஆபோசனம் செய்கிறார்கள். ஆபோசனம்என்ற பதத்திற்கே ஜலத்தைக் குடித்தல் என்று அர்த்தம்.

प्राणस्य वस्त्रबुद्धा तु भोजनोभयत: पिबन् ।
स्वर्गे मुक्तौ तथा दिव्य वस्त्रलाभी भवेत् ध्रुवम्

ப்ராணஸ்ய வஸ்த்ரபுத்தாது, போஜனோபயத: பிபன் । ஸ்வர்க்கே முக்தௌ ததா திவ்ய, வஸ்த்ர லாபீ பவேத் த்ருவம் ॥

சாப்பிடுவதற்கு முதலிலும் கடைசியிலும் செய்யும் நம் ஆபோசனம் முக்யப்ராணனின் மேல் வஸ்திரமாயும் உடுத்தும் வஸ்த்ரமாயும் உள்ளன என்ற அறிவினால் ஸ்வர்க்கத்திலும் மோக்ஷத்திலும் திவ்யமான வஸ்திரங்களைப் பெறுவான். என ப்ரபஞ்ஜனம் என்ற நூலில் கூறப்படுகிறது. இங்கு

வாஸ:- வஸ்திரங்களை, லம்புக: பவதி - அடைந்தவனாக ஆகிறான். அநக்ன: பவதி-நிர்வாணமாகமாட்டான். ஹ- பிரசித்தம்.

5–3 மு 10, 8 கண்டங்களில்) பஞ்சாக்னி வித்தையைக் கதையின் மூலம் விளக்குகிறார் (ப்ருஹதாரண்யம் அத். 8 ப்ராம்மணம் 2லும் இது உள்ளது.)

5–3–1 ச்வேதகேது என்று பெயர். அருணி (அருணனின் பேரன்(வே டீகா, என்பவரின் புத்திரன். பாஞ்சால தேசத்தின் வித்வத் ஸபைக்குச் சென்றான். ஜிபிலரின் புத்திரனும் ப்ரவாஹணன் என்ற பெயருள்ளவனுமான அரசன் (1-8-1) அவனை, 'ஏ மாணவா! உன் தந்தை உனக்கு வித்தையை உபதேசித்திருக்கிறாரா?', என்று கேட்டான். அவன், ஹே பூஜ்யரே! ஆம். உபதேசித்திருக்கிறார்', என்றான்.

5-3-2 அரசன் 1 எந்த வழியாக ஜனங்கள் இவ்வுலகிலிருந்து மறுலோகம் செல்கின்றனர் என்பதுதெரியுமா?ச்வேதகேது- தெரியாது. 2 அங்கிருந்து இவ்வுலகிற்கு எந்த வழியாக திரும்பி வருகிறார்கள் என்பது தெரியுமா?ச்வேத:தெரியாது 3 தேவயானம் பித்ருயானம் என்ற இரு வழிகளில் நடுவிலுள்ள இடங்கள் தெரியுமா? ச்வேத-தெரியாது 5–3–3, 4 அந்த மறு உலகம் இங்கிருந்து செல்லும் ஜனங்களினால் நிறைவதில்லை என்பது தெரியுமா? ச்வேத: தெரியாது. 5 ஐந்தாம் இடத்தில் ஹோமம்செய்யப்படும்,ஜலம் முதலிய 5 பூதங்கள், ஜீவர்கள் ஆண் பெண் எனப்படுகிறார்கள் என்பது தெரியுமா? ச்வேத-தெரியாது.

5–3–4 அரசன்: அப்படியானால், கற்றிருக்கிறேன் என்று எவ்வாறு கூறினாய்?இவ்விஷயங்களை அறியாதவன் எவ்வாறு கற்றவனாவான்? ச்வேதகேது மிகுந்த துக்கத்துடன் தந்தையிடம் திரும்பி வந்தான். ஹே பூஜ்யரே! எனக்கு உபதேசம் செய்யாமலேயே அல்லவா, உபதேசித்திருக்கிறேன் என்று சொன்னீர்கள்!' தந்தை: 'உபதேசித்திருக்கிறேனே' என்றார்

5–3–5 அந்த மட்டமான அரசன் என்னை 5 கேள்விகளைக் கேட்டான், ஒரு கேள்விக்குக் கூட எனக்குப் பதில் கூறத்

தெரியவில்லே? நீங்கள் சொல்லிக் கொடுங்கள் எனக் கூறி (அந்த 5 கேள்விகளேயும் தெரிவித்தான்). தந்தை, அப்பா! அதன் பதில்களேச் சொல்லும்படி கேட்காதே! எனக்கும் அவைகளில் ஒன்று கூடத் தெரியாது. எனக்குத் தெரிந்திருந் தால் உனக்குச் சொல்லாமல் இருப்பேனு? எனக்கு தெரிந்த அனேத்தையும் கற்பித்துள்ளேன் (ப்ருஹதாரண்யம் அத். 8 ப்ராம்மணம் 2ல்: அந்த விஞக்களின் விடைகளே அறிய நாமிருவரும் அவனிடம் கற்றுக்கொள்வோம்' என்ருர். புத்திரனே 'நான் வரவில்லே. தாங்கள் போய் அறிந்து வாருங்கள்' என்ருன்.)

5–3–6 கௌதம கோத்ரத்தைச் சேர்ந்த அந்த தந்தை அரசனின் அரண்மனேக்குச் சென்ருர். அரசன் அவரைத் தகுந்தவாறு பூஜித்தான். மறுநாள் காலேயில் அவர் காணிக் கையுடன் ஸபையிலிருந்த அரசனேக் கண்டார், அரசன். தைவச்செல்வம் என்ற ஞானத்திற்காக வந்திருக்கிருர் என்று அறிந்து, 'பூஜ்யரான கௌதமரே! மானிடச் செல்வ மான எப்பொருள்கள் வேண்டுமோ கேளுங்கள்? என்ருன். அவரோ அரசே! அது உம்மிடமே இருக்கட்டும். என் குமார னிடம் எந்தக் கேள்விகளேக் கேட்டீரோ, அவற்றின் விடை களே எனக்குச் சொல்வீராக? என்ருர். 5–3–7 அரசனுக்குத் தர்மஸங்கடமாயிற்று.

ஆயினும், 'ஒரு வருஷம் வசிக்காதவனுக்கு உபதேசிக்க லாகாது', என்ற சாஸ்த்ரத்தை யொட்டி, 'தாங்கள் என்னிடம் வசிக்கவும். நீர் எந்த வித்தையை கோருகிறீரோ, அதற்குப் பஞ்சாக்னி வித்தை எனப் பெயர். இது உமக்கு முன்னிருந்த பிராம்மணர்களுக்குத் தெரியாமலே க்ஷத்திரி யர்களின் சொத்தாகவே இருந்தது அதன் மகிமையினுல் தான் உலகெங்கும் க்ஷத்திரியர்களே ராஜ்ய பரிபாலனம் செய்து வருகின்றனர். இப்போது நான் உமக்கு கூறுகிறேன்? என்ருன். நாம் விஸ்தாரமாயுள்ள அதை இங்கு சுருக்கிக் கூறுவோம். விஞ 5ன் விடை முக்யமானதால் அதை முதலில்கூறுகிருன். 5-4-1 சிரத்தையுடன் யாகம் செய்தவன்

அந்தப் புண்யத்தினல் ஸ்வர்க்கத்தை யடைந்து சுகித்து புண்யம் முடிந்ததும் அங்கிருந்து (பர்ஜன்யன் மழையின் தேவன்) மழையின் மூலம் பூமியை அடைந்து, நெற்பயிர் முதலிய தான்ய வகைகளில் வசித்துஅவ்வுணவைப் புசிக்கும் புருஷனை யடைந்து, அவனுடைய ஸ்த்ரீயின் கர்ப்பத்தில் ரேதஸ்ஸின் மூலம் சென்று ஆப:- ஜலம் முதலிய ஐந்து பூதங்களாலான ஜராயு என்ற பையிலிருந்து புருஷனுகப் பிறக்கிறுன் ப்ரம்மசூத்ரம் 3–1–1 இது ஓர் யாகம் போலவே வர்ணிக்கப்படுகிறது 1 ஸ்வர்க்கம் (த்யு) 2 பர்ஜன்யன் 3 பூமி (தரா) 4 புருஷன் (பும்) 5 ஸ்த்ரீ என்பவை. 5 அக்னிகள். ஹோமம் செய்பவர்கள் தேவர்கள்.ஹோமம் பொருள் அந்த யாகம் செய்த ஜீவன். ஷை ஐந்து அக்னிகளின் அந்தர்க்கத மான 1 நாராயணன் 2 வாஸுதேவன் 3 ஸங்கர்ஷணன் 4 ப்ரத்யும்னன் அநிருத்தன் என்ற 5 பகவத் ரூபங்கள். இவற்றில் 5ம் அக்னியான ஸ்த்ரீயிடம் ஆஹுதியாக ஹோமம் செய்யப்பட்ட ஜீவன், புருஷன் என்ற பெயருடன் பிறக்கிறுன் என்பதை அறிவாயா? என்றேன் உமது மகனிடம். இல்லை என்றுன் அவன்.

5–9–2 பிறந்த அவன் தன் ஆயுள்வரை வாழ்ந்து இறந்ததும் அந்த தேவர்களே அவனை ஸ்வர்க்கத்திற்கு அழைத்துச் செல்கின்றனர். 'எந்த வழியாக' என்ற முதல் இரண்டு வினு விடைக்கும் பொருந்துகிற 3ம் வினு விடையை அடுத்து கூறுகிறுன். அரசன்:- இந்த பஞ்சாக்னி வித்தையை அறிந்தவர்களும், காட்டில் சிரத்தையுடன் தவம்முதலிய நிஷ்காம கர்மங்களைச் செய்து கொண்டு பகவானைத் தியானிக்கும் ஞானிகள், அர்ச்சிஸ் என்ற அக்னி புத்ரனின் உலகத்தை அடைகிறுர்கள் (பிரம்மசூத்ரம் 4-3-1) அங்கிருந்து, பகல் அபிமானி, சுக்லபக்ஷாபிமானி, உத்திராயண மாதங்களபிமானி. 5–10–2 வருஷத்தின் அபிமானி, சூரியன், சந்திரன், மின்னல் அபிமானி பாரதி, அவளுடைய கணவன் முக்ய ப்ராணன் ஆகியோரின் உலகங்களை யடைகிறுர்கள். அந்த முக்யப்ராணன் அவர்களில் சிலரை பிரம்மதேவனிடமும், சிலரை விஷ்ணுவிடமும் அடைவிக்கிறுன். இது தேவயானம் அல்லது அர்ச்சிராதி மார்க்கம் எனப்படும். கீதை 8-24.

5-10-3 கிராமத்தில் வசித்து யாகம், குளம் வெட்டுதல் தானம் முதலிய காம்யகர்மங்களைச் செய்பவர்கள் புகையின் அபிமானிதேவனின் லோகத்தை அடைந்து, இரவு, கிருஷ்ண பக்ஷம், தக்ஷிணாயனமாதங்கள், இவற்றின் அபிமானி லோகங்களை அடைகிறார்கள். 5-10-4 அங்கிருந்து பித்ருலோகம், ஆகாசலோகம் (அதன் அபிமானி விநாயகரின் உலகம்) சந்திர லோகத்தை அடைகிறார்கள். 5-10-5 அங்கு வசித்து முடிவில் மறுபடியும் ஆகாசலோகம் வந்து வேறு வழியாக வாயு, புகைஅபிமானி, அப்ரம் என்ற மேகாபிமானி. 5-10-6 மற்ற மேகாபிமானி உலகங்களை யடைந்து மழையின் மூலமாக பூமிக்கு வந்து தான்ய வகைகளில் வசித்து அவைகளை உண்ணும் புருஷனிடமிருந்துஸ்த்ரீயின்கர்ப்பத்தில் வசித்துப் பிறக்கிறான். (5ம் வினா விடைப் பகுதி). இது பித்ருயானம் அல்லது தூமாதிமார்க்கம் எனப்படும்.

5-10-8 நான்காம் வினாவிடை; இந்த தேவயானம், பித்ருயானம் என்ற வழிகளுக்கு முறையே சாதனமான பகவத்ஞானம், காம்யகர்மம் ஆகிய இரண்டையும் புறக் கணிக்கின்றவர்கள் (பிரம்மசூத் 3-1-18) அற்பமானவர்கள் சுகதுக்கக்கலப்புள்ளவர்கள் அடிக்கடி பிறப்பு இறப்புக்களுக்கு (நித்ய ஸம்ஸாரிகள்) ஆளாகிறார்கள், இவ்வாறு இருவழி களில் சிலர் செல்வதில்லை. சென்றவர்களில் கர்மிகள் திரும்பி வந்துவிடுகின்றனர். ஆகவே அவ்வுலகங்கள் ஒரு போதும் நிறைவதில்லை.

5-10-10

अथ ह य एतान् एवं पञ्चाग्नीन् वेद । न सह तैरपि आचरन् पाप्मना लिप्यते । शुद्धः पूतः पुण्यलोको भवति । य एवं वेद य एवं वेद ॥ १० ॥

அதஹ ய ஏதான் ஏவம் பஞ்சாக்னீன் வேத । ந ஸஹ தைரபி ஆசரன் பாப்மனா லிப்யதே । சுத்த:

பூத: புண்யலோகோ பவதி । ய ஏவம் வேத । ய ஏவம் வேத ॥

அத-இப்பொழுது, ய:-எந்த அதிகாரி, ஏவம்-இவ்வாறு கூறப்பட்ட, ஏதான்-பஞ்சாக்னீன்-ஐந்து அக்னிகளை, வேத-அறிவானோ ஸ:-அந்த ஞானி, தை: ஸஹ-5-10-9ல் கூறப்பட்ட 1 தங்கத்தைத் திருடுபவன் 2 கள் குடிப்பவன், 3 குருபத்னியைக் கெடுப்பவன், 4 பிராம்மணனைக் கொன்றவன் 5 அந்த நால்வரின் தொடர்புள்ளவன் ஆகிய பஞ்சமகாபாதகிகளுடன், ஆசரன் அபி-தொடர்புள்ளவனாயினும், பாப்மனா ந லிப்யதே-பாபத்தின் ஸம்பந்தத்தை அடையமாட்டான். ய:-எவன், ஏவம் வேத-இம்மாதிரி அறிந்த ஞானிக்கு, பாபம் ஒட்டுவதில்லை என அறிகிறானோ, அவன், சுத்த:-தான்சுத்தனாகி, பூத:-மற்றவர்களையும் பரிசுத்தப் படுத்துகிறான்.

5-11 முதல் 18 கண்டங்களில் வைச்வாநர வித்தையைக் கூறுகிறார்.

5-19-24 ஹோமங்களைக் கூறுகிறார். 5ம் அத்தியாயம் முற்றிற்று.

அத்தியாயம் 6. கண்டங்கள் 17. மந்திரங்கள் 71.

முன் அத்தியாயங்களில் ஜீவஜடப்பொருள்களையுடைய இவ்வுலகைக் காட்டிலும் வேறானவனும் ஸர்வோத்தமனுமான பகவானை அறிபவர்களுக்கு ஸ்வர்க்கம் மோக்ஷம் முதலிய பலன்களைத்தரும் உபாஸனைகள் கூறப்பட்டன. இந்த அத்தியாயத்தில் ஜீவேசுவரபேத விஷயத்தில் ஸந்தேகமோ அல்லது விபரீதஞானமோ உள்ளவர்களுக்கு ஜீவேசுவரபேதஞானமே மோக்ஷஸாதனம் என்பது யுக்திகளுடன் உபதேசிக்கப்படுகிறது. ச்வேதகேதுவின் உபாக்யானம் முதலில் கூறப்படுகிறது.

6-1-1 हरिः ओं। ஹரி: ஓம்| ச்வேதகேது என்ற பெயருள்ளவன். அருணருடைய பிள்ளை அல்லது பேரன் இருந்தான். ஹ-என்பது பிரசித்தம். அவன் தந்தை உத்தாலகர் என்றும் (6-8-1) கௌதம கோத்ரமானதால் கௌதமர் என்றும் பெயருள்ளவர். 5-4-1 அவர் அவனிடம் 'ஹே ச்வேதகேதோ! வேதாத்யயனத்தின் பொருட்டு குருவிடம் வசிப்பாயாக, ஸோமபாஞர்ஹனே! நம் வம்சத்திற் பிறந்தவன் அத்யயனம் செய்யாமல் உண்மையான ப்ராம் மணனுயிராமல் இருக்கக்கூடாதல்லவா!? என்று சொன்னார் 12 வயதுள்ள அவனும் உடனே குருவிடம் 12 வருஷங்கள் வசித்து ஆறு அங்கங்களுடன் வேதங்களைக் கற்றுத்தானே பெரிய வித்வான் என்று கர்வத்துடன் வீடு திரும்பி இறுமாப்புடன் வந்தான். (தந்தை முதலியோரை வணங்கவில்லை). தந்தை, ச்வேதகேதோ! சந்திரன் போன்ற அழகனே! நானே படித்தவன் மற்றவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்று வணங்காமுடி மன்னனுயிருக்கிருயே! ஏன்? எந்த ஸ்ரீமன் நாராயணனைப்பற்றி ச்ரவணம் செய்வதால் நாம் கேட்காத அனைத்தின் பலனையும், மனனம் செய்வதால் நாம் அறியாத அனைத்தின் பலனையும் தியானம் செய்வதால் த்யானிக்காத அனைத்தின் பலனையும் அடைவோமோ, அந்த பிரசித்தனுனவனும் ஸகல வேதங்களுக்கும் முக்யார்த்தமாகவுள்ளவனுமான, அவனைப்பற்றி நீ குருவைக்கேட்டு அறிந்தாயா?' என்ருர். (நாம் நம் பையன்களை உன் குரு இதைக்கற்றுக் கொடுத்தார? என்று கேட்பதுபோல கேட்டிருந்தால், அவன் அந்தக் கர்வத்தின் நிலையில் 'குருவுக்கே தெரியாது' என்று சொல்லிருப்பான். அதையும் அடுத்தாற்போல் 6-1-4ல் சொல்லியும் விட்டான்). அவன், 'ஒரு வஸ்துவின் ஞானத்தால் மற்ற எல்லா வஸ்துக்களின் ஞானம் ஞான பலன் எவ்வாறு வரும்? பொருந்தவில்லையே;' என்ருன்.

தந்தை உபதேசிக்க ஆரம்பித்தார்: 6-1-1

यथा सोम्य एकेन मृत्पिण्डेन सर्वं मृन्मयं विज्ञातं स्यात् । वाचाऽऽरंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् ॥

யதா ஸோம்ய ஏகேன ம்ருத்பிண்டேன ஸர்வம் ம்ருன்மயம் விஜ்ஞாதம்ஸ்யாத் । வாசாரம்பணம் விகாரோ நாமதேயம், ம்ருத்திகேத்யேவ ஸத்யம்॥

1. ஸோமபானுர்ஹனே! எவ்வாறு ஓர் பிடி களிமண்ணை அறிவதால், அதன் ஸாத்ருச்யத்தால் (அது போன்றிருப்பதால்) களி மண்ணாலான எல்லாப் பொருள்களின் ஞானம் பிறர் உபதேசமில்லாமலேயே, ஏற்படுகிறதோ, அவ்வாறே, ப்ரஹ்ம ஸத்யம்-குணபூர்ணனை விஷ்ணு ஸத்யமான வஸ்து என்று அறிவதால், ஸத்யமாயிருக்கும் ஸாத்ருச்யத்தால் உலகம் ஸத்யமானது என்ற ஞானம் ஏற்படுகிறதல்லவா!

N. B.: (முதலில் அறிய வேண்டிய விஷயம்:- ஸம்ஸ்கிருத எழுத்துக்கள் 51ம் நித்யமானவை. யாராலும் உண்டு பண்ணப்பட்டவையல்ல. நாசமற்றவை. மாறுதல் இல்லாதவை. அவற்றாலான ஸம்ஸ்க்ருதப் பெயர்களும் அப்படியே. நம் உச்சரிப்பு அவற்றை வெளிப்படுத்துகிறதே தவிர உண்டு பண்ணுவதில்லை. ஆனால் மற்ற பாஷைகளின் எழுத்துக்கள் நித்யமானவையல்ல, மனிதர்களால் இடப்பட்ட பெயர்களாகும் ஆகவே மாறுபவை. தமிழ் எழுத்துக்கள் அடிக்கடி சீர்படுத்தப்படுவதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம் அல்லவா).

2. வாசா ஆரம்பணம்-வாயினால் உச்சரிக்கப்படும், நாமதேயம்-மண், Mud போன்ற மற்ற பாஷைப் பெயர்கள் விகாரம்-உண்டாகின்றன மாறுதலுள்ளவை. ஆகையால் நித்யமானவையல்ல ம்ருத்திகாஇத்யேவ - அதன் ஸம்ஸ்க்ருதப் பெயரான மிருத்திகை என்பதே ஸத்யம்-மாறாதது. ஆகையால் ஸத்யம் எப்போதும் இருப்பது அதனால் ஸம்ஸ்

க்ருதப் பெயர்கள் முக்யமானவை. மற்ற பாஷைப் பெயர் கள் அமுக்யமானவை. மற்ற பாஷை பெயர்களின் அறிவால் ஏற்படும் பலன், ஸம்ஸ்க்ருதப் பெயர்களை அறிவதால் கிட்டும். அம்மாதிரி வேதத்தில் கூறப்படும் கர்மங்கள் மற்ற தேவதைகள் முதலிய உலக ஞானத்தினால் ஏற்படும் பலன் எல்லோரைக் காட்டிலும் முக்கியனான விஷ்ணுவின் ஞானத் தினால் கிட்டும். ஆகவே, எந்த விஷ்ணுவைப் பற்றிய சிரவணம், மனனம், தியானம் ஆகியவற்றைச் செய்தால் அம்மாதிரி செய்யாத எல்லாப் பொருள்களின் பலன் களும் நமக்குக் கிட்டும் என்பது திண்ணம்.

N. B.: ஒரு பிடி களி மண்ணின்-ஸாத்ருச்யத்தால் ஒருவஸ் துவின் ஞானத்தால் மற்றவஸ்துக்களின் ஞான பலன் உண் டாகும் எனப்பட்டது. 2 வது ஒரு முக்கியமான வஸ்துவின் ஞானத்தால் அமுக்யங்களின் ஞான பலன் கிட்டும் எனப் பட்டது. மூலத்தில் இன்னும் 4 உவமைகள் தரப்பட்டுள்ளன 1 லோஹமணி உலோகங்களிற் சிறந்த தங்கப் பொருள். 2 தங்கத்தின் ஸம்ஸ்கிதப் பெயர் 3 நகம் வெட்டும் கருவி 4 அதன் ஸம்ஸ்கிருதப் பெயர் ஏனெனில் கடினமான விஷயங்களை நன்ருகப் பதியவைக்கவே. தத்வமணி என்ற ப்ரகரணத்தில் 9 உவமைகள் தரப் போகிருர்.

6–1–4 ச்வேதகேது தந்தையிடம் ‘பூஜ்யரான என் குருவுக்கே நீங்கள் கூறிய விஷயம் தெரியாது என்பது நிச்சயம். ஆகை யால் தாங்களே முக்யத்தின் ஞானத்தால் அமுக்யங்களின் ஞான பலன் கிட்டும் என்பதை விவரியுங்கள்; என்ருன். ப்ரஹ்மம் என்ற விஷ்ணுவே முக்கியமானது இவ்வுலகம் அமுக்யமானது. ஏனெனில் விஷ்ணு அதைப் படைக்கிருர் அது படைக்கப்படுகிறது; என்பதற்குச் சிருஷ்டியைக் கூறுகிருர்.

6–2–1, 2

सदेव सोम्य इदमग्र आसीत् । एकमेव अद्वितीयम् ।

ஸதவே ஸோம்ய இதமக்ரே ஆஸீத்। ஏகமேவ அத்விதீயம் ।

இதம்—அஸ்ய-இந்த உலகத்திற்கு, அக்ரே-முன்னர்; ப்ரளயத்தில், ஸத் ஏவ-ஸர்வோத்தமமானதால் ஸத்என்ற விஷ்ணுவே, ஆஸீத்-இருந்தார். (லக்ஷ்மீ முதலிய பிறர்கள் இருப்பினும் அவர்கள் ஸர்வோத்தமர்களாயில்லை) அவருடைய ஸ்வரூபம் யாது? ஏகம்-அவர்தம் குணங்கள், செய்கைகள் ரூபங்கள் ஆகியவைகளுடன் பேதமில்லாதவர், ஏவ-குணங்கள் முதலியவைகளுடன் பேதாபேதமில்லாதவர். அத்விதீயம்-தமக்குச் சமமானவரும், உயர்ந்தவருமில்லாதவர்.

N.B. : 1) பேதம், 2) அபேதம், 3) பேதாபேதம் :

1. க⁴ட:-பானை. பட:-துணி. இரண்டும் வேறானவை இரண்டுக்கும் பேதம் இருக்கிறது.

2. ரக்த: க⁴ட:-சிவந்தபானைக்கும் அதன் சிவப்பு நிறத்திற்கும் அபேதம் [ஐக்யம்]. இரண்டும் ஒன்றாகவுள்ளன. வேறாகப் பிரிக்கமுடியாது.

3. மாங்காயின் நிறம் பச்சை. அதற்கும் பச்சை நிறத்திருக்கும் அபேதம்,ஆனால் பழுத்ததும் மஞ்சள் நிறமாகிறது பச்சை நிறம் மாங்காயை விட்டுப்பிரிந்து சென்று விட்டது. இப்போது அதற்கும் பச்சை நிறத்திற்கும் பேதம். ஆகவே பேதமும் அபேதமும் சேர்ந்து பேதாபேதம் உள்ளது.

ஏகமேவ அத்விதீயம் என்பதின் பிறர்களின் அர்த்தம்: சூன்யவாதிகள் என்ற பௌத்தர்கள் பிரளயத்தில் சூன்யம் என்ற வஸ்துவே இருந்தது ஏகமேவ பேதமில்லாததே-அத்விதீயம்-இரண்டாவது வஸ்துயில்லை. சூன்யம் என்றால் ஒன்றுமில்லை என்று அர்த்தம். அதிலிருந்து ஸத் (இருக்கும் பொருள்) உண்டாயிற்று என்பது பொருத்தமானதல்ல. அத்வைதம் ஓர் மாமரத்திற்கும் அதன் இலை புஷ்பம் பழம் ஆகியவற்றுக்கும் பேதம் (ஸ்வகதபேதம்) அதற்கும்

மற்றதென்னை முதலிவவற்றிற்கும் பேதம்(ஸஜாதீயபேதம்) அதற்கும் கல், மண் முதலியவற்றிற்கும் பேதம் (விஜாதீய பேதம்) இம் மூன்றுமில்லை என்பதை, ஏகம் ஏவ, அத்வி தீயம் என்ற பதங்கள் குறிக்கின்றன என்கிறது. இது ஆபா தரமணீயமாகத் தோன்றுகிறது. ஆனால் பிரமாணமில்லை அம்மாதிரியான பேதப்பிரிவுகளுமில்லை.

6-2-3 அந்த விஷ்ணு ப்ரளயத்தின் 7/8 பாகமானதும் உல கைச் சிருஷ்டிக்க நினைத்தார் (ப்ரம்ம சூ. 1-3-13 தேஜஸ் என்ற அக்னியையும், அதன் அபிமானி லக்ஷ்மீயையும் சிருஷ்டித்தார். (அவள் நித்ய முக்தள் அக்ஷரள் ஆதலால் அவளைச் சிருஷ்டியில் ஈடுபடும்படி செய்வதே அவளுடைய சிருஷ்டியாகும். (பராதீன விசேஷாவாப்தி). அவள் அப்-ஜலத்தையும் அதன் அபிமானி ப்ராணனையும் வாயுவையும் படைத்தாள். இவ்விதம் அக்னியால் ஜலம் உண்டாயிற்று என்பதை நாம் நமது அனுபவத்தில் காணலாம். கோடை காலத்திலும், நாம் துக்கப்படும்பொழுதும், நம் உடல் சூடாகி முறையே வியர்வைஜலத்தை வெளியேற்றுகிறோம் கண்ணீர் ஜலத்தைப் பெருக்குகிறோம் அல்லவா. 6-2-4 அந்த ப்ராணன் அன்னம் எனப்படும் பூமியையும் அதன் அபிமானி சிவனையும் படைத்தான். ஜலத்தினால் அன்னம் உண்டாயிற்றென்பதை நாம் நமது அனுபவத்தில் காண லாம்.எப்பொழுது நல்ல மழை பெய்கிறதோ,அப்பொழுது ஏராளமான உணவுப் பொருள்கள் விளைகின்றன அல்லவா!

6–3–1 மேற்கூறிய மூவரும் மூன்று பூதங்களும் நான்கு வித மான பிராணிகளுக்குக் காரணமானவை. ஆதலால் முக்ய மானவை. 1 முட்டையிலிருந்து பிறப்பது-பக்ஷி முதலியன 2 ஜராயு என்ற கர்ப்பப் பையிலிருந்து பிறப்பது - மனிதர் முதலியன. 3 பூமியைப் பிளந்து கொண்டு பிறப்பது-மரங் கள் முதலியன 4 வியர்வையால் பிறப்பது-பேன் முதலியன

6-3-2 அந்த விஷ்ணு, அனேன ஜீவேன ஆத்மனா அனுப்ர விச்ய - இந்த தன் ரூபங்களில் ஒன்றான ஜீவன் என்ற

அநிருத்தனின் ரூபத்துடன் லக்ஷ்மீ, ப்ராணன், சிவன் ஆகியோரிடம் புகுந்து, அவர்களின் சேதன அம்சங்களையும், அக்னி, வாயு, பூமி ஆகியவற்றில் புகுந்து, அவற்றின் ஜட அம்சங்களையும் எடுத்துக் கொண்டு அந்த ஆறு அம்சங்களையும் கலந்து, தேஜஸ் (அக்னி) ஆப: (ப்ராணன்) அன்னம் (சிவன்) மூன்று கலப்பு பொருள்களைப் படைத்து அபிமானிகளையும் படைத்து, தேவர்கள், தானவர்கள், மனிதர்கள் ஆகியோரின் சரீரமாகிற ரூபங்களையும், இந்திரன் அக்னி என்ற பல பெயர்களையும் படைத்தார். இதையெல்லாம் அறிந்தால் ச்வேதகேதோ! நானே மகாப்ராஜ்ஞன், யாரையும் நான் வணங்கமாட்டேன் என்ற அஹங்காரத்தை விட்டுவிடுவாய். 6–3–4 முற்றிற்று.

N. B.: ஜீவன் என்ற பதத்திற்கு இங்கு விஷ்ணு என்று அர்த்தம். அனைவரின் உயிர்கள் அவர் அதீனத்தில் உள்ளன விஷ்ணுஸஹஸ்ரநாமத்திலும் அது 522ம் பெயராக உளது. இங்கும் 6–11–1 பார்க்கவும்.

6–7–6 கடைசியில் ச்வேதகேது தந்தையிடம் நான் அறிந்தேன் என இருமுறை கூறினன்.

6–8–1 அதிக ஞானத்தால் தானே ஈசுவரன் என நினைத்திருந்த ச்வேதகேதுவுக்கு அவன் தந்தை விஷ்ணுவின் ஸர்வோத்தமத்வத்தையும் அவனுடைய ஸர்வ அதமத்வத்தையும் அறிவித்து, தூக்கத்திலும் கூட பகவான் வேறு, நீ வேறு, நீ ஈச்வரன் அல்ல என்று ஆரம்பித்து, விஸ்தாரமாக ஜீவேச்வர பேதத்தையே ஒன்பது உவமைகளுடன் உபதேசிக்கிறார்.

ஸோமபானார்ஹனே! ஸ்வப்னத்தின் முடிவான (ஸுஷுப்தி) அயர்ந்த தூக்கத்தைப் பற்றிச் சொல்கிறேன் கேள். ஒருவன் தூங்கும் போது ஸ்வம் அபீதோ பவதி ஸத் என்ற விஷ்ணுவுடன் சேர்ந்துள்ளான் அதாவது ஸ்வம் - இதயத்தாமரையிலுள்ள ஸ்வதந்திரனை விஷ்ணுவை, அபீத: பவதி-பிறர் அறியாதபடி அடைந்துள்ளான்.

ஆகையால்தான் ஸ்வபிதி - தூங்குகிறான் என்று கூறுகின்றனர். பிரம்ம. சூ. 3–2–7 விழிப்பில் சிரமப்பட்டு கனவிலும் அயர்ந்து தூங்காமல் சிரமப்பட்ட ஜீவனை விஷ்ணு அவன் சிரமத்தைப் போக்கத் தூக்கத்தில் இறுகத் தழுவிக் கொண்டுள்ளான். ஆலிங்கனம் செய்து கொள்கிறான். ஆகவே ஜீவன் விஷ்ணுவின் அதீனன் ஸ்வதந்திரனல்லன்.

6–8–2 தத்த்வமஸி = தத் த்வம் அஸி என்ற சுருதியின் ஆரம்பம், இந்த வாக்யம் 9 தடவை கூறப்படுகிறது.

6–8–2 முதல் உவமை.

स यथा शकुनिः सूत्रेण प्रबद्धः । दिशं दिशं पतित्वा । अन्यत्र आयतनं अलब्ध्वा बन्धनमेव उपश्रयते । एवमेव खलु सोम्य एतन्मनः दिशं दिशं पतित्वा अन्यत्र आयतनं अलब्ध्वा प्राणमेव उपश्रयते ॥

ஸயதா சகுனி: ஸூத்ரேண ப்ரபத்த: । திசம்திசம் பதித்வா அன்யத்ர ஆயதனம் அலப்த்வா பந்தனமேவ உபச்ரயதே । ஏவமேவ கலு ஸோம்ய ஏதன் மன: திசம் திசம் பதித்வா அன்யத்ர ஆயதனம் அலப்த்வா ப்ராணவே உபச்ரயதே ॥

**(ஜீவன் விஷ்ணுவின் அதீனன் என்பதை உணர்த்தும்) ஸ:-அந்த திருஷ்டாந்தமாவது:யத- எங்ஙனம் ஓர் முளையில் கட்டப்பட்ட நீண்ட கயிற்றினால் கட்டுண்ட காலையுடைய ஓர் பக்ஷி, திசைதோறும் பறந்து,பறந்த இடங்களில் சாந்தியைத்தரும் ஆசிரமத்தை அடையாமல், கட்டப்பட்ட முளையையே ஆசிரயித்து அதனருகிலேயே இருக்கிறதோ, அங்ஙனமே, ஹே சந்திரன் போன்ற அழகனே! ஏதத் - இந்த, மன:- (மனுதே)-அறிவுள்ள ஜீவன் (மனம் என்ற அர்த்தமல்ல) பலவாறான பிறப்புகளையும் இறப்புகளையும்அடைந்து**

ஆங்காங்கு சுகத்தை பெருமல் ப்ராணமேவ- (ப்ரணயனுத்) பிரேரிக்கும் ஸ்ரீஹரியையே அடைகிருன்.

6-8-6

सन्मूलाः सोम्य इमाः सर्वाः प्रजाः सदायतनाः सत्प्रतिष्ठाः ॥

ஸன்மூலா: ஸோம்ய இமா: ஸர்வா: ப்ரஜா: ஸதாயதனு: ஸத்ப்ரதிஷ்டா: ॥

ஸோம்யனே! இந்த எல்லா ஜீவர்களுமே, ஸன்மூலா:- ஸத் என்ற விஷ்ணுவால் படைக்கப்படுகின்றனர். ஸதாயதனு:- அவனேயே அண்டியிருப்பவர்கள், ஸத்ப்ரதிஷ்டா:- மோக்ஷத்தில் அவனிடமே நிலெபெற்றிருப்பவர்கள்.

6-8-7

स य एषो अणिमा । ऐतदात्म्यं इदं सर्वं । तत् सत्यं । स आत्मा । तत्त्वमसि श्वेतकेतो ॥ इति ॥

ஸ ய ஏஷோ அணிமா । ஐததாத்ம்யம் இதம் ஸர்வம் । தத்ஸத்யம் । ஸ ஆத்மா (S) தத் த்வமஸி ச்வேதகேதோ ॥இதி॥

(அந்த விஷ்ணு) ஸ:-(ஸாரத்வாத்) ஸர்வசிரேஷ்டர். ய:-(யமனுத்)-உள்ளிருந்து பிரேரிப்பவர். ஏஷ: - (இஷ்- இச்சா) தடைபடாத விருப்பங்களேயுடையவர். அணிமா- மிக நுட்பமானவர். இதம் ஸர்வம்-இந்த எல்லாமே, ஐதத் ஆத்ம்யம்-இவரை யஜமானனுகக் கொண்டது. தத்- (ததத்வாத்) எங்கும் பரவியுள்ளவர். ஸத்யம்-உத்தம சுக ஸ்வரூபி. ஸ: ஆத்மா-அவர் அனேவர்க்கும் ஸ்வாமி-பூர்ண குணமுடையவர். ஹே ச்வேதகேதுவே! கவனிப்பாயாக. இது முக்யம்.(அதத் என்றும் தத் என்றும் பதம்பிரிக்கலாம்)

த்வம்-நீ, அதத்-அஸி-அந்த விஷ்ணு அல்லன். த்வம்-நீ, தத் அஸி-அவனாக இருக்கிறாய் அதாவது அவனைப் போன்று அற்பஸாம்யமுள்ளவனாய் இருக்கிறாய்.

N.B. ஸிம்ஹ:மாணவக:-முகம் சந்த்ர|-பதம் பத்மம்| The Camel is the ship of the desert. இந்த மாணவன் சிங்கம்-முகம் சந்திரன் பாதம் தாமரை-ஒட்டகம் பாலைவன கப்பல்-இங்கெல்லாம் அதுவே அல்ல. அதைப்போன்றது. என்று அர்த்தம்போல் கூறவேண்டும்.

6-9-1 மு 4 உவமை 2 ச்வேதகேது: தூக்கத்தில் என்னை தழுவியுள்ள விஷ்ணுவை வேறாகக் காணவில்லையே! தந்தை கூறுகிறார்.

यथा सोम्य मधु मधुकृतः निस्तिष्ठन्ति । नानात्ययानां वृक्षाणां रसानां समवहारं । एकतां गमयन्ति ॥१
ते यथा तत्र न विवेकं लभन्ते । अमुष्याहं वृक्षस्य रसो अस्मि इति । एवमेव खलु सोम्य । इमाः सर्वाः प्रजाः सति संपद्य न विदुः । सति संपत्स्यामहे इति ॥२॥

யதா ஸோம்ய! மது மதுக்ருத: நிஸதிஷ்டந்தி நாநாத்யயாநாம் வ்ருக்ஷாணாம் ரஸாநாம் ஸமவஹாரம் ஏகதாம் கமயந்தி ॥ தே யதாதத்ர நவிவேகம் அமுஷ்யாஹம் வ்ருக்ஷஸ்ய ரஸோ அஸ்மீதி। ஏவமேவ கலு ஸோம்ய। இமாஸ் ஸர்வா: ப்ரஜா: ஸதி ஸம்பத்ய நவிது:। ஸதி ஸம்பத்ஸ்யாமஹே இதி ॥

அழகனே! எங்ஙனம் தேனீக்கள் பலவிதமான மரங்களின் மகரந்தப்பொடிகளின், ஸமவஹாரம்-கூட்டத்தை, ஏகதாம் கமயந்தி-ஒரே கலவையாக, அடைவித்து, தேனை,

நிஸ்திஷ்டந்தி-உண்டுபண்ணுகின்றனவோ, தே-அந்தரஸங்கள் ஒவ்வொன்றும், யதா-எங்ஙனம், தத்ர-அந்தக்கலவையிலேயே உள்ள, விவேகம்-பேதத்தை, அஹம்-நான், அமுஷ்ய வ்ருக்ஷஸ்ய-இந்த மாமரத்தின், ரஸ:-அஸ்மி-ரஸமாகவிருக்கிறேன். அது பலாமரத்தின் ரஸமாக உளது, என்று, நலபந்தே-அறியவில்லையோ, ஏவமேவகலு-இங்ஙனமேயல்லவா, இந்த எல்லா ஜீவர்களும், தத்தம் தேகங்களிலுள்ள, ஸதி ஸம்பத்ய-ஸத் என்ற விஷ்ணுவை அடைந்தும், அவனை அடையப்போகிறோம் என்றும், நவிது:-அறிவதில்லை.

6-8-3

त इह व्याघ्रो वा सिंहो वा । वृको वा वराहो वा । कीटो वा पतङ्गो वा । यद्यत् भवन्ति । तत्तदा भवन्ति॥३

6-8-4

स य एष अणिमा...तत् त्वमसि श्वेतकेतो ॥४॥

த இஹ வ்யாக்ரோ வா ஸிம்ஹோவா : வ்ருகோ வா வராஹோ வா। கீடோ வா பதங்கோ வா। யத்யத் பவந்தி। தத்ததா பவந்தி॥
ஸ ய ஏஷோ அணிமா....தத் த்வமஸி ச்வேதகேதோ॥

அந்த பேதத்தை அறியாததால் தான், ததா-அப்பொழுது தே - அவர்கள் இஹ-இவ்வுலகில், வ்யாக்ர: வா-புலியாகவோ, ஸிம்ஹோவா-சிங்கமாகவோ, வ்ருக: வா-ஓநாயாகவோ, வராஹோவா-பன்றியாகவோ, கீடோவோ-புழுவாகவோ, வதங்க: வா-(விட்டில்) பூச்சியாகவோ, யத்யத் பவந்தி-எந்தெந்தப் பிறப்புகள் உண்டோ, தத்பவந்தி-அப்பிறவிகளில் பிறக்கிறார்கள். ஜீவேசுவரபேத ஞானத்

திஞல் தான் உயர்பிறப்பை அடையலாம் பிறப்பே இல் லாத நிலைமையையும் அடையலாம்—ஐதரேயம் 2-2-3

N.B. வெல்லம், ஜீனி, கற்கண்டு, பால், தயிர் முதலிய பல இனிப்புப் பண்டங்களிலுள்ள இனிப்பிலும் பேதமுண்டு அவற்றிற்கு தனிப்பெயர்களுமுண்டு.

विशदं क्षीरमाधुर्यं स्थिरमाज्यस्य तीक्ष्णकम् ।
गुडस्य पनसादीनां निर्ह्रारीत्यभिधीयते ॥

பாலின் இனிப்புக்கு விசதம் என்றும் நெய்யின் இனிப்புக்கு ஸ்திரம் என்றும் வெல்லத்தின் இனிப்புக்குத் தீக்ஷணம் என்றும், பலா முதலியவற்றின் இனிப்புக்கு நிர்ஹாலி என்றும் பெயர்கள்.

6-10-1 மு 4 ச்வேத:- அவை அசேதனம் அறியமாட்டா நானோ சேதனன். நான் விஷ்ணுவை வேருகக் காணவில்லை யே தந்தை பதில்

इमाः सोम्य नद्यः पुरस्तात् प्राच्यः स्यन्दन्ते । पश्चात् प्रतीच्यः । ताः समुद्रात् समुद्रमेवापिबन्ति । स समुद्र एव भवति । ताः यथा तत्र न विदुः इयमहमस्मि...इति ॥१

एवमेव खलु सोम्य इमाः सर्वाः प्रजाः सतः आगम्य न विदुः सतः आगच्छामहे इति ॥२॥

त इह व्याघ्रो . ... ॥३॥ स य एषो ...... तत्त्वमसि श्वेतकेतो ॥

இமா: ஸௌம்ய நத்ய: புரஸ்தாத் ப்ராச்ய: ஸ்யந் தந்தே। பஸ்சாத் ப்ரதீச்ய: । தா: ஸமுத்ராத் ஸமு

த்ரமேவாபியந்தி। ஸ ஸமுத்ர ஏவ பவதி॥ தா:
யதா தத்ர நவிது:। இயமஹமஸ்மி...இதி॥ ஏவ
மேவகலுஸோம்ய இமா: ஸர்வா: ப்ரஜா: ஸத:
ஆகம்ய நவிது:। ஸத: ஆகச்சமஹே இதி ॥ 2 ॥
த இஹ வ்யாக்ரோ...॥3॥ ஸய ஏஷ: ...,தத்த்வமஸி
ச்வேதகேதோ ॥

ஸோம்ய! இமா:-இந்த பிரசித்தமான நத்ய:-கங்கை யமுனை முதலிய ஆறுகளின் தேவதைகள் ப்ராச்ய:- கிழக்கே ஓடுவதால் கிழக்கு ஆறுகள் எனப்பட்டு, புரஸ்தாத்- கிழக்கு நோக்கி ஸ்யந்தந்தே-ஓடுகின்றனவோ, ப்ரதீச்ய:- மேற்கே ஓடுவதால் மேற்கு ஆறுகள் எனப்பட்டு பஸ்சாத்- மேற்கு நோக்கி ஸ்யந்தந்தே-ஓடுகின்றனவோ தா:-அந்த நதிகள் ஸமுத்ராத்-ஸமுத்திரத்தின் ஜலத்தைப் பெற்றுள்ளதால், ஸமுத்ரமேவ-சமுத்திரத்தையே அபியந்தி-பிரவேசிக்கின்றனவோ, ஆயினும், ஸ:-அந்த ஸமுத்திரமோ, ஸமுத்ர ஏவ-சமுத்திரமாகவே, பவதி-இருக்கிறதோ, தா -அந்த நதீதேவதைகள் ஒவ்வொருவரும் யதா-எங்ஙனம், தத்ர-அந்த சமுத்திரத்தில் 'அஹம் நான் இயம்-இந்த கங்கையாக அஸ்மி-இருக்கிறேன், இயம்-இவள் யமுனை, இது-சமுத்திரம், இதி -என்று, ந நவிது:-(சேதனர்களாயினும்) அறியவில்லையோ, ஏவமேவகலு-இங்ஙனமே, இமா:ஸர்வா: ப்ரஜா:-இந்த எல்லாமக்களும், ஸத:ஆகம்ய-ஸத் என்ற விஷ்ணுவிடமிருந்து உண்டானவர்களாயினும், ஸத: ஆகச்சாமஹே-விஷ்ணுவிடமிருந்து உண்டாகியிருக்கிறோம் என நவிது:அறியவில்லை அம்மாதிரியே விஷ்ணுவிடம் ஆசிரயித்து இருந்தும் கூட அறியவில்லை. 6–10–4 முடிந்தது.

N.B. ஸமுத்திரஜலமும் நதிகளின் ஜலமும் இரண்டறக் கலந்துள்ளது. ஆகவே ஜீவேசுர ஐக்யத்தையே இந்த உவமை கூறுகிறது எனத்தோன்றும். இதன் விளக்கத்தை இந்தப் பிரகரணம் முடிந்ததும் தரப்போகிறோம்.

6-11-1 மு 3. 4ம் உவமை

ச்வேதகேது-நம்தேகத்தில் வேருன விஷ்ணு இருக்கட்டும். ஜீவன் அவனுக்கு அதீனமாக விருக்கிருன் என்று எப்படி அறியலாம்? தந்தையின் பதில்

अस्य सोम्य महतो वृक्षस्य । यो मूले मध्ये अग्रे अभ्याहन्यात् जीवन् स्रवेत् । स एष जीवेन आत्मना अनुप्रभूतः पेपीयमानः मोदमानः तिष्ठति ॥१॥

அஸ்ய ஸோம்ய மஹதோ வ்ருக்ஷஸ்ய । யோ மூலே மத்யே அக்ரே அப்யாஹன்யாத்। ஜீவன் ஸ்ரவேத் । ஸ ஏஷ: ஜீவேன ஆத்மனு அனுப்ரபூத: । பேபீயமான: மோதமானஸ்திஷ்டதி ॥

ஸோம்யனே! அஸ்ய வ்ருக்ஷஸ்ய-இந்தப் பெரிய மரத்தின், மூலே-அடியிலும், மத்யே-நடுவிலும், அக்ரே - நுனியிலும், ய:- யாராவது அப்யாஹன்யாத் - வெட்டினுல், ஜீவன் (சேத்) அது உயிருடனிருந்தால் அதாவது ஜீவன் என்ற பெயருள்ள அநிருத்தன் என்ற விஷ்ணு ரூபத்துடன் இருந்தால், ஸ்ரவேத்-நீர் வடியும். ரஸம் வெளிப்படும். ஸ ஏஷ:- அவ்வித இந்த மரமான ஜீவன், ஜீவேன ஆத்மனு-ஜீவன் என்று பெயருள்ள விஷ்ணுவுடன், அனுப்ரபூத:- கூடியிருந்து, பேபீயமான:- அடிக்கடி ஜலத்தைக் குடித்துக் கொண்டு, மோதமான:- சுகமாக, திஷ்டதி-பசுமையுடன் இருக்கும்.

अस्य यदा एकां शाखां जीवो जहाति । अयसा शुष्यति । द्वितीयां तृतीयां जहाति अथ सा शुष्यति । सर्वं जहाति सर्वः शुष्यति । एवमेव खलु सोम्य विद्धि ।

जीवापेतं वाव किलेदं म्रियते न जीवो म्रियते इति * ॥
स य एषो अणिमा ... तत् त्वमसि श्वेतकेतो ॥

*அஸ்ய யதா ஏகாம் சாகாம் ஜீவோ ஜஹாதி । அத ஸா சுஷ்யதி । த்விதீயாம் - த்ருதீயாம் - அதஸா சுஷ்யதி । ஸர்வம் ஜஹாதி । ஸர்வ: சுஷ்யதி । ஏவ மேவ கலுஸோம்ய வித்தி । ஜீவாபேதம் வாவகி லேதம் ம்ரியதே । நஜீவோ ம்ரியதே । இதி ॥ ஸய ஏஷோ அணிமா...தத்த்வமஸி ச்வேதகேதோ ॥*

*யதா - எப்பொழுது. அஸ்ய ஏகாம் சாகாம் - இந்த மரத்தின் ஓர் கிளையை, ஜீவ: ஜஹாதி - அநிருத்தன் என்ற பகவான் விட்டு விடுகிருனே, அத-உடனே, ஸா சுஷ்யதி- அந்தக் கிளை வாடி வதங்கி பட்டுப்போகிறது. 2வது 3வது கிளைகளை அவன் விட்டுச் சென்ருல் அவைகளும் அவ்வாறே ஆகின்றன. ஸர்வம் ஜ ஹ ா தி - முழு மரத்தை விட்டுச் சென்ருல் ஸர்வ: சுஷ்யதி-முழு மரமே பட்டுப் போகிறது. ஸோம்யனே? ஏவமே வ கலு - இவ்விதமே, எல்லா ஜீவர் களும் என்று, வித்தி-அறிவாயாக. அதாவது, ஜீவ அபேதம் அநிருத்த பகவானுல் விடப்பட்ட, இதம் - இந்த ஜீவகோடி கள், ம்ரியதே-இறக்கின்றனர். அதாவது அ வ ர் க ளி ன் தேகங்கள் அழிகின்றனவே தவிர, ஜீவ: நம்ரியதே - ஜீவர் களே இறப்பதில்லை அவர்கள் ஸ்வரூபத்தில் அனுதி நித்யர் களாவர்.*

N.B.: *குபேரனின் குமாரர்களான நளகூபரன் மணிக்ரீவன் என்ற இருவர் நாரதரின் முன் நிர்வாணமாக விருந்ததால் 'நீங்கள் மரமாகக் கடவீர்கள்' எனச் சபித்தார். அவர்கள் கோகுலத்தில் இரு மரங்களாகப் பிறந்தனர். யசோதை யால் உரலில் கட்டப்பட்ட கிருஷ்ணர் அவர்களைச் சாபத்தி லிருந்து விடுவித்தார். வேறு ஜீவர்கள் பாபத்திஞல் மரங் களாகப் பிறக்கிறார்கள் இ வ ர் க ளு க் கு மரமே தேகம்,*

கிளைகள் முதலியன கை கால் போன்ற உறுப்புக்கள். விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் விஷ்ணுவுக்கு ஜீவன் என்ற பெயரைக் காண்க.

ஜீவோ வினயிதா ஸாக்ஷீ। ஓர் சுருதி-ஜீவ இதி பகவதோ அநிருத்தஸ்ய ஆக்யா ॥

6–12–1. 5ம் உவமை: ச்வேதகேது: அவ்வித விஷ்ணுவை ஜீவனே ஏன் பார்க்க முடியவில்லை? அவன் சூக்ஷ்மமாயிருக்கிறான் என்றால், பிரம்ம சூ. 2–3–2ல் ஜீவனின் ஸ்வரூபம் குதிரை வாலின் நுனியை நூறு பாகமாகச் செய்து, அதில் ஓர் பாகத்தை நூறாகச் செய்த ஒரு பாகத்தின் பரிமாணம் போல் சூக்ஷ்மமாயுள்ளது எனப்படுகிறது. அது ஜீவனுக்கு காணப்படுவது போல, விஷ்ணு ஏன் காணப்படவில்லை?

தந்தை :

न्यग्रोधफलमत आहर । इदं भगवः इति । भिन्धीति । भिन्नं भगवः इति । किमत्र पश्यसीति । अण्व्यः इति इमाः धानाः इति । आसां अङ्ग एकां भिंधीति । भिन्ना भगवः इति । किमत्र पश्यसीति । न किंचन भगवः इति ॥ १ ॥

ந்யக்ரோதபல மத ஆஹர । இதம் பகவ: இதி । பிந்தி இதி । பின்னம் பகவ: இதி । கிமத்ர பச்யஸி இதி । அண்வ்ய: இவ இமா: தாநா: இதி । ஆஸாம் அங்க ஏகாம் பிந்தி இதி । பின்னா பகவ: இதி । கிமத்ர பச்யஸி இதி । ந கிஞ்சன பகவ: இதி ॥

இந்த ஆல மரத்திலிருந்து ஓர் பழத்தைக் கொண்டுவா. இதோ கொண்டு வந்தேன்! அதை உரி! இதோ உரித்தேன்!

அதற்குள் என்ன காண்கிறாய்! அணுக்கள் போன்ற விதைகளைக் காண்கிறேன்! அவற்றில் ஒரு விதையை உரி! இதோ உரித்தேன்! இதில் என்ன காண்கிறாய்? ஏதும் கண்ணுக்குத் தெரியவில்லை.

6–12–2 தந்தை :

यं वै सोम्य एतं अणिमानं न निभालयसे । एतस्य वै सोम्य । एषो अणिम्नः एवं महान् न्यग्रोधः तिष्ठति ॥ श्रद्धत्स्व सोम्य ॥ स य एषो अणिमा......तत् त्वमसि श्वेतकेतो ॥

யம் வை ஸோம்ய ஏதம் அணிமானம் ந நிபாலயஸே। ஏதஸ்ய வை ஸோம்ய ஏஷோ அணிம்ன: ஏவம் மஹான் ந்யக்ரோத: திஷ்டதி। ச்ரத்தத்ஸ்வ ஸோம்ய॥ ஸ ய ஏஷோ அணிமா...தத் த்வமஸி ச்வேதகேதோ ॥

எந்த சூக்ஷ்மமான விஷ்ணு உன் கண்ணுக்குத் தெரியவில்லையோ, அவ்வித சூக்ஷ்மமான விஷ்ணுவின் சக்தியால் தான், அச்சூக்ஷ்மமான விதையிலிருந்து இந்த இவ்வளவு பெரிய மரம் வான் அளாவி, அணி தேர் புரவி ஆட்பெரும் படையோடு மன்னர் தங்க நிழலைத் தரும்படி நிற்கிறது. ச்ரத்தத்ஸ்வ-நம்புவாயக.

6–13–1 6ம் உவமை: இந்த மரத்தின் இருப்பால் விஷ்ணுவின் அபாரசக்தியைக் காண்கிறோமேதவிர, அவனைக் காணவில்லையே! அது எவ்வாறு?

लवणमेतत् उदके अवधाय । अथ मा प्रातः उपसीदथाः । इति । तत् ह स तथा चकार । तँहोवाच ।

यत् दोषा लवणमुदके अवधाः । अङ्ग तदाहर इति ।
तत् ह अवमृश्य न विवेद । यथा विलीनमेव ॥१॥

லவணமேதத் உதகே அவதாய । அத மா ப்ராத: உபஸீததா: இதி । தத்ஹ ஸ ததா சகார । தகும் ஹோவாச। யத் தோஷா லவணம் உதகே அவதா: அங்க ததாஹர இதி॥ தத்ஹ அவம்ருச்ய ந விவேத யதா விலீனமேவ ॥

தந்தை : இந்த உப்புக் கட்டியை இரவில் ஓர் பாத்திர ஜலத்தில் போட்டுவிட்டு காலையில் என்னிடம் வா;என்றார். அவனும் அப்படியே செய்தான். எந்த உப்புக்கட்டியை ஜலத்தில் போட்டாயோ அதைக் கொண்டு வா. அவன் அந்தப் பாத்திரத்தைக் கொணர்ந்து, அதன் உள்ளே கை யால் சோதித்துப் பார்த்து நன்கு கரைந்து போனதைக் காணவில்லை என்றான்.

6–13–2

अङ्ग अस्य अन्तात् आचाम इति । कथमिति ।
लवणमिति । मध्यात्–अन्त्यात्–अभिप्रास्य एतत् अथ मा
उपसीदथाः इति । तत् ह तथा चकार । तत् शश्वत्
संवर्तते । तँहोवाच । अत्र वाव किल सत् सोम्य न
निभालयसे । अत्रैव किल इति ॥२॥* 6-13-3

அங்க அஸ்ய அந்தாத் ஆசாம இதி । கதமிதி । லவணமிதி । மத்யரத் அந்த்யாத் அபிப்ராஸ்ய ஏதத் । அத மா உபஸீததா: இதி। தத்ஹ ததா சகார । தத் சச்வத் ஸம்வர்த்ததே । தகும் ஹோ

வாச। அத்ர வாவகில ஸத்ஸோம்ய ந நிபாலயஸே।
அத்ரைவ கில இதி ॥

6–13–3 தந்தை:

स य एषो अणिमा ... तत् त्वमसि श्वेतकेतो ॥

ஸ ய ஏஷோ அணிமா..தத் த்வமஸி ச்வேதகே
தோ ॥

ப்ரியமானவனே! இந்த ஜலத்தின் கிழக்குக் கோடியிலுள்ளதைச் சிறிது ஆசமனம் செய். அவன் குடித்தான். எப்படியிருக்கிறது? உப்பாயிருக்கிறது. நடுவிலிருந்தும் மேற்குக் கோடியிலிருந்தும் ஆசமனம் செய். எப்படியிருக்கிறது? உப்பாகவே உளது. இந்த ஜலத்தைக் கொட்டிவிட்டு என்னிடம் வா. வந்தான். அந்த உப்புக் கட்டி எங்கு போயிற்று? வேதமே சொல்கிறது-அந்த உப்பு முழுவதுமே எங்கும் செல்லவில்லை. அந்த ஜலத்திலேயே இருக்கிறது.

தந்தை : எந்த சூக்ஷ்மமான உப்பை நீ காணவில்லையோ அது இந்த ஜலத்திலேயே இருக்கிறதல்லவா! அதை உறுதிப் படுத்த மீண்டும் கூறி, உப்பின் குணமான ரஸம் நாக்குக்குப் புலப்படினும் அது கண்ணுக்குப் புலப்படவில்லை. அங்ஙனம் விஷ்ணுவின் சாமர்த்யம் புலப்படினும் அவர் புலப்படார்.

6–14–1. 7ம் உவமை :

ச்வேதகேது : அவரை எவ்வாறு காணலாம்? குருவின் உபதேசத்தின் மூலமே காணலாம் என தந்தைவிளக்குகிறார்.

यथा सोम्य पुरुषं गन्धारेभ्यः अभिनद्धाक्षमानीय । तं ततो अतिजने विसृजेत् । स यथा तत्र प्राङ् वा उदङ् वा अधराङ् वा प्रत्यङ् वा प्राध्मायीत । अभिनद्धाक्षः आनीतः अभिनद्धाक्षः विसृष्टः ॥१॥

யதா ஸோம்ய புருஷம் கந்தாரேப்ய: அபிநத்தா க்ஷமானீய। தம் ததோ அதிஜனே விஸ்ருஜேத்। ஸ யதா தத்ர ப்ராங்வா உதங்வா அதராங்வா ப்ரத்யங்வா ப்ராத்மாயீத।அபிநத்தாக்ஷ: ஆனீத: அபிநத்தாக்ஷ: விஸ்ருஷ்ட: ॥

ஸோம்யனே! எங்ஙனம் ஓர் பணக்காரனைத் திருடர்கள் அவன் கண்களைக் கட்டி காந்தார தேசத்திலிருந்து தூக்கிச் சென்று, ஜனங்களே யில்லாத காட்டில் விட்டுவிட்டுச் செல்வார்களோ, அந்தப் பணக்காரன், அங்கு கிழக்கு நோக்கியோ, வடக்கு நோக்கியோ, மேற்கு நோக்கியோ, கீழ்நோக்கியோ 'ஐயோ என் கண்களைக் கட்டி இங்கு தூக்கி வந்து விட்டுவிட்டார்கள். யாராவது கட்டை அவிழ்த்து என்னைக் காப்பாற்றுங்களேன்' எனக் கூக்குரலிடுவானோ,

6–14–2 தந்தை:

तस्य यथा अभिनहनं प्रमुच्य प्रब्रूयात् । एतां दिशं गन्धाराः । एतां दिशं व्रज इति । सः ग्रामात् ग्रामं पृच्छन् पण्डितः मेधावी गन्धारानेव उपसंपद्येत । एवमेव इह आचार्यवान् पुरुषो वेद । तस्य तावदेव चिरं । यावन्न विमोक्ष्ये । अथ संपत्स्यते इति ॥२॥

தஸ்ய யதா அபிநஹனம் ப்ரமுச்ய ப்ரப்ரூயாத்। ஏதாம் திசம் கந்தாரா: ஏதாம் திசம் வ்ரஜ இதி। ஸ:க்ராமாத் க்ராமம் ப்ருச்சன் பண்டித: மேதாவீ கந்தாரானேவ உபஸம்பத்யேத। ஏவமேவ இஹ ஆசார்யவான் புருஷோ வேத। தஸ்ய தாவதேவ சிரம்। யாவந் ந விமோக்ஷ்யே। அத ஸம்பத்ஸ்யதே ।இதி।

அப்பொழுது அவனுடைய கூக்குரலைக் கேட்டு கருணையுள்ள ஒருவன் அவன் கட்டை அவிழ்த்து, இந்தத் திசையில் தான் கந்தார தேசம் உளது. இந்த திசையை நோக்கிச் செல்வாயாக' என்று சொல்வானே, பிறகு அவன் கிராமங்கள் தோறும் ஜனங்களை விசாரித்துக் கொண்டு, புத்திசாலியாயும், ஞாபக சக்தியுள்ளவனுயும் கடைசியில் கந்தார தேசத்தையே அடைவானே, அங்ஙனமே அனாதி அவித்யா (அஜ்ஞான இருள்) முதலியவற்றால் மறைக்கப்பட்ட பகவத் ஸ்வரூபத்தையுடைய ஜீவன், ஸம்ஸாரமாகிய காட்டில் (பாகவதம் ஸ்கந்தம் 5. அத்தி. 13, 14 பவாடவீ) திரிந்து ஸ்ரீ ஹரியின் அருளால் அவனைக் காண வேண்டுமென்ற ஆவலுள்ளவனாய் குருவின் உபதேசத்தைப்பெற்று, க்ரமமாக ச்ரவணம், மனனம், தியானம் முதலிய ஸாதனங்களினால், வேத-அபரோக்ஷ ஞானமடைந்து, தன் இருப்பிடமான விஷ்ணுவை அடைகிறான். ஆசார்யனை உடையவனே பகவானைக் காண்பான். அந்த அபரோக்ஷ ஞானி, யாவத்- எது வரையில், ப்ராரப்த கர்மத்திலிருந்து, ந விமோக்ஷ்யேத- விடுதலையடையவில்லையோ, தாவத் - அதுவரையில்தான், சிரம்-தாமதம். அத-அதை, அனுபவித்த பிறகு அதிலிருந்து விடுபட்டவுடன், ஸம்பத்ஸ்யதே-மோக்ஷமடைகிறான்.

6–14–3

स य एषो अणिमाः ...... तत् त्वमसि श्वेतकेतो ॥

ஸ ய ஏஷோ அணிமா........தத் த்வமஸி ச்வேதகேதோ ॥

6–15–1. 8-ம் உவமை :

ச்வேதகேது : 6–11–1, 2ல் மரத்தின் உவமையில் ஜீவன் பரதந்த்ரன் என்பது நன்கு புரிந்தது. மனித தேகத்திலேயே நன்கு புரியும்படிக் கூறுவீராக. தந்தை கூறுகிறார்.

पुरुषं सोम्य उपतापिनं ज्ञातयः पर्युपासते । जानासि मां ...... इति । तस्य यावत् न वाक् मनसि संपद्यते । मनः प्राणे । प्राणः तेजसि । तेजः परस्यां देवतायां । तावत् जानाति ॥१॥

புருஷம் ஸோம்ய உபதாபினம் ஜ்ஞாதய: பர்யுபாஸதே। ஜாநாஸி மாம்..இதி। தஸ்ய யாவத் ந வாக் மனஸிஸம்பத்யதே। மன: ப்ராணே। ப்ராண: தேஜஸி। தேஜ: பரஸ்யாம் தேவதாயாம்। தாவத் ஜாநாதி ॥

ஸோம்யனே! ஓர் நோயாளியான மனிதனைச்சுற்றிலும், அவனுடைய பந்துக்கள் உட்கார்ந்து என்னை அறிகிறீர்களா எனக் கேட்கிறார்கள். அப்பொழுது அவனுடைய வாக்கின் அபிமானி உமாதேவி, மனதின் அபிமானி சிவனிடமும், அந்தச்சிவன் முக்ய ப்ராணனிடமும், அவன் லக்ஷ்மீயிடமும், அவள் பரதேவதையான விஷ்ணுவிடமும் எதுவரையில், லயமடையாமல் உள்ளனரோ அதுவரையில் அவர்களை அறிகிறான்.

6–15–2 அவர்கள் முறையே லயமடைந்திருந்தால் அவன் அவர்களை அறியமாட்டான். இம்மாதிரி மனித தேகத்திலும் அனைவரும் விஷ்ணுவின் அதீனர்களே.

6-15-3

स य एष अणिमा......तत् त्वमसि श्वेतकेतो ॥

ஸ ய ஏஷோ அணிமா........தத் த்வமஸி ச்வேதகேதோ ॥

6–16–1 9ம் உவமை :

தந்தை : இம்மாதிரி அனைவரையும் பிரேரிக்கும் விஷ்ணு வேறானவர், ஜீவர்களாகிய நாம் வேறு என்ற ஜீவேச்வர பேதத்தை அறிபவனுக்கும்,'அவனே நான்' என்று ஜீவேச்வர ஐக்யத்தை அறிபவனுக்கும், எவ்வித பலன் கிடைக்கும் என்பதை இங்கு விளக்குகிறார்.

पुरुषं सोम्य उत हस्तगृहीतमानयन्ति । अपहार्षीत् स्तेयमकार्षीत् । परशु मस्मै तपत इति । स यदि तस्य कर्ता भवति । तत एव अनृतं आत्मानं कुरुते । सो अनृताभिसन्धः अनृतेन आत्मानं अन्तर्धाय परशुं तप्तं प्रतिगृह्णाति । स दह्यते । अथ हन्यते ॥१॥

புருஷம் ஸோம்ய உத ஹஸ்தக்ருஹீதமானயந்தி । அபஹார்ஷீத் ஸ்தேய மகார்ஷீத் । பரசுமஸ்மை தபத இதி । ஸ யதி தஸ்ய கர்த்தா பவதி । தத ஏவ அந்ருதம் ஆத்மானம் குருதே।ஸோ அந்ருதாபி ஸந்த: அந்ருதேன ஆத்மானம் அந்தர்த்தாய பரசும் தப்தம் ப்ரதிக்ருஹ்ணாதி । ஸ தஹ்யதே । அத ஹன்யதே ॥

ஸோம்யனே! அரசனுடைய பொருள் திருடப்பட்டதும் அரசபடர்கள் சந்தேகப்பட்ட நபரை விலங்கிட்டு கையோடு அழைத்து வந்து, அபஹார்ஷீத்-இவன் நாம்பார்க்கும் போதே திருடினான், ஸ்தேயம் அகார்ஷீத்—மறைவாகத் திருடினான் என்று அரசனிடம் சொல்லுகிறார்கள். அரசன் தன் ஆட்களிடம் அவனைப் பரீக்ஷிக்க பழுக்கக்காய்ச்சின கோடாரியைப் பிடிக்கச் சொல்லுங்கள் என்கிறான். அவன் திருடியிருந்து திருடவில்லை யென்றால் தன்னைப் பொய்யனாக்கிக் கொள்கிறான். பொய்யில் புத்தியுள்ளவனாய் தன்னைப் பொய்யினால் மறைத்துக் கொண்டு பழுக்கக் காய்ச்சின

கோடரியை கையில் பிடித்தால், அது அவனைச் சுட்டுவிடும் அவன் பொய்யன் திருடன் என்று திர்மானித்து அவன் தண்டிக்கப்படுகிறான். நானே பகவான் என்பவன் பகவானையே திருடினவனாவான். அவனை வாயுவின் தூதர்கள் விஷ்ணுவிடம் அழைத்துச் சென்று பிறகு நரகங்களில் தண்டிக்கப்படுகிறான்,

6–16–2

अथ स यदि तस्य अकर्ता भवति । तत एव सत्य मात्मानं कुरुते । स सत्याभिसन्धःसत्येन आत्मानं अन्तर्धाय । परशुं तप्तं प्रतिगृह्णाति । स न दह्यते । अथ मुच्यते ॥२

அத ஸ தஸ்ய யதிஅகர்த்தா பவதி। தத ஏவ ஸத்ய மாத்மானம் குருதே। ஸ ஸத்யாபிஸந்த: ஸத்யேன ஆத்மானம் அந்தர்த்தாய। பரசும் தப்தம் ப்ரதி க்ருண்ஹாதி। ஸ ந தஹ்யதே। அத முச்யதே ॥

அவன் திருடாமலிருந்தால். தன்னை உண்மையுரைப் பவனுக்கி கொண்டு பழுக்கக் காய்ச்சின கோடரியைக் கையால் பிடிக்கிறான். அது அவனைச் சுடுவதில்லை. அவன் குற்றவாளியல்லவென்று விடுதலை செய்யப்படுகின்றான். (அந்தப் பொற்காலத்தில் நம் கர்மஸாக்ஷியான அக்னி பகவான் திருடாதவனைச் சுடாமலும்,திருடினவனைச் சுட்டும் அரசர்சபையில் நீதி வழங்கும்படிச் செய்து வந்தான்) இம்மாதிரி 'நான் ஈசுவரனல்லன்' என்று ஜீவே சுவரபேதத்தை அறிந்தவன் ஸ்வர்க்கம் முதலியதில் சுகித் திருக்கிறான்.

6–16-3

स यथा तत्र न अदाह्येत ऐतदात्म्यमिदं सर्वं तत् सत्यं । स आत्मा । तत्त्वमसि श्वेतकेतो । इति । तत् ह

अस्य विजज्ञौ इति । विजज्ञौ इति ॥

इति श्रीमत् छान्दोग्योपनिषदि षष्ठो अध्यायः ॥

*ஸ யதா தத்ர ந அதாஹ்யதே । ஐததாத்ம்யமிதம் ஸர்வம் । தத் ஸத்யம் । ஸ ஆத்மா । தத்த்வமஸி ச்வேதகேதோ । இதி । தத்ஹ அஸ்ய விஜஜ்ஞௌ இதி । விஜஜ்ஞௌ இதி ॥*

*இதிஸ்ரீமத்சாந்தோக்யோபநிஷதிஷஷ்டோத்யாய:*

ஸ:- அந்த உண்மையுரைப்பவன், யதா—எவ்வாறு, ந அதாஹ்யேத—சுடப்படவில்லையோ, (அவ்வாறு) 6–8–7 P. 122 இதம் ஸர்வம்—இந்த எல்லாம், ஐததாத்ம்யம்-இந்த விஷ்ணுவை யஜமானனுகக் கொண்டது, தத் (ததத்வாத்) எங்கும் வியாபித்துள்ளவர். ஸத்யம்-உத்தமானந்தஸ்வரூபி. ஸ: ஆத்மா-அவர் நம் ஸ்வாமி. பூர்ணகுணமுடையவன் ச்வேதகேதோ! த்வம்-நீ, அதத் அஸி-அந்தவிஷ்ணுவல்லன் அல்லது த்வம்-நீ, தத்-அந்தவிஷ்ணுபோல் சிறுஸாம்ய முடையவன். இதி-என்று தந்தை விளக்கினுர்.

அஸ்ய — இந்த தன் தந்தையிடமிருந்து, தத் - அந்த அனைத்தையும், விஜஜ்ஞௌ - சுவேதகேது விசேஷமாக அதாவது சந்தேகமில்லாமல் அறிந்தான். கர்வத்தை விட்டு ஞானியாகவும் விஷ்ணு பக்தனுகவும் மாறினுன். ஹ-இது பிரசித்தம். இதை உறுதிப்படுத்த மறுபடியும், விஜஜ்ஞௌ-விசேஷமாக அறிந்தான் என்று வேதம் கூறியுளது.

**அத்தியாயம் 6 முற்றிற்று.**

*ஸ்ரீவாதிராஜர் போன்றவர்களின் சில யுக்திகள் :*

ச்வேதகேது தன் 12ம் வயதில் குருவிடம் சென்று 12ஆண்டு அத்யயனம் செய்து 24ம் வயதில் வீடு திரும்பி தந்தையை நமஸ்கரிக்காமல் தானே மகா வித்வான் என்று கர்வங்

கொண்டிருந்தான். அந்தச் சந்தர்ப்பத்தில் தந்தை, தத் த்வமஸி-நீயே ப்ரம்மம்-என்று அர்த்தமுள்ள வாக்யத்தைச் சொல்லிருந்தால் அவன் கர்வம் இன்னும் அதிகமாயிருக்கும் அந்த அர்த்தம் சந்தர்ப்பத்திற்குப் பொருந்தாது. அவன் கர்வத்தைக் குறைக்க 'எந்த விஷ்ணுவின் மகிமையை அறிந்தால் நாம் அறியாத வஸ்துக்களை அறிந்த பலனும் கிட்டுமோ அந்த விஷ்ணுவைப் பற்றி உன் குருவைக் கேட்டாயா?' என்றூர். அவன் கர்வம் சற்று குறைந்து அந்த விஷ்ணுவின் மகிமையை வினவ, உலக சிருஷ்டி முதலிய வற்றைக் கூறினுர். அதனுல் விமர்சம் செய்யும் அவா ஏற்பட்டவுடன் தத் த்வமஸி வாக்யத்தைக் கூறினுர் அவன் பின்வருமாறு விமர்சித்தான்.

P-83வேதம்-ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம-எல்லாம் பிரம்மம் என்கிறது. என் தந்தையும் ப்ரஹ்மமே ஆவார். ஆனுல் அவர் தன்னையும் ப்ரம்மம் எனக் கூருமல் என்னை மாத்திரம் பிரம்மம் என்கிறுர். அதுவும் இப்பொழுது நீ பிரம்மம் (அஸி என்பது நிகழ் காலம்) என்கிறுர். நான் இப்போது பிரம்மமாயில்லையே!

மேலும் அந்த ப்ரம்மத்தின் மகிமை எங்கே! நான் எங்கே!அவன் ஸர்வஜ்ஞன் ஸர்வகர்த்தா.நான் அற்பஜ்ஞன் அற்பசக்தியுடையவன். இருவருக்கும் ஐக்யம் எப்படிப் பொருந்தும்? என் கர்வத்தைப் போக்கவே கூறியுள்ளார். ஆகையால் ஜீவேச்வர ஐக்யம் என்ற மேல்வாரியான அர்த்தம் பொருந்தாது.

மேலும் ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்திகளிலும், நிகழ் இறந்த, எதிர்காலங்களிலும் மனோ வாக்கு காயங்களிலும் இந்த அர்த்தம் என வலியுறுத்த ஒன்பது தடவை கூறப் பட்டுள்ள ஒன்பது உவமைகளும் பேதத்தையே கூறுகின்றன அவற்றையொட்டி தத் த்வமஸிக்கும் பேதம்என்ற அர்த்தம் தான் கூறவேண்டும். உவமை 1. பக்ஷியும் மூக்குச்சியும்

பேதமுள்ளவையே 2. பல மரங்களின் ரஸமும் தேனும்-நம் ஊனக் கண்ணுக்கு ஒன்று போல் தெரிகிறதே தவிர பலவகை ரஸங்களின் பேதமிருக்கிறது. அடுத்த உவமையால் தெளிவாகும். 3. நதீ ஸமுத்ரங்கள்:- ஸமுத்ரம் கணவன். நதிகள் அவன் மனைவிகள். தம்பதிகள் இறுகத் தழுவிக் கொண்டிருப்பதால் நம் ஊனக்கண்ணுக்குப் பேதம் தெரிய வில்லை. காடகம் அத். 2 வல்லி 1 மந்த்ரம் 14. யதோ தகம் சுத்தே சுத்த மாஸிக்தம் தாத்ருக் ஏவ பவதி - ஓர் பாத்திரத்திலுள்ள சுத்தஜலத்தில் மற்றொருசுத்த ஜலத்தை ஊற்றினல் **அதுபோலவே இருக்கிறது** என்று கூறுகிறதே தவிர ஏவ**—அதாகவே ஆகிறது** எனக் கூறவில்லை. மஹா கூர்மபுராணத்தில் : இந்திரன் ஓர் அரசனின் யாகத்திற்குச் செல்லும் வழியில் வஸிஷ்டரின் ஆசிரமத்தில் தன் கமண்டலுவிலிருந்த ஜலத்தை அவர் கமண்டலுவிலுள்ள ஜலத்தில் ஊற்றி விட்டுத் தான் திரும்பி வருகையில் அதைத்தரவேண்டும் என்ருன். வஸிஷ்டரும்.

தா ஏவாபோ ததௌ தஸ்ய ஸமுனிஸ் சம்ஸிதவ்ரத:

அதே ஜலத்தைத் திருப்பித் தந்தார் என்றுளது. மஹனீயர்களுக்கு இரண்டு ஜலங்களின் பேதம் நன்கு தெரிகிறது. பாலில் நீரைக் கலந்தால் இரண்டறக் கலந்துள்ளது என்கிரேம். ஆனல் அன்னப்பறவையின் கண்ணுக்கு அவை வெவ்வேருக இருப்பது தெரிகிறது. அதனல் அது பாலை மாத்திரம் பருகிவிட்டு நீரை விட்டு விடுகிறது. அம்மாதிரி பரமஹம்ஸர்களான ஞானிகளுக்குத்தான் பேதம் தெரியும் அறிவிலிகளுக்குத் தெரியாது. ஆதர்வணம் 6–8 பார்க்க.

அதுபோல் ஸமுத்திரத்திலும் கங்கையின் வெண்மையான ஜலம், யமுனையின் கருப்பான ஜலம் முதலியன வெவ்வேருக உள்ளன. நம் ஊனக் கண்ணுக்குத் தெரியாது. கோடையில் ஓர் மேகக்கூட்டம் சமுத்திரத்திலுள்ள கங்கை

ஜலத்தை மாத்திரம் பருகி மழைக்காலத்தில் அந்த கங்கை நதி ஓடும் இடத்திலேயே சென்று வெண்மையான ஜலத்தையே பொழிகிறது. அம்மாதிரி மற்றோர் மேகக் கூட்டம் சமுத்திரத்திலுள்ள கருப்பான யமுனை ஜலத்தை அந்நதி பாயும் இடத்திலேயே பொழிகிறது. ஆகையால் தான் இவ்விரண்டு நதிகளுக்கும் ஸிதாஸிதே ஸரிதே- வெள்ளைநதி கருப்பு நதி என்றும் வேதம் கூறுகிறது. அந்த நிறம் இவைகள் பாயும் பூமியின் நிறம் முதலியவற்றால் அல்ல. ஏனெனில் எப்பொழுதுமே அனாதிகாலமாக இந் நிறங்களுடன் உள்ளன என வேதம் கூறியுளது. சில சமயங் களில் அங்கு பொழியவேண்டிய மேகம் வழிதப்பி நம் ஊரில் பொழியும் தருணத்தில் ஓர் காற்று திடீரென அடித்து அதை அதன் உரிய இடத்திற்கு அடித்துச்சென்று விடும். இதை நம் அனுபவத்தில் பார்த்திருக்கலாம்.

வாயுஸ்து தத் ப்ருதக் ஜ்ஞாத்வா, மேகே க்ருத்வா ப்ரவர்ஷதி ।

இந்தச் சமுத்திரத்தின் உப்பு ஜலத்திலேயே சில இடங் களில் குடிநீர் ஓட்டங்கள் (Fresh water currents) உள்ளன. அதைக் கப்பலில் குடிப்பதற்குச் சேமித்து வைக்கிறார்கள் என்றும் மாலுமிகள் கூறுவர். உப்புநீரும் குடிநீரும் சேர்ந் திருப்பது அற்புதமல்லவா! சமுத்திரத்திலுள்ள பல அலைகள் போல் நாமாகிற பல ஜீவராசிகள் பகவானிடம் அண்டி உள்ளனரே தவிர அலைகள் ஒருபோதும் ஸமுத்திரம் ஆகா. அதுபோல் ஜீவர்கள் பகவானாகமாட்டார்கள்.

ஜீவனாகிய நீ எவ்வாறு ப்ரம்மமாவாய்?

யதா ஸமுத்ரே பஹவஸ்தரங்கா: ததா வயம் ப்ரஹ்மணி பூரி ஜீவா: । பவேத் தரங்க: ந கதாசித் அப்தி:, த்வம் ப்ரஹ்ம கஸ்மாத் பவிதாஸி ஜீவ ॥

4 பெரிய மரத்தின் உவமை-அநிருத்தரூபியான விஷ்ணு உள்ளே இருந்தால் பசுமையுடன் உளது. அவன் வெளியேறினல் வாடிவதங்கி பட்டுப்போகிறது. பேதம் ஸ்பஷ்டம்.

5 ஆலமரமும் விதைகளும்-ஜீவர்கள் விதைகள் போல் காணப்படுகின்றனர். சூக்ஷ்மமான விதையின் சூக்ஷ்ம மான அம்சம் போல் பகவான் காணப்படுவதில்லை. பேதம் ஸ்பஷ்டம்.

6 ஜலமும் உப்பும்:- உப்பின் ரஸத்தை அறிகிறோம். உப்புக்கட்டியை பார்க்கமுடியவில்லை. பேதம் ஸ்பஷ்டம்

7 காந்தாரதேசமும் பணக்காரனும் ஒன்றல்ல. பகவான் குருபதேசத்தால் அறியப்படுபவன் அடையப்படுபவன். ஜீவன் அப்படியல்ல. பேதம் ஸ்பஷ்டம்.

8 நோயாளியும் பந்துக்களும்-பகவான் நோய் மரணம் இல்லாதவன். ஜீவன் இரண்டையும் உடையவன். ஸ்பஷ்டம் பேதம்.

9 அரசனும் திருடனும்-பேதம் ஸ்பஷ்டம்.

மேலும் பின்வரும் மற்ற சுருதிகளை அனுசரித்து தத்வ மஸிக்கும் அர்த்தம் செய்யவேண்டும்.

அதர்வணம் 2-2-5 கண்டம் 5-1

द्वासुपर्णा(र्णौ) सयुजा(जौ) सखाया(यौ) समानं वृक्षं परिषस्वजाते । तयोरन्यः पिप्पलं स्वादु अत्ति अनश्नन् अन्योऽभि चाकशीति ॥

எப்பொழுதும் சேர்ந்திருப்பவையும், நண்பர்களாயும் உள்ள இரண்டு (அழகிய சிறகுடைய) பக்ஷிகள் (ஜீவேச்

வரர்கள்) ஒரே தேகமென்ற மரத்தில் இருப்பிடமாகக் கொண்டுள்ளனர். அவைகளில் ஒன்று அந்த மரத்தின் பழ மானி (கர்மபலனை) சுகதுக்கங்களை ருசிகரமானவைபோல் அனுபவிக்கிறது. மற்றொன்று அதை உண்ணுமலே பிரகா சத்துடன் விளங்குகிறது. இது ஜீவேச்வரபேதத்தைஸ்பஷ்ட மாகக் கூறுகிறது. வேறு அர்த்தம் செய்யமுடியாது. நிரவ காசமானது. தத்த்வமஸிக்கு வேறு அர்த்தம் செய்ய முடியும், ஸாவகாசமானது. இரண்டில் நிரவகாசம் ப்ரபல மானது அதையொட்டி இதற்கு நீ அவன் போலிருக்கிறாய் என்று அர்த்தம் செய்யவேண்டும் இரண்டு என்றும் நண் பர்கள் என்றும் உண்பவன் உண்ணாதவன் என்ற பேதங்களைக் கூறும் வார்த்தைகள் உள்ளன.

ஆதர்வணம்-5-3ல் परमं साम्यमुपैति । மோக்ஷத்தில் ஜீவன் விஷ்ணுவுடன் ஸமமாயிருப்பதை அடைகிறான் என்கிறது. ஸமமாயிருக்க ஜீவேசுவரர்கள் வேறாகவிருப்பது ஐக்யம் பொருந்தாது.

அதர்வணம்—6—7

गता: कला: पञ्चदश...परेऽव्यये सर्व एकीभवन्ति ।

கதா: கலா: பஞ்சதச.....பரே அவ்யயே ஸர்வ ஏகீ பவந்தி ॥

ஜீவர்களின் 16 கலைகளின் அபிமானி தேவர்களும் கர்மாபி மானி புஷ்கரனும், ஞானஸ்வரூபியான ஜீவனும்எல்லோரும் परे अव्यये सर्वे एकी भवन्ति—உத்தமனும் அழிவற்றவனுமான விஷ்ணுவிடம் ஒன்றாகிறார்கள்என்றுளது முன்னர் ஒன்றாகா தவர்கள் இப்போது ஒன்றாகிறார்கள் என்று ஏகீபவந்தி என்ற பதத்தின் அர்த்தம் ஐக்யம் கூறுபவர்கள் மோக்ஷமடைவ தற்கு முன்னரும் ஐக்யத்தைக் கூறுகிறார்கள் அபூத தத்பாவேச்வி: என்ற இலக்கணத்திற்கு இது விருத்தமாகும் ஆகவே பொருந்தாது இதனால் ஒன்றாகிறார்கள் என்பதற்கு

ஒரே இடத்தை அடைகிறார்கள் (ஸ்தான ஐக்யம்); ஒரே அபிப்ராயமுள்ளவர்களாகிறார்கள் (மதி ஐக்யம்) விரோதமில்லாமல் ஒற்றுமையுடன் இருக்கிறார்கள் என்ற அர்த்தமே பொருந்தும். எந்த இடத்தில் ஐக்யம் பொருந்தும்? ஐக்யம் என்றால் ஒன்றாக இருத்தல் என்று அர்த்தம். முன்னர் ஒரு வஸ்து முதலில் எந்த அளவு பரிமாணங்களுடன் இருக்கிறதோ அது மற்றொன்றுடன் சேர்ந்த பின்னரும் முன் அளவு பரிமாணத்துடன் இருந்தால் ஒன்றாகிறது என்று அர்த்தம் அல்லவா! நாம் ஒரு லிட்டர் ஜலத்துடன் இன்னொரு லிட்டர் ஜலத்தையோ பாலையோ ஊற்றினால் ஒரு லிட்டர் இரண்டு லிட்டர் ஆகிறதே பெருகியிருக்கிறதே! முன்போல் ஒரு லிட்டராகவே இருந்தால் ஐக்யம் எனலாம். ஆகவே ஐக்யமில்லை நாம் பாலும் ஜலமும் ஒன்றாயிற்று எனக் கூறி வருவது தவறு.

சுமார் 7 வயதுள்ள ஸ்ரீகிருஷ்ணரின் ராஸக்ரீடையில் பல கோபஸ்த்ரீகளுடன் சேர்ந்து விளையாட பலரூபங்களை எடுத்துக்கொண்டார் அல்லவா அந்த ரூபங்கள் யாவும் 7 வயது கிருஷ்ணனின் உடலிலிருந்து வெளிவந்தன. அப்பொழுது அவன் இளைக்கவில்லை. அதே பரிமாணத்துடன் இருந்தான். ராஸக்ரீடை முடிந்ததும் அந்த ரூபங்களெல்லாம் 7வயது கிருஷ்ணனின் உடலில்சேர்ந்தன அப்பொழுது அவன் பெருக்கவில்லை. அவ்வளவு பெருத்த கிருஷ்ணன் உள்ளேவர நந்தகோபன் வீட்டு வாசற்படி பெரிதாகவில்லை

नहि रासोत्सवस्यांते बहुमूर्त्यैकतां गते ।
कृष्णे विशति नन्दस्य गृहद्वारं अवर्धत ॥

ஆகவே எந்த இடத்தில் எடுத்தால் குறையாமலும் சேர்த்தால் பெருகாமலும் இருக்கிறதோ அந்த இடத்தில் தான் ஐக்யம் எனக் கூறலாம்.

இந்த ஐக்யம் பகவான் ஒருவரிடம்தான் பொருந்தும். அவனுக்கும் அவனுடைய ரூபங்களுக்கும், அவனுடைய

குணங்களுக்கும், அவனுடைய உறுப்புகளுக்கும், அவனுடைய செய்கைகளுக்கும் ஐக்யம் உண்டு. பேதமில்லை, अद्वैतं परमार्थतः। வேதங்களின் முக்ய அர்த்தமாயுள்ள (பரமஸ்சாஸௌ அர்த்தஸ்ச பரமார்த்த:। ல்யப்லோப நிமித்த பஞ்சமீ। தம் அபேக்ஷ்ய) பகவானின் விஷயத்திலே தான் ஐக்யம் உண்டு.

இவ்வித தத்த்வமஸி வாக்யத்தின் வாதம் முன்னர் ஸ்ரீமத்வரின் ஸாக்ஷாத் சிஷ்யர்களில் நான்காமவரும் டீகாசார்யரின் குருவுமான ஸ்ரீ அக்ஷோப்யதீர்த்தருக்கும் (1350–1365) வித்யாரண்யருக்கும் (1337–1386) விஜயநகர மன்னனின் முன்னிலையில் நடந்தது. அரசன் அவ்விருவரின் வாதங்களையும் எழுதி வேதாந்த தேசிகருக்கு (1269-1377) தூதர்கள் மூலம் அனுப்பித்து அவருடைய தீர்ப்பைக்கோரினுன். அவர் அனுப்பிய தீர்ப்பு:

असिना तत्त्वमसिना परजीवप्रभेदिना ।
विद्यारण्यं महारण्यं अक्षोभ्यमुनिरच्छिनत् ॥

அஸிநா தத்த்வமஸிநா, பரஜீவ ப்ரபேதிநா।
வித்யாரண்யம் மஹாரண்யம் அக்ஷோப்ய முனிரச்சினத் ॥

பரமாத்மா ஜீவன் ஆகியோர்களின் பேதத்தைத் தெரிவிக்கிற தத்த்வமஸி என்ற கத்தியால் ஸ்ரீ அக்ஷோப்ய முனிவர், வாதம் என்ற போரில் சிறந்த (ரணே ஸாது: ரண்ய:) வித்யாரண்யரை வெட்டிவிட்டார்.

இன்னும் ஜீவேச்வர ஐக்யம் அஸுரர்களின் மதம் எனக் கீதை 16ம் அத்தியாயத்தில் கூறியுள்ளது. வேனன், ஹிரண்ய கசிபு, பௌண்ட்ரக வாஸுதேவன் முதலியோர் நானே

ஈசுவரன் என்று கூறினவர்கள் பகவானுல் கொல்லப்பட்டுத் தமஸ்ஸை அடைந்தனர் என்று பாகவதம் கூறுகிறது.

இவ்வாறு தத்த்வமணி, யுக்திகளும் உபன்யாஸமும் விமர்சமும் முற்றிற்று.

அத்தியாயம் 7. கண்டங்கள் 26. மந்திரங்கள் 51.

சென்ற அத்தியாயத்தில் ஜீவேச்வரபேத ஞானத்துடன் விஷ்ணு ஸர்வோத்தமன் என்று உபாஸிக்கவேண்டும் எனப் பட்டது. இங்கு தேவதா தாரதம்ய ஞானத்துடன் அந்தந்த தேவதைகளின் உள்ளேயுள்ள விஷ்ணுவை உபாஸித்தால் மோக்ஷம் முதலிய எல்லா புருஷார்த்தங்களேயும் தருவார் என்கிருர். அத்தியாயம் 7 கண்டம் 1 மந்திரங்கள் 5

7-1-1

अधीहि भगवः । इति ह उपससाद सनत्कुमारं नारदः । तं होवाच । यत् वेत्थ तेन मा उपसीद । ततस्ते ऊर्ध्वं वक्ष्यामि इति ॥ १ ॥

அதீஹி பகவ: । இதிஹ உபஸஸாத ஸனத்குமாரம் நாரத: । தகும் ஹோவாச ! யத் வேத்த தேன மா உபஸீத । ததஸ்தே ஊர்த்வம் வக்ஷ்யாமி இதி ॥

நாரதர் 'பூஜ்யரே! எனக்கு உபதேசம் செய்யுங்கள்' என்று கூறிக்கொண்டு ஸனத்குமாரரை அணுகிஞர். அவர் அந்த நாரதரிடம் 'நீர் அறிந்ததைச் சொல்லும். அதற்கு மேல் நான் உபதேசிக்கிறேன்' என்ருர்.

7-1-2 நாரதர்-4 வேதங்கள், 5வது வேதமான இரு இதிஹாஸங்களும் 18 புராணங்களும், பித்ருகல்பம், ராசிம்=கணிதம், தேவர்களின் லக்ஷணசாஸ்த்ரம், நிதிம்-

புதையலிருக்குமிடத்தை அறிவிக்கும் சாஸ்திரம், வாகோவாக்யம்-மூலவேதம், ஏகாயனம்-பஞ்சராத்ரம், தேவர்களால் அறியப்படும் வித்தை, பிரம்மசூத்ரம், பூதவித்யா, க்ஷத்ர வித்யா-நீதி சாஸ்திரம், நக்ஷத்ரவித்யா-ஜ்யோதிஷம் ஸர்ப்பவித்யா-தேவர்களின் பரிவாரங்களைக் கூறும் சாஸ்திரம், இவற்றை அறிந்துள்ளேன்.

7–1–3 நான் இவ்வளவு அறிந்தும், மந்த்ரவித் ஏவ அஸ்மி—சப்தராசிகளை அறிந்துள்ளேனே தவிர, ந ஆத்மவித்-பகவானை அறியவில்லை. தரதி சோகம் ஆத்மவித் – பரமாத்மாவை அறிந்தவனே துக்கத்தைக் கடப்பான். என்பதைத் தங்களைப் போன்ற பெரியோர்களிடமிருந்து கேட்டிருக்கிறேன். நான் துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருப்பதால் அதைக் கடக்கும்படி அருள்புரிவீராக.

ஸனத்குமாரர் : நாரதரே! நீர் அத்யயனம் செய்துள்ள கிரந்தங்கள் அனைத்தும் விஷ்ணுவின் குணங்களைக் கூறும் नामैव एतत् நாமைவ ஏதத்-பெயர்களே. (பிரம்ம சூ. 3–3–9); 7–1–4, 5 नाम उपास्व நாம உபாஸ்ஸ்வ-நாம-அதிகாலை 4 மணிக்கு உஷ: காலம் எனப் பெயர். அதன் அபிமானியும் அச்வினீ தேவர்களின் மனைவியுமான உஷா தேவி, மேற்கூறிய எல்லா பெயர்களின் அபிமானியாவாள் ஆகையால் நாம=நாம்னி-(7ம் வேற்றுமை) அவளிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக. பிரம்ம சூ. 4–1–4.

*N.B.*: உஷாவுக்கு முன்னர் பூமியின் அபிமானிகளான 1. புஷ்கரன் 2. சனி இருவர்களையும் சேர்க்கவும்.

அவளைக் காட்டிலும் உயர்ந்தவர் உண்டா? யார்?

7–2–1, 2

वाक् वाव नाम्नो भूयसी । ...वाचं उपास्स्व ।

வாக்வாவ நாம்ன: பூயஸீ...வாசம் உபாஸ்ஸ்வ ॥

அக்னியின் பத்னியான ஸ்வாஹா உஷாவைக் காட்டிலும் உயர்ந்தவள். வாசம்=வாசி—அவளிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–3–1, 2

मनो वाव वाचः भूयः–

மனதின் அபிமானியான பர்ஜன்யன்—மேகங்களின் அபிமானி அவளைக் காட்டிலும் உயர்ந்தவன். அவனிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–4–1, 2

सङ्कल्पो वाव मनसो भूयान्–

ஸங்கல்பத்தின் அபிமானியான மித்ரதேவன் 12 சூர்யர்களில் ஒருவன் அவனை விட உயர்ந்தவன். அவனிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–5–1, 2

चित्तं वाव सङ्कल्पात् भूयः–

உறுதியில்லாத ஞாபக சக்திக்குச் சித்தம் எனப் பெயர். அதன் அபிமானி 1. ஹோமகுண்டத்தில் கடையப்பட்டதால் உண்டான சித்தம் என்ற நெருப்பு. 2. ப்ருகு மகரிஷியும் தக்ஷப்ரஜேச்வரனின் மனைவியான ப்ரஸூதியும் ஆக மூவர் அபிமானிகள் மித்ரனைக் காட்டிலும் உயர்ந்தவர்கள். அவர்களிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–6–1, 2

ध्यानं वाव चित्तात् भूयः-

தியானத்தின் அபிமானியான த்யானம் என்ற பெயருள்ள வருணன் சித்தத்தின் அபிமானிகளான மூவரைக்காட்டிலும் உயர்ந்தவன். அவனிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–7–1, 2

विज्ञानं वाव ध्यानात् भूयः–

உண்மையை சோதிக்கும் விசேஷ ஞானமான விஜ்ஞானத்தின் அபிமானியான 1 சந்திரன், 2. சூரியன், 3. யமன், 4. சதரூபா (ஸ்வாயம்புவ மனுவின் மனைவி) ஆகிய 4 பேர்கள் வருணனைக் காட்டிலும் உத்தமர்கள். அவர்களிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–8–1, 2

बलं वाव विज्ञानात् भूयः–

பலம் இரு வகைப்படும் 1. யுக்திகளினுல் உண்டாகும் நிர்ணயிக்கும் சக்தியான மனதின் உள் பலம். 2.தேகத்தின் திடம் என்ற வெளி பலம்.இவ்விரண்டிற்கும் அபிமானியான பலம் என்ற வாயு, ப்ரவஹன்(ஐந்து பூதங்களில் ஒன்று) சந்திரன் முதலிய நால்வரைவிட உயர்ந்தவன். அவனிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–9–1, 2

अन्नं वाव बलात् भूयः–

அன்னம் இரு வகைப்படும் 1. ஞானத்தினுல் உண்டாகும் ஆனந்தம் என்ற உள் அன்னம் 2. பிரசித்தமான உணவான வெளி அன்னம். இந்த இரண்டுக்கும் அபிமானி அன்னம் என்று பெயருள்ள அநிருத்தன்,இருவித பலத்தின் அபிமானியான ப்ரவஹனைக் காட்டிலும் உயர்ந்தவன். மற்றும் 1 அநிருத்தனுக்குச் சமமான 2 ஸ்வாயம்புவமனு 3 ப்ருஹஸ்பதி 4 தக்ஷப்ரஜேச்வரன் 5 சசீ (இந்திரனின் மனைவி) 6 ரதி (மன்மதனின் மனைவி) ஆக ஐவரும் சேர்ந்து மொத்தம் ஆறு பேர்களிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–10–1, 2

आपो वाव अन्नात् भूयस्यः–

ஜலம் (ஆப:) இரு வகைப்படும். 1 ஞானம் ஆனந்தம் ஆகியவற்றால் ஏற்படும் திருப்தி (போதும் என்ற புத்தி உள்ளேயுள்ள ஜலம்). 2 த்ரவ ரூபமான வெளியேயுள்ள ஜலம். இவ்விரண்டுக்கும் அபிமானியாக தேகத்தில் வ்யாபித்துள்ளதால் ஆப: என்று பெயருடைய ஆஹங்காரிகப்ராணன் அன்னம் என்ற 6 பேர்களைக் காட்டிலும் உயர்ந்தவன். அவனிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

N. B.: ஜலம் எவ்வாறு ஆனந்தத்தை உண்டு பண்ணுகிறது என்றால் நல்ல மழை பெய்யாவிட்டால் விளைபொருள்கள் விளையா-விலைவாசி ஏறும்என மக்கள் துக்கப்படுகிறார்கள் அல்லவா! நல்ல மழை பெய்தால் அதிக விளைச்சல், ஏராளமான பொருள்கள் மலிவான விலை என்று ஆனந்தமடைகிறார்கள்.

7–11–1, 2

तेजो वाव अद्भ्यः भूयः–

ஒளி (காந்தி) இரு வகைப்படும். 1. ப்ரஜ்ஞாம் நவநவோன்மேஷ, சாலினீம் ப்ரதிபாம் விது:- மேன் மேலும் புதிது புதிதாகத் தோன்றும் (ஸ்புரிக்கும்) உள்ளேயுள்ள ஞான ஒளி. 2. வெளியேயுள்ள ஒளி. இவ்விரண்டுக்கும் அபிமானியானவர்களும் தேஜஸ் என்ற பெயருள்ளவர்களுமான இந்திரனும், மன்மதனும் ஆகிய இருவர் ஆப: என்ற ஆஹங்காரிக ப்ராணனைக்காட்டிலும் உயர்ந்தவர்கள். அவர்களிலுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–12–1, 2

आकाशो वाव तेजसो भूयान्–

ஆகாசம் இரு வகைப்படும். 1 ஸ்திரமானப்ரதிபா (7-11-1) உள்ளேயுள்ள ஹ்ருதயாகாசம் 2 பிரசித்தமான

வெளியேயுள்ளது. இவ்விரண்டுக்கும் அபிமானி ப்ரகாச மயமான உமா ஆவாள். அவளுடன் கூட 1 ஸௌபர்ணீ (கருடன் மனைவி) 2 வாருணீ (சேஷனின் மனைவி) இருவரும் சேர்ந்து மொத்தம் 3 பேர்கள் தேஜஸ் என்ற இந்திரன் மன்மதன் இவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள். அவர்களிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–13–1, 2

स्मरो वा आकाशात् भूयान्–

தடைபடாத ஞாபக சக்திக்கு அபிமானியான சிவனும், கருடனும், சேஷனும் ஆகிய மூவரும் ஆகாசம் என்ற அவர்களின் மனைவிமார்களைவிட உத்தமர்கள். அவர்களிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

N. B.: ஸ்ரீமத்வரின் தமக்கையான கல்யாணிதேவி இயற்றியுள்ள அணு தாரதம்யஸ்தோத்திரத்தில் கருட சேஷருத்திரர்களுக்கு பிறகு ஸ்ரீகிருஷ்ணரின் 8 பட்டமஹிஷிகளில் ருக்மிணி, ஸத்யபாமா என்ற இரு லக்ஷ்மீயின் ரூபங்களைத் தவிர மீதி 1 ஜாம்பவதி (ரோஹிணீ-தா. நி. 17-211) 2 காளிந்தீ 3 மித்ரவிந்தா 4 நீலா (ஸத்யா) 5 பத்ரா 6 லக்ஷணு ஆகிய 6 பேர்கள் தாழ்ந்தவர்கள், இந்த 6 பேர்களுக்குத் தாழ்ந்தவர்கள், உமா, ஸௌபர்ணீ, வாருணீ என்றுள்ளது. அதை அறிய வேண்டும்.

7–14–1, 2

आशा वाव स्मरात् भूयसी–

(ஆ-பூர்ணமான, சம் - சுகத்தையுடையவளாதலால்) ஆசா என்ற பெயருள்ளவளும் ஆசைகளின் அபிமானியுமான பாரதீயும் பிரம்ம பத்னியான ஸரஸ்வதியும் ஆகிய இருவர் ஸ்மரன் என்ற கருட சேஷருத்திரர்களைவிட உயர்ந்தவர்கள் அவர்களிடமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பீராக.

7–15–1 மு 4

प्राणो वा आशाया. भूयान्-

(ப்ர–உத்தம. ண-சுகம்) என்ற ஜீவ-ஸ்வரூப ஆனந்தத்தின் அதாவது மோக்ஷத்தின் அபிமானியான முக்ய ப்ராணனும் (எல்லோரையும் ப்ரேரிப்பவன் ஆதலால் ப்ராணன் என்ற பெயருள்ளவன்) பிரம்மாவும், பாரதி ஸரஸ்வதி இருவர்களை விட உத்தமர்கள். எல்லா உபாஸகர்களிலேயே மிகுந்த உத்தமர்கள்.

பிரம்ம சூ 3-3-35 அவருடைய மகிமைகள்:-தேர்சக்ரத்தில் எவ்வாறு ஆரங்கள் பதிந்துள்ளனவோ அவ்வாறு அவனிடம் எல்லா உலகங்களும் பதிந்துள்ளன. அவன் ப்ராணன் என்ற விஷ்ணுவுடன் போகிறான். ஜீவர்களை விஷ்ணுவிடம் சேர்ப்பிக்கிறான். தந்தை தாய் முதலியோரிடம் அவர்கள் உயிர் வாழ்வதற்காக இருப்பதால் அவனே தாய் தந்தை முதலியோராக ஆவான்.

7–15–2, 3 தாய் தந்தை முதலியோர் உயிருடன் அதாவது முக்யப்ராணனுடன் இருக்கையில், அவர்களைக் கொஞ்சம் கடுமையாகப் பேசினாலேயே, அவன் தாயைக் கொன்றவன் தந்தையைக் கொன்றவன் என்பார்கள் அவர்களை விட்டு முக்ய ப்ராணன் வெளியேறினதும் (இறந்ததும்) அவர்களை உண்மையிலேயே ஒரு அவயவத்தையோ முழுமையாகவோ கொளுத்தி விட்டால் யாரும் அவர்களைக் கொளுத்தினவன் கொன்றவன் எனக் கூறுவதில்லை.

7–15–4 எந்த அதிகாரி இந்த மகிமைகளைக் கேட்டும் மனனம் செய்தும், ஞானத்தைப் பெற்றவனோ அவன் அதிவாதி-எல்லாவற்றிலும் உயர்ந்த வஸ்துவைக் கூறினவனாவான். அவனை யாராவது 'வாயாடி, அதிக ப்ரஸங்கி' என்று சொன்னாலும், 'ஆம் அப்படியே' என்று பயமில்லாமல் கூறுவான்.
7–16–1 இந்த முக்யப்ராணனைக் காட்டிலும் உயர்ந்தவர் யார்? என்று நாரதர் கேட்கவில்லை. ஸநத்குமாரரும் முக்ய

ப்ராணனையே வெகுவாகக் கூறியதால் இவனே ஸர்வோத்த மனு? என்றால் நாரதருடைய கேள்வியைச் சேர்த்துகொண்டு பின்வருவது ஸநத்குமாரரின் பதில் என்று அறிய வேண்டும். பிரம்ம சூ 3–3–38 உபாஸகர்களின் கோஷ்டியில் முக்ய ப்ராணனே உத்தமன். அவனைவிட உயர்ந்தவரில்லை. ஆன தால் நாரதர் கேள்வி கேட்கவில்லை.

एष तु वा अतिवदति । यः सत्येन अतिवदति ।

ஏஷ து வா அதிவததி । யஸ்ஸத்யேன அதிவததி ।

து=மேற்கூறிய விசேஷத்தை அதாவது இது வேறு பிர கரணம் எனக் கூறுகிறது. ய:=யார், ஸத்யேன-ஸத்-தோஷ மற்றவரும், ய—நியாமகரும் ஆனதால் ஸத்யம் என்ற பெயரு டைய ஸ்ரீஹரியுடன், அதிவததி—உயர்ந்தவன் அதாவது ஸத்யம் என்ற விஷ்ணுவே முக்ய ப்ராணனைக் காட்டிலும் ஸர்வோத்தமன் என்று கூறுவானே, ஏஷ:—அவனே, அதி வததி-ஸமனும் அதிகனுமில்லாத ஸர்வோத்தமனைக் கூறு பவன், ஆவான். வா=வை—இது பிரசித்தம்.

सोऽहं भगवः सत्येन अतिवदानि । इति । सत्यं त्वेव विजिज्ञासितव्यम् । इति ।

ஸோஹம் பகவ: ஸத்யேன அதிவதானி இதி। ஸத்யம் த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யம் ॥ இதி ॥

பகவ:-ஹே நாரதரே! ஸோஅஹம்—அவ்விதநான், ஸத் யேன அதிவதாமி—ஸத்யம் என்ற விஷ்ணுவே எல்லோரைக் காட்டிலும் உத்தமன் என்று ஸத்யம் து ஏவ—ஸத்யன் என்ற விஷ்ணுவையே விசேஷமாக உபாஸிக்கத்தகுந்தவன் (பிரம்ம சூ 3-3-39).

பிறகு ஸனத்குமார் அவருக்கு பகவானின் மகிமைகளைக் கூறுகிறார். தாரதம்யம் முற்றிற்று.

NB:-ப்ராணனுக்குப் பிறகும் ஸத்யன் என்ற விஷ்ணு வுக்கு முன்னரும் லக்ஷ்மீயைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்

7–26–2

आहारशुद्धौ सत्त्वशुद्धिः । सत्त्वशुद्धौ ध्रुवा स्मृतिः । स्मृतिलम्भे सर्वग्रन्थीनां विप्रमोक्षः । तस्मै मृदितकषायाय तमसः पारं दर्शयति देवर्षये नारदाय भगवान् सनत्कुमारः । तं स्कन्दं इत्याचक्षते । तं स्कन्दं इत्याचक्षते ॥

इति सप्तमोऽध्यायः ॥

ஆஹார சுத்தௌ ஸத்வ சுத்தி: । ஸத்வ சுத்தௌ த்ருவா ஸ்ம்ருதி: ॥ ஸ்ம்ருதி லம்பே ஸர்வக்ரந்தீனும் விப்ரமோக்ஷ: । தஸ்மை ம்ருதித கஷாயாய தமஸ: பாரம் தர்சயதி தேவர்ஷயே நாரதாய பகவான் ஸனத்குமார: । தம் ஸ்கந்தமித்யாசக்ஷதே । தம் ஸ்கந்தம் இத்யாசக்ஷதே ॥

1ம் அர்த்தம் ஆகாரம் சுத்தமாயிருந்தால் மனஸ்சுத்தி ஏற்படும். மனச்சுத்தி ஏற்பட்டால் பகவானின் ஞாபகம் நிலைபெறும். அது நிலைபெற்ருல் அஞானம் வித்யா காம கர்மங்கள் முதலிய கட்டுகளனைத்தும் தளர்ந்துவிடும். 2ம் அர்த்தம் குருவிடமிருந்து சாஸ்திரசிரவணம் என்ற ஆகாரத்திஞல் ஞானத்தின் சுத்தி ஏற்படும். ஞானச் சுத்தியால் ஸ்திரமான பகவானின் நினைவு ஏற்படும். அதை அடைந்தால், அநாத்யவித்யா காமகர்மங்கள் என்ற பந்தங்கள் அடியோடு ஒழியும். அடி பந்தங்களிலிருந்து விடுபட்ட தேவர்ஷியான நாரதருக்கு அவித்யையின் அக்கரையான பகவத் ஸ்வரூபத்தை பகவானுன ஸனத்குமாரர் காட்டிக்கொடுத்தார். அவரை ஸ்கந்தன் எனக்கூறுவர். இதை ஸ்திரப்படுத்த மற்றுமோர்முறை கூறிற்று வேதம்.

7ம் அத்தியாயம் முற்றிற்று.

அத்தியாயம் 8. கண்டங்கள் 15. மந்திரங்கள் 62.

முன் கூறப்பட்ட உபாஸனைகளில் சில அனைவராலும் செய்யமுடியாதவை. இங்கு அனைவரும் செய்யத்தக்க உபாஸனையைக் கூறுகிறது.

8-1-1

अथ यदिदमस्मिन् ब्रह्मपुरे । दहरं पुण्डरीकं वेश्म । दहरो अस्मिन् अंतराकाशः । तस्मिन् यदंतः तदन्वेष्टव्यं । तद्वाव विजिज्ञासितव्यम् इति ॥

அத யதிதம் அஸ்மின் ப்ரஹ்மபுரே । தஹரம் புண்டரீகம் வேச்ம । தஹரோ அஸ்மின் அந்தரா காச: । தஸ்மின் யதந்த: । ததன்வேஷ்டவ்யம் । தத் வாவ விஜிஜ்ஞாஸிதவ்யம் । இதி ॥

அத-வேறு உபாஸனை கூறப்படுகிறது. ப்ரம்மபுரே-ப்ரம்மம் என்ற பூர்ணவஸ்துவான ஸ்ரீ ஹரியின் அதீனமான, அஸ்மின்-இந்த தேகத்தில், இதம்-இந்த, தஹரம்-சிறிய, புண்டரீகம்-தாமரையாகிய, யத்-எந்த, வேச்ம-வீடு, உள்ளதோ, தஸ்மின்-அதில், அந்த:-உள்ளே, ஆகாச:-ஆகாயம் இடைவெளி (உள்ளது) தஸ்மின்-அந்த ஆகாயத்தின், அந்த:-உள்ளே, யத்-எந்த வஸ்து உளதோ, தத்-அது,அன்வேஷ்டவ்யம்-தேடத்தகுந்தது. தத்வாவ-அதுவே விஜிஜ்ஞாஸிதவ்யம்-விசேஷமாக அறியத்தகுந்தது. அதைப் பற்றிய சிரவணம் மனனம் தியானம் ஆகியவற்றைச் செய்ய வேண்டும் என்று குரு சொன்னார். சிஷ்யர்கள் அதில் எந்த வஸ்து உளது? அதன் பெயரும் மகிமையும் யாவை? என்று கேட்டனர். குரு கூறுகிறார்.

8-1-3

यावान् वा अयं आकाशः । तावान् एषोऽन्तर्हृदये आकाशः ।

யாவான்வா அயமாகாச: । தவான் ஏஷோ அந்தர்ஹ்ருதயே ஆகாச: ॥ பிரம்ம ஸூ. 1-3-14 ஓம் தஹரே உத்தரேப்ய: ஓம்,

அந்தர்ஹ்ருதயே-ஹ்ருதயம் என்ற தாமரை வீட்டிலுள்ள ஆகாயத்தின் உள்ளே இருக்கும் வஸ்து, ஆகாச:-(ஆ-சுற்றினும் காசதே-பிரகாசிப்பதாலும், ஆ-சுற்றிலும் கம்-சுகத்தையும், கான்-சுபபோகங்களின் ஸாரத்தையும், அச்னுதி-அனுபவிப்பதாலும்) ஆகாசம் எனப்படும். ஸ்ரீ ஹரி (இருக்கிறார்) அவர் மகிமை:-அயம் ஆகாச:-இந்த வெளியேயுள்ள ஆகாசம் என்ற ஸ்ரீ ஹரி, யாவான்-தேசம் காலம் குணங்கள் ஆகியவற்றால் எவ்வளவு வியாப்தியுள்ளவரோ, தாவான்-வா அயம் ஆகாச:-அவ்வளவு வியாப்தியுள்ளவர் இந்த ஹ்ருதயகமலத்திலுள்ள ஆகாயத்தில் உள்ள ஆகாச!-என்ற ஹரி வேறுமகிமைகள் அனைத்திற்கும் ஆதாரமாயுளர் வான்உலகும், ஸம்ஸாரத்திலுள்ள பூவுலகும் அக்னியும் வாயுவும், சூரியனும், சந்திரனும், மின்னலும் நக்ஷத்திரங்களும் அனைத்தும் ஸம்ஸாரத்தில் இல்லாத அதாவது முக்தியடைந்த ஷெி அனைத்தும்கூட அவரை அண்டியுள்ளன.

8-2-1 அவனைப்பற்றிய ஞானம், அழியாத வைகுண்டம் முதலிய உலகங்களைத் தருவது.

स यदि पितृलोककामो भवति । सङ्कल्पादेव अस्य पितरः समुत्तिष्ठन्ति । तेन पितृलोकेन संपन्नः महीयते ॥ १

ஸ யதி பித்ரு லோககாமோ பவதி। ஸங்கல்பாதேவ அஸ்ய பிதர: ஸமுத்திஷ்டந்தி। தேன பித்ரு லோகேன ஸம்பன்ன: மஹீயதே ॥

1. ஸ:- அந்த ஞானி, அந்த மோக்ஷத்தில், பித்ரு- தன் தந்தைகளை, லோக=அவலோக - பார்க்கவேண்டும் என்ற, காம:- விருப்பமுள்ளவனாக, பவதியதி-இருந்தால், அஸ்ய ஸங்கல்பாதேவ - இவன் நினைத்த மாத்திரத்தில், பிதர:- தந்தைகள், ஸமுத்திஷ்டந்தி - அவன் முன் வந்து நிற்கின்றனர் (பிரம்ம சூ 4–4–8) தேன - அந்த, பித்ரு- தந்தைகளை, லோக (அவலோக) தர்சனத்துடன், ஸம்பன்ன: கூடி, மஹீயதே-பூஜிக்கப்படுகிறான். 2 வேதேசியடீகா:— அவன் தன் தந்தைகளுக்கு விஷ்ணு லோகம் கிடைக்க வேண்டும் அதன் பிறகு அந்த லோகம் எனக்குக் கிடைக்க வேண்டும் பிறகு அவர்களைப் பார்ப்பதால் அவர்களுடன் சேர்ந்து பூஜிக்கப்படுகிறான், என்ற அர்த்தமுள்ளது. தாய், சகோதரன், சகோதரி, நண்பன், ஆகியோரைப்பார்த்தல், சந்தனம், மாலை, அன்னம் பானம், முதலியவற்றை அனுப விக்கவேண்டும், கீதம் வாத்யம் இவைகளைக்கேட்கவேண்டும், தன் ஸ்த்ரீகளைக் காண வேண்டும் என்றெல்லாம் விரும்பிய மாத்திரத்தில் அவற்றையும் அடைகிறான். ஆகையால் முக்தர்கள் ஸத்யகாமர்கள்.

8-3-5 இந்த ஸத்ய காமத்வம் ஏன் ஸம்ஸாரத்தில் இல்லை? ஜீவஸ்வரூபம் அனாதியான லிங்கதேகத்தால் நன்கு மூடப் பட்டுள்ளது. தூக்கத்தில் தினந்தோறும் ஹ்ருதய கமலத்தின் ஆகாயத்திலுள்ள ஸ்ரீ ஹரியை. புதையல் இருக்கும் இடம் என்று அறியாமல் அதன் மீதே படுத்தும் ஸஞ்சரித்தும் வருபவனைப் போல் அறியவில்லை.

8–5–3 ச்வேதத்வீபம் என்ற உலகில் அரம், ண்யம், என்ற இரு சமுத்திரங்கள் சித்(ஞானம்)ஆனந்தம் என்ற ரஸத்தின் ஸ்வரூபமான அம்ருதத்தினால் நிறைந்துள்ளன. அமிருதத் தைப் பொழியும் அரச மரம் ஒன்றுள்ளது. ஸ்ரீ ஹரியின் அபராஜிதம் (அயோத்யா) என்ற நகரமும், தங்கமயமான கட்டிலும் உள்ளன. முக்தன் இஷ்டப்படி ஸஞ்சரிக்கலாம் (பிரம்ம சூ. 1–3–15)

8–6–1 ஹ்ருதயகமலத்திலுள்ள ஸ்ரீ ஹரியின் உபாஸனையைக் கூறுகிறது. ஹ்ருத்-இதயம், அயதே - அடைந்துள்ளான். ஆதலால் ஹ்ருதயம் என்ற பெயருள்ள ஸ்ரீ ஹரியின் ஐந்து மூர்த்திகளின் இருப்பிடமான ஐந்து நாடிகள் ஹிருதயத் தாமரையைச் சுற்றி 1 நடுவில்-ஸுஷும்ன 2 கிழக்கில்-முன் பக்கம் - நாதினீ 3 மேற்கில் பின் பக்கம் - பிங்களா 4 இடது பக்கம்-வஜ்ரிகா 5 வலது பக்கம் இடா

1ல் சிவப்பு நிறமுள்ள நாராயணன் 2ல் வெண்மை நிறமுள்ள வாஸுதேவன் 3ல் பழுப்பு நிறமுள்ள ஸங்கர்ஷணன் 4ல் மஞ்சள் நிறமுள்ள ப்ரத்யும்னன் 5ல் கருப்பு நிறமுள்ள அநிருத்தன் உள்ளனர்கள். அயர்ந்து தூங்கும் போது (ஸுஷுப்தி) ஜீவன் ஸுஷும்ன நாடியிலுள்ள பகவானை அடைகிறான். பிரம்ம சூ. 3–2–7 அவன் தன் ஸ்வரூபானந்தம் கொஞ்சம் வ்யக்தமாகி ஆனந்தமடைகிறான். விழித்து எழுந்ததும் 'இவ்வளவு நேரம் நான் சுகமாகத் தூங்கினேன்' என்கிறான் (தமோயோக்ய ஜீவனுயின் ஸ்வரூபத்திலேயே சுகமேயில்லாமல் துக்கமும் விபரீத ஞானமும் உள்ளதால் பகவான் அவனுக்குச் சுகத்தைச் சிருஷ்டித்துத் தருகிறான்) அந்த முக்தியோக்யன் தேகத்தை விடும்போது ஓம் என்ற ஹரியைச் சுமக்கும் வாயு, அந்த ஞானியுடன் ஸுஷும்ன நாடியின் கிரணங்களின் மூலம் வெளியேறி சூரியன் மூலமாக முக்தியடைவிக்கிறான். பிரம்ம சூ. 4–2–17, 18. வேறு நாடியின் மூலம் வெளியேறினல் மறு பிறப்பு உண்டு.

8–6–6 முற்றிற்று.

8–7–1 ஆசார்யனின் உபதேசம் சமமாயிருப்பினும், சிரவணம் முதலிய முயற்சிகளைச் சமமாகச் செய்தாலும் தகுதி (ஸ்வரூப யோக்யதா) உள்ளவர்களுக்கே பகவத் ஞானம் உண்டாகும் என்பதை இந்திரன் விரோசனன் கதையால் விளக்குகிறார். (பிரம்ம சூ 3–4–40)

8-7-1

य आत्माऽपहत पाप्मा । विजरो विमृत्युः विशोकः । अविजिघत्सः अपिपासः । सत्यकामः सत्यसंकल्पः । सोऽन्वेष्टव्यः स विजिज्ञासितव्यः । स सर्वांश्च लोकान् आप्नोति । स सर्वांश्च कामान् । यः तं आत्मानं अनुविद्य विजानाति । इति ह प्रजापतिरुवाच ॥

ய ஆத்மா அபஹத பாப்மா । விஜரோ விம்ருத்யு: விசோக: । அவிஜிகத்ஸ: அபிபாஸ: । ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப: । ஸோ அன்வேஷ்டவ்ய: ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய: ।ஸ ஸர்வாம்ஸ்ச லோகான் ஆப்னோதி ஸர்வாம்ஸ்ச காமான் । யஸ்தம் ஆத்மானம் அனுவித்ய விஜானாதி । இதி ஹ ப்ரஜாபதி: உவாச ॥

எந்த பரமாத்மா, பாபம் மூப்பு, இறப்பு, துக்கம், பசி தாகம் இவைகளில்லாதவனோ, நிறைவேறும் ஆசைகளையும் எண்ணங்களையும் உடையவனோ, அந்த பரமாத்மாவைத் தேடவேண்டும் அதாவது அவனைப்பற்றி சிரவணம் மனனம் தியானம் செய்யவேண்டும். யார் அந்தப் பரமாத்மாவை, அனுவித்ய-குருமுகமாக அறிந்து, விஜானாதி-அபரோக்ஷ ஞானமடைவானோ, அவன் எல்லா உலகங்களையும் எல்லா மனோபீஷ்டங்களையும் அடைவான்-என்று பிரம்மா கூறினார்.

8–7–2 இதை இருசாரார்களான தேவர்களும் அஸுரர்களும் அறிந்து, அவர்கள் சந்தோஷம். நாம் அந்தப்பரமாத்மாவைத் தேடிக் காண்போம் என்று கூறினர். தேவர்களின் பொருட்டு இந்திரனும், அஸுரர்களின் பொருட்டு விரோசனனும் (பிரஹ்லாதனின் புத்திரன் பலிச்சக்கரவர்த்தியின் தந்தை) ப்ரஸ்பரம் அன்பில்லாதவர்கள் ஸமித்

பாணீ–(ஸம் இதௌ பாணி: யயோ:) இருகைகளேயும் சேர்த்துக் கூப்பிக் கொண்டு அல்லது கைகளில் ஸமித்துக் களே எடுத்துக்கொண்டும், பிரம்மாவிடம் சென்று 32 வருஷங்கள்.

8–7–3 ப்ரம்மசர்யத்துடன் குருகுலவாஸம் செய்தனர். ப்ரம்மா 'எதை யுத்தேசித்து வசிக்கிறீர்கள்' என்று கேட்டதும் அவர்கள் 'பாபம் முதலியன இல்லாது கல்யாண குணங்களேயுடைய பரமாத்மாவை அறிய விரும்புகிறோம்! என்றனர். பகவானேத் த்வேஷிக்கும் அஸுரனுக்கு உண்மை புரியாதவாறு

य एषो अन्तरक्षणि पुरुषो दृश्यते एष आत्मा ।

ய ஏஷோ அந்தரக்ஷணி புருஷோ த்ருச்யதே ஏஷ ஆத்மா ॥

கண்ணின் உள்ளே (திவ்யத்ருஷ்டியால்) என்ற பதத்தைச் சேர்க்காமல்) காணும் புருஷன் எவனோ அவனே ஆத்மா-என்றார். விரோசனன் கண்ணில் காணும் தேகத்தின் பிரதி பிம்பமே ஆத்மா என்று தவருக எண்ணி 'பூஜ்யரே' ஜலத்திலும் கண்ணுடியிலும் காணும் பிரதிபிம்பங்களில்எது ஆத்மா? என்று கேட்டான் இந்திரனே உண்மையறிந்தும் தான் தனியாக வந்து அதிகம் அறியலாம் என மௌனம் சாதித்தான். பிரம்மா இவை எல்லாவற்றிலும் உள்ளே காண்பவன் ஆத்மாவே' என்றார்.

பிறகு ஒரு பாத்திரத்திலுள்ள ஜலத்திலும் கண்ணுடியிலும் பார்க்கச் சொல்லி என்ன தெரிகிறது? என்றார். தங்கள் தேகமே உள்ளபடி தெரிகிறது என்றனர். பிறகு ஆடையாபரணங்களால் அலங்கரித்துக் கொண்டு பார்க்கச் சொல்லி என்ன தெரிகிறது? என்றார். நன்கு அலங்கரிக்கப்பட்ட தேகங்கள் என்றனர் .

एष : आत्मा इति होवाच । एतत् अमृतम् । अभयं एतत् ब्रह्म इति ।

ஏஷ: ஆத்மா இதி ஹோவோச । ஏதத் அம்ருதம் । அபயம் ஏதத் । ஏதத் ப்ரஹ்ம இதி ।

இம்மாதிரி தேஹத்தின் அலங்காரம் என்ற குணத்துடன் கூடியதும் அம்மாதிரியே தேகத்தின் தோஷத்தால் தோஷத்துடன் கூடியதுமான, ஏஷ:-இந்தப் பிரதிபிம்பம் ஆத்மா-விஷ்ணுவாகும் எனக்கூறி காகுஸ்வரத்தால் (அவமதிப்பைக் குறிக்கும் தாழ்ந்த குரலுடன் P.62 N.B. பார்க்கவும்) இது எவ்வாறு மரணமற்றதும், பயமற்றதும் குண பூர்ணமான பரமாத்மாவாகும என்று அர்த்தமாகும்படி கூறினர். ஆனல் விரோசனன் ஏதத் அம்ருதம்-இதுவே இந்தப் பிரதிபிம்பமே மரணமற்றது. பயமற்றது பிரம்மம் ஆகும் என்று அர்த்தம் கொண்டு தேகமே ஆத்மா என்ற விபரீதஞானத்துடன் விடைபெற்றுச் சென்றான். இந்திரனும் சென்றான்.

அப்பொழுது பிரம்மா அவர்களிடம் பரமாத்மாவைக் காணுமலும் அவனைப்பற்றி அறியாமலும் செல்கிற இவ்விருவர்களிடமிருந்து எவர்கள் தேவர்களோ, அஸுரர்களோ, ஏதத்-இந்த ரஹஸ்ய உபதேசத்தைப் பெறுவார்களோ, (ரஹஸ்யார்த்தத்தை அறியார்களோ) அவர்கள் தோல்வியை அடைவார்கள் என்றார்.

விரோசனன் நேரே அஸுரர்களிடம் சென்று அவர்களுக்கு பிரதிபிம்பமே பரப்ரம்மம். தேகத்தை அலங்கரிப்பதாலேயே அது பிரம்மமாகிறது. நம் தேகமே பூஜிக்கத் தக்கது. உபசரிக்கத்தக்கது. தேகத்தையே பூஜிக்கிறவன் உபசரிப்பவன், இவ்வுலகையும் மறுஉலகையும் இரண்டையும் அடைகிறான். ஆகவே இன்று இவ்வுலகில், தான

மின்றியும் சிரத்தையின்றியும், யாகமின்றியும் தன் போகங்களில் ஈடுபட்டுள்ளவனே, ஐயோ! இவன் அஸுரஸ்வபாவமுள்ளவன், கஷ்டம் என்று ஞானிகள் கூறுவர். இதுவே அஸுரர்களின் உபநிஷத்து என்ருன். விரோசனனால் இவ்வாறு உபதேசிக்கப்பட்ட அஸுரர்கள் இன்றளவும் ப்ரேத தேகத்தை, பிக்ஷயா-அன்னபானங்களினாலும், சந்தனம் மாலை முதலியதாலும் ஆடையாபரணங்களாலும் அலங்கரித்து மேன்மைப்படுத்துகிருர்கள். அதனாலேயே இரு உலகங்களையும் அவ்வாறு அலங்கரிப்பவர்கள் அடைகிருர்கள் நம்புகின்றனர். 8-8-5 முற்றிற்று.

8-6-1 இந்திரனே தேவர்களிடம் போகவில்லை. வழியில் பிரதிபிம்பம் ஆத்மா என்றதில் ஸந்தேஹத்தைப் போக்க பிரம்மாவிடம் ஸமித்துடன் போனன். அவன் மறுபடியும் 32 வருஷங்கள் (8-9-3) வாசம் செய்து அவர் ஸ்வப்னத்தை பற்றிக் கூறியதில் ஸந்தேகத்தைப் போக்க மறுபடியும் 32 வருஷங்கள் (8-10-4) குருகுலவாசம் செய்து, அவர் அயர்ந்த தூக்கத்தைப்பற்றி உபதேசித்ததில் ஸந்தேகத்தைப் போக்க மறுபடியும் 5 வருஷங்கள்(8-11-3) ஆக 101 வருஷங்கள் குருகுல வாசம் செய்து தத்வஞானத்தை அடைந்தான். அதாவது.

8-12-1 i. பரமாத்மா விழிப்பு கனு அயர்ந்த தூக்கம் ஆகிய மூன்றையும் ஏற்படுத்துபவன். ii ஜீவனுடைய ஸ்வரூபதேசம் அனுதிநித்யமானது லிங்கதேகம் ஸ்தூலதேகம் ஆகியவற்றின் ஸம்பந்தத்தால் ஜனன மரணமுடையவன். பகவானுக்கும் லக்ஷ்மீக்கும் ஸ்வரூபதேகம் ஒன்றே- வேறு தேகங்களில்லாததால் அசரீர: எனப்படுகிருர்கள். அப்ரம்-மேகம் என்ற பிரம்மா, ஸ்தனயித்னு கர்ஜிக்கும்-மேகம் என்ற ஸரஸ்வதி' வாயு வித்யுத்-மின்னல் என்ற பாரதீ. ஆகிய மூவரும் (மற்ற அனைவரும் லிங்கதேகம் ஸ்தூலதேகம் உள்ளவர்களாயினும் அவர்களுக்கு தேகாபிமானமில்லை. ஆகையால் அசரீரா: தேகமில்லாதவர்களே. iii பகவா அடையும் ப்ரியம் வாயு ப்ரம்மா இருவர்க்கும் உ

ஸரஸ்வதி பாரதி இருவர்க்கும் ஷை ப்ரியமும் தங்கள் கண வர்களின் ப்ரியமும் உண்டு. ஆயினும் மற்றவர்களால் அடையும் ப்ரியம் இல்லாதவர்களாதலால் பிரியமில்லாத வர்களே. முக்தர்களனைவரும் பகவத் ப்ரஸாதத்தால் தங் களுக்குரிய போகங்களை அனுபவிக்கின்றனர், அவர்கள் பரம் ஜ்யோதி என்ற பகவானை அடைந்து தத்தம் ஸ்வரூப தேஹத்துடன் வெளிவந்து பகவானின் லோகத்தில் சாப் பிட்டுக்கொண்டும், விளையாடிக்கொண்டும் ஸ்த்ரீகளுடனும் வாஹனங்களுடன் தன்னுடன் மோக்ஷமடைந்தவர்களு டனும் (ஜ்ஞாதிபி;) முன்னர் முக்தியடைந்தவர்களுடனும் (அஜ்ஞாதிபி:) சந்தோஷத்துடன் ஸஞ்சரிக்கிறான் (பிரம்ம சூத். 1-3-19; 2-3-34).

8–15–1

இதை பகவான் பிரம்மாவுக்கும், பிரம்மா ஸ்வாயம்புவ மனுவுக்கும் அந்த மனு பிரஜைகளுக்கும் உபதேசித்தனர். மோக்ஷத்தை விரும்புகிறவன் குருவிடம் வேதங்களை அத்யயனம் செய்து முறைப்படி குருவுக்குப் பணிவிடை செய்துவிட்டுத் திரும்பிவந்து க்ருஹஸ்தனுகி வேதங்களைச் சுத்தமான இடத்தில் படித்துக்கொண்டு தர்மகாரியங்களைச் செய்துகொண்டு பகவானிடம் எல்லா இந்திரியங்களையும் நிலை நிறுத்தி, சிற்றின்பங்களில் செல்லாமல் தடுத்து, சாஸ் திரங்களில் விதிக்கப்பட்ட ப்ராணி ஹிம்சை (யாகம்) தவிர மற்ற ப்ராணிகளை ஹிம்சிக்காமல் ஆயுள் முழுவதும் இருந்தால் பகவானின் லோகத்தை அடைகிறான்.

न च पुनरावर्तते । न च पुनरावर्तते ।

நச புனராவர்த்ததே। நச புனராவர்ததே॥

மீண்டும் இந்த ஸம்ஸாரத்திற்கு வருவதில்லை. (உறுதிப்படுத்த 2 முறைகூறப்பட்டது).

आप्यायन्तु ...... शांतिः ॥

ஆப்யாயந்து.....சாந்தி: ॥

ஆரம்பத்தில் பார்க்கவும்.

इति श्रीछान्दोग्योपनिषत्सारः संपूर्णः ॥

இதி ஸ்ரீ சாந்தோக்யோபநிஷத் ஸார: ஸம்பூர்ண:॥

ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணமஸ்து. ஓம் தத் ஸத்

பிழைதிருத்தம். P. 58 N.B. சுலோகம்.

பரஸ்மாத் உத்தமம் ப்ரோக்தம், பரோ இதி தத:பரம் ।
பரோவரம் பரம் தஸ்மாத், ப்ரோக்தம் பாரோவரீயகம் ॥

2 P. 98 வரிகள் 12-13. மின்னலில் ப்ரத்யும்ன அநிருத்தன்.
3 P. 110 வரி 8: (ம்வதேசீய டீகா—புத்திரற)
4 P. 111 வரி 20 விவேகம் லபந்தே

